டிசம்பர் '93
ஸ்ரீமுக - மார்கழி

# அமுதசுரபி

எங்கள் தமிழ் மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்

மலர் : 46
இதழ் : 8



## 1 ரூபாய் கூடுதல்!

'46 ஆவது தீபாவளி இலக்கிய மலரை மிகச் சிறப்பாகத் தயாரித்து வெளியிட்டுள்ளீர்கள். உண்மையிலேயே அமுதசுரபி மலர் சிறந்த கலைக் கருவூலம்' என்று பார்த்தவர் - படித்தவர் அனைவரும் பாராட்டி மகிழ்கிறார்கள்.

தமிழ் அன்பர்களின் புகழ் மாலையை அடக்கத்துடன் தலை வணங்கி ஏற்றுக் கொள்கிறோம்.

தீபாவளி ஒரு தேசியத் திருவிழா. தமிழ் நாட்டில் பட்டாசு மத்தாப்புவுடன் புதிய ஆடை, புதிய இனிப்புகளுடன் தீபாவளி மலரைப் படிப்பதும் குடும்பப் பண்பாகிவிட்டது.

வண்ணச் சித்திரங்கள் அதற்கு விளக்கம், கவிதைகள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், புதிய கோணத்தில் சிறுகதைகள் என்று எழுத்தாளர் களும், ஓவியர்களும் படைத்து தீபாவளி மலரை இலக்கிய மணம் வீசச் செய்கிறார்கள். ஒரு மயனால் கட்டப்படும் மாளிகை அன்று தீபாவளி மலர்; பல கலைஞர்களின் உழைப்பு.

தீபாவளி மலர் திடீரென உருவாவதில்லை. 'அமுதசுரபி'யின் ஒவ்வோர் இதழும் அடித்தளம் அமைக்கிறது.

அடக்க விலையைவிடக் குறைத்து விற்று இழப்பை விளம்பர வருமானம் மூலம் சரிசெய்வதுதான் பத்திரிகைத் தொழிலின் விசித்திரமான பொருளாதாரம்!

'அமுதசுரபி'யின் 1948 ஆம் ஆண்டின் விற்பனை விலை எட்டணா (ஐம்பது பைசா). 45 ஆண்டுகளுக்குப் பிறகு 20 பங்கு விலைவாசி உயர்ந்திருக்கிறது. ஆனால் அமுதசுரபி விலையை 10 ரூபாய்க்கு விற்க முடியுமா? பொருள் இழப்பின் அளவைக் குறைத்தால்தான் இலக்கியப் பணியைத் தொடர முடியும்.

திரைப்படத்தை இருபது ரூபாய் கொடுத்துப் பார்க்கத் தயாராயிருக்கும் தமிழன்பர்கள் பத்திரிகையைப் பத்து ரூபாய் கொடுத்து வாங்கத் தயாராக இல்லை. ஆனால் அமுதசுரபி வாசகர்கள் ஆயத்தமாயிருப்பார்கள் என்று எமக்குத் தெரியும். மற்ற மலர்கள் 40 ரூபாய் என்று விலை வைத்தபோது நாம் ரூ. 35க்கு விலை வைத்தோம். வாசகர்கள் 'ஏன் ஏன்?' என்று கேட்டுத் தாங்கள் ரூ. 40 அல்லது 50 கொடுத்து வாங்கத் தயார் என்று தெரிவித்தார்கள்.

'அமுதசுரபி' வாசக அன்பர்களின் குடும்ப வரவு செலவில் அதிகச் சுமை ஏற்றாமல் ஒரு ரூபாய் மட்டுமே கூடுதலாக்க முடிவு செய்துள்ளோம்.

1994 ஜனவரி இதழிலிருந்து 'அமுதசுரபி' இதழின் விலை ரூ. 6. அன்பர்கள் ஆதரவு குறையாது என்று நம்புகிறோம்.

19.12.93 காலை 9.30 மணிக்கு மயிலை பாரதீய வித்யாபவன் அரங்கில் ஆண்டுதோறும் அமுதசுரபி பல நிறுவனங்களுடன் இணைந்து அளிக்கும் இலக்கியப் பரிசளிப்பு விழா நடைபெறும். சிறுகதை, காப்பியம், பாரதி இலக்கியம், புதினம் - இவற்றில் சிறந்தவற்றிற்கு அன்று பரிசு அளிக்கப்படும். இதையே அழைப்பாக ஏற்று தமிழ் மக்கள் வருகை தந்து எம் இலக்கியப் பணிக்குத் தொடர்ந்து ஆதரவு தர வேண்டுகிறோம்.

● பதிப்பாளர் : ஏ.வி.எஸ்.ராஜா ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்.,
● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ● இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார்

மேலட்டையில் : இசைஞானி, மகன் கார்த்திக் ராஜா, திருமதி இளையராஜா — வண்ணப்படங்கள் : யோகா

1994 ஜனவரி இதழிலிருந்து

உங்கள்

அமுதசுரபி மாத இதழ் விலை

ரூ 6 / -

ரு 1 / - விலை கூடுதலுக்கு – அமுதசுரபி வழங்கும் இலக்கிய விருந்து
பல்லாயிரம் மதிப்புக் கூடுதலாகும்.
ஆண்டுச் சந்தா ரு. 72 / -

# மனம் விட்டுப் பேசுவோம்

'அமுதசுரபி – தீபாவளி மலர் 93'யும், இதழையும் பாராட்டிக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கிற நேரத்தில் டிசம்பர் இதழை முடிக்கிற பணி.

எல்லா வாசகர்களின் கருத்துகளையும், பாராட்டுகளையும் அப்படியே பிரசுரிக்க ஆசை தான். ஆனால், அது நடக்கிற காரியமாக முடியாதபோது – ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு பருக்கை சாட்சி என்பது அனைவரும் கண்ட உண்மை என்பதால், தமிழக சட்ட அமைச்சர் மாண்புமிகு கே.ஏ. கிருஷ்ணசாமி அவர்கள் எழுதிய கடிதத்தை அப்படியே வெளியிடுவதில் பெருமை அடைகிறோம்.

'தீபாவளி மலர் 93' கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். கவிதைகள், சிறு கதைகள், கட்டுரைகள், வண்ண ஓவியங்கள், முகப்பு ஓவியம் இவைகளெல்லாம் உள்ளடக்கிய ஒரு சிறந்த வண்ண மலராக விளங்குகின்றது.

'அமுதசுரபி' ஆற்றி வருகின்ற தமிழ்த் தொண்டில் இந்த ஆண்டு 46ஆவது தீபாவளி மலராக வருவது கண்டு மிக்கப் பெருமை கொண்டேன். சிறந்த எழுத்தாளர்களுடைய படைப்புகளெல்லாம் உள்ளடக்கியுள்ள 'அமுத சுரபி தீபாவளி மலர்' என் போன்ற தமிழ் மனம் படைத்தவர்களுக்கு சிறந்த அன்பளிப்பாகும்.

மேலும் மலரையும் இதழையும் பாராட்டிய வாசக நெஞ்சங்கள் : டாக்டர் ஜே.ஜி. கண்ணப்பன் சென்னை – 4, திருமதி. ராஜலட்சுமி சுந்தரம் சென்னை – 18, தாமரை செல்வி சுந்தர் திருபுவனம், புதுவை நித்திலன் பாண்டிச்சேரி, இதயகீதம் அ. இராமானுஜம் சென்னை – 75, திருமதி சுகந்தி நாராயண் மதுரை – 11, திருமதி ராஜம் கிருஷ்ணன் சென்னை – 59, டாக்டர் இளங்கம்பன் பழனி பாவலர் சாரதிதாசன் திருச்சி, திரு. தமீம் நவாஷ் கம்பம் – 16, பா. தமிழரசி, காஞ்சனா கடலூர்-1, திரு. வெங்கடேசன் தான்தோனின்றிமலை, திரு. அமுதவன் திருவில்லிப்புத்தூர், திரு.கே. ஜகந்நாதன் சேலம் –15, திரு. சு. பாலாஜி பம்பாய், கவிஞர் நெல்லை ஆ. கணபதி சென்னை – 15, திரு. கோவூர் இசைதாசன் மாங்காடு, திரு. வில்லழகன் (சிம்மவாஹினி), சென்னை – 30, திரு.என்.கே. கிருஷ்ணமூர்த்தி பாண்டிச்சேரி, திரு. தி. இரவி கிருஷ்ணகிரி, கவிஞர் பெரி. சிவனடியான் விழுப்புரம், திரு. கல்வே எஸ். சதாசிவம் பாண்டிச்சேரி, டாக்டர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன் சென்னை– 16, பாவலர் மோத்திதாசன் சென்னை – 1.

இன்னும் நிறைய கடிதங்கள் வந்து குவிந்து கொண்டேயிருக்கின்றன. கால அவகாசமும், இடம் பற்றாக்குறையும் முன்நிற்பதால் விடுபட்ட வாசகர்களின் பெயர்களுக்கு அன்பு வாசகர்கள் மன்னித்தருளவும்.

நன்றி. வணக்கம். அடுத்த மாதம் சந்திப்போம்.

# அறுபத்து நான்காவது நாயனார்



'இலக்கியமாமணி'
பொன். பரமகுரு

தொண்டை நாட்டிலே வடார்க்காடு மாவட்டத்திலே வேலூருக்கு அருகே பாலாறுக்கு வடபாலுள்ள காங்கேய நல்லூரில் தவத்திரு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் நாடு உய்ய, மக்கள் உய்ய, சமூகம் உய்ய, இந்து மதம் உய்ய, சமய நெறிகள் உய்ய தெய்வத் திருவருளால் ஆகஸ்ட் 27, 1906 பராபவ ஆண்டு, ஆவணித் திங்கள், ஒன்பதாம் நாள், ஷஷ்டி திதி, சுவாதி நட்சத்திரத்தில் அவதரித்தார்கள். தந்தையார் சிவத்திரு மல்லைய தாஸ் பாகவதருக்கும், தாயார் கனகவல்லி அம்மையாருக்கும் நான்காம் திருமகனாய் உதித்தார்கள்.

மூன்று வயது முதல் தந்தையார் எழுத்தறிவித்துக் கல்வி கற்பித்தார். ஐந்து வயதிலேயே எல்லாவித நூல்களையும் சரமாரியாகப் படிக்கும் ஆற்றல் வந்துவிட்டது. பத்து வயதிலேயே மேடையேறிப் பேசினார்கள். பக்திச் சொற்பொழிவாளரான தமது தந்தையாரின் விரிவுரையில் பின்னணி பாடினார்கள். எட்டு வயதிலேயே வெண்பா பாடுகின்ற ஆற்றல் அமைந்தது. பன்னிரண்டு வயதிலேயே பதினாயிரம் பாடல்கள் மனப்பாடம் ஆயின. பள்ளிக்கூட நிழலிலும் ஒதுங்காதவர்கள், சென்னை ஆனைக்கவுனியில் இருந்த தென்மடம் வரதாச்சாரியாரிடம் வீணை கற்றார்கள். இசை, இலக்கணம், இலக்கியம், திருப்புகழ், சரித்திரம் ஆகிய அனைத்துக் கலைப் பயிற்சியிலும் தேர்ச்சி பெற்றுத் தமக்கென ஒரு நெறியை வகுத்துக் கொண்டார்கள்.

ஐந்து வயதில் திருவண்ணாமலையில் சிவலிங்கதாரணம் செய்துகொண்டார்கள். பின்னர் தந்தையாரிடமே சடக்கர மந்த்ரம் உபதேசம் செய்து கொண்டு, பிறகு மதுரை திருப்புகழ் சுவாமிகளிடம் சூக்கும சடக்கர மந்த்ரத்தை உபதேசம் செய்து கொண்டார்கள். அடுத்து பழநி ஈசான சிவாச்சாரிய சுவாமிகளிடம் விதிப்படி நிர்வாண தீட்சை செய்து கொண்டார்கள்.

பத்தொன்பதாம் வயதில் மாமா மகள் அமிர்த லட்சுமியை திருமணம் செய்து கொண்டார்கள். இந்தத் தம்பதிக்குக் குழந்தை இல்லை. அதனால் வாரியார் சுவாமிகள் உலக மக்களையே தமது குழந்தைகளாகப் பாவித்தார்கள். திருப்பராய்த்துறை இராமகிருஷ்ண குடில் நானூறு அநாதைக் குழந்தைகள் அடங்கிய நிறுவனத்திற்கு சுவாமிகள் இருபத்தைந்து லட்சம் ரூபாய்க்குமேல் நிதி திரட்டிக் கொடுத்திருக்கின்றார்கள். பல ஏழை மாணவர்கட்கும் விளம்பரமின்றி பண உதவி செய்துள்ளார்கள்.

தந்தையார் முருக பக்தர். அதனால் அடிப்படையிலேயே சுவாமிகளுக்கும் முருகன் மீது பக்தி அதிகமானது. அதிலும் வயலூர் முருகன் கோயில்மீது அதிகமான ஈடுபாடுண்டு. "கடந்த ஐம்பது வருடத்துக்கும் மேலாக, தவறாமல் முருகப் பெருமானுக்கு பூஜை செய்து வந்திருக்கிறேன். ஒரு நாள்கூடத் தவறியதில்லை. உடல் நிலை எப்படி இருந்தாலும் குளித்துப் பூஜை செய்யும் நிலையில் முருகப்பெருமான் என்னை வைத்திருக்கிறார்" என்று பெருமை கலந்த பணிவுடன் அவர்கள் சொல்லுவது வழக்கம்.

என்றென்றும் வற்றா அருட் பெருஞ்செல்வத்தை நமக்குக் கிருபை கூர்ந்து ஆனந்தமாய் வாரி வழங்கியவர்கள்தான் நமதரும் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள். அறிவுச் சுடராய், அருளின் ஒளியாய், அன்பருக்கு வழிகாட்டியாய், அனைவருக்கும் மெய்ஞ்ஞான தீபமாய் விளங்கியவர்கள். அவர்கள் வேலை வணங்குவதே வேலையாய், தெய்வத் திருத்தொண்டே பணியாய், பண்பே உருவாய், அன்பே உள்ளமாய், கருணையே வடிவமாய் விளங்கிய ஒப்பற்ற சத்தியசீலர். சித்தத்தை சுத்தமாக வைத்து, சிந்தையில் நான் என்ற அகந்தை நீக்கி, தான் தனது என்ற சுயநலம் போக்கி, 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என நமக்கெல்லாம் நல்லறத்தையும், நீதியையும், அருள் நெறியையும் உவப்புடன் உபதேசித்து வந்தார்கள்.

எளிதிலே புரியாப் பல அரிய பெரிய வேதாந்தக் கருத்துகளை, தத்துவ உண்மைகளைக் கற்றவர் கல்லாதவர், வாலிபர், வயோதிகர், வசதியுள்ளவர், வசதியற்றவர், ஆண் பெண் அனைவரும் விரும்பிக் கேட்டு எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம், அன்றாட உலக வாழ்க்கை உவமைகளுடன் சிரிக்கச் சிரிக்கச் சொல்லி விளங்கவைக்கும் சிறந்த ஆற்றல் மிக்கவர்கள். அவர்கள் நாத்திகம் போக்கி, ஆத்திகம் பெருக்கி, மக்கள் அனைவரும் ஆண்டவன் அருளைப் பெறச் சீரிய அறத்தொண்டாற்றினார்கள்.

"கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிந்து" நம்மையெல்லாம் அவர்கள் நல்வழிப்படுத்தினார்கள். தெய்வ மணம் கமழும் அறநெறிகளை உடலுருக, ஊனுருக, உள்ளமுருக ஆடிப்பாடி நடித்து விளக்கி, நன்குணர்த்தி நம்மை உய்வித்தார்கள். அடக்கம், அறம், கற்பு, கருணை, தொண்டு, தியாகம் போன்ற சீரிய நற்பண்புகளான வித்துகளை நம் உள்ளமாகிய வயலில் விதைத்து, பக்தியெனும் அமுத நீர் பாய்ச்சி, மும்மலமாகிய களையெடுத்து, ஞானமெனும் உரமிட்டு, முக்தியாகிய நற்பயிரை விளைவிக்கப் பாடுபட்டார்கள். தமிழகம் எங்கும் இடைவிடாது இன்னிசை விரிவுரை ஆற்றி, மக்களிடையே அன்பு, பக்தி, தொண்டு ஆகிய நன்னெறிகளைப் பரப்பினார்கள். "இருண்ட கல்லையும் பொன்னிறமாக்கிய தசரதன் இரதம்" போல் கல் போன்ற நெஞ்சத்தவரையும் கனிய வைக்கும் காந்த சக்தி படைத்த அவர்கள் ஒரு மாபெரும் தெய்விகப் புரட்சிமணியாகத் திகழ்ந்தார்கள்.

அநுபூதிச் செல்வராகிய அமரர் அருணகிரிநாதர் அருளிய திருப்புகழுக்கு உரை காண்பது அரிதினும் அரிதாகும். ஆயினும், அந்த கந்தவேளை எந்த வேளையும் தியானித்து, குன்றுதோறும் ஆடும் குமரக் கடவுளை மெய்யன்பினால் கசிந்துருகிப் பாடி, கந்தனின் கருணை துணைபுரிய, திருவருளும் குருவருளும் உதவி செய்ய, திருப்புகழுக்கு வெகு அற்புதமாய் உரை எழுதியுள்ளார்கள் நம் வாரியார் சுவாமிகள். அவர்கள் இளமையிலிருந்தே திருப்புகழைப் பாராயணம் செய்தவர்கள். பல்லாண்டு கால மாய்த் திருப்புகழ் தத்துவார்த்த விரிவுரை புரிந்தவர்கள். ஆகவே, தமது ஆழ்ந்த கல்வியாலும், அளவிலா அனுபவத்தாலும், உள்ளாழங்காண முடியாத் திருப்புகழை அனைவர்க்கும் எளிதில் புரியும் வண்ணம் இனிய நடையில், திருவருளின் இன்பச் சுவையும், அருள்நெறியின் ஆன்மச் சுவையும் மிளிர, சொல்லுக்குச் சொல் பதவுரையும், பொழிப்புரையும், கருத்துரையும், விரிவுரையும் வெகு அழகாகவும், தெளிவாகவும் வழங்கியுள்ளார்கள். அதற்காக அவர்களை எத்துணை பாராட்டினாலும் தகும்.

கம்பீரமான உருவம், செக்கச் சிவந்த திருமேனி, அரையில் பஞ்சகச்சம், மார்பில் உருத்திராட்ச கண்டி, நெற்றி நிறையத் திருநீறு, எப்போதும் முருகனைத் துதிக்கும் உள்ளம், தமிழகத்தில் மூலை முடுக்குகளில் எல்லாம் சென்று இறைவன் புகழ்பாடும் வாய், நாள் தவறாமல் செய்யும் பூஜை, மக்கள் வெள்ளத்தில் முழங்கும் சிம்மக் குரல் இவை யாவும் ஒருங்கிணைந்து அமைந்த ஒப்பற்ற மாமனிதர் திருமுருக வாரியார் சுவாமிகள்.

அருள்மொழி அரசு, பிரசங்கச் சக்கரவர்த்தி, நடமாடும் பல் கலைக்கழகம், ஞானத்தின் திருவுரு, திருப்பணித் தொண்டர் போன்ற பல புகழாரப் பட்டங்களைப் பெற்ற அவர்களிடம் எனக்குக் கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேல் நன்கு நெருங்கிய பழக்கமுண்டு. அவர்களுடன் முதன்முதலாக எனக்கு நெருங்கிப் பழகும் வாய்ப்பு 1961ஆம் ஆண்டு ஏற்பட்டது. அப்போது நான் தென்னார்க்காடு மாவட்டக் காவல் கண்காணிப்பாளராகக் கடலூரில் பணியாற்றினேன். சிதம்பரத்தில் சுவாமிகளின் சொற்பொழிவுக்குத் தலைமை தாங்கினேன். கூட்டம் முடிந்ததும் கடலூர் செல்ல வேண்டிய சுவாமிகளை என் காரில் அழைத்துச் செல்லும் அரிய பாக்கியம் பெற்றேன். அப்போது எங்கள் குடும்பத்தைப் பற்றியும், குறிப்பாக என் தந்தையார் தெய்வத்திரு பொன்னையா சுவாமிகளைப் பற்றியும் முழு விவரமும் கேட்டறிந்தார்கள். அன்று வித்திட்ட எங்கள் நட்பு ஆழ்ந்த வேரூன்றி ஆலமரமாய் ஓங்கி வளர்ந்தது. மறு ஆண்டிலிருந்து இருபது ஆண்டுகள் கரிவலம் வந்த நல்லூரில் நடக்கும் எங்கள் வருடாந்தர குருபூஜை விழாவில் மனமுவந்து கலந்து இன்னிசைச் சொற்பொழிவு ஆற்றினார்கள்.

கருவையில் பஞ்சமூர்த்தி சமாதி திருக்கோயில் திருப்பணி பொதி பொன்மதி சபையினரால் நடைபெற்று வருகிறது. அதற்காக ஓர் அரிய வேண்டுகோள் சுவாமிகள் தயாரித்து அளித்தார்கள். அதில் குறிப்பாக அவர்கள், "செல்வம் இருந்தால் தேவாலயங்கள் பலவற்றைத் தோற்றுவிக்கலாம். ஆனால் ஒரு தெய்வ ஞானியின் சமாதிக் கோயிலைத் தோற்றுவிக்க முடியாது. செந்தமிழ் மணக்கும் ஞானபூமியாகிய கரிவலம் வந்த நல்லூரில் தெய்வத்திரு பொதி சுவாமிகள், பொன்னையா சுவாமிகள் கோமதித்தாய் அம்மையார் அவர்களது சமாதித் திருக்கோயில்கள் அமைந்திருக்கின்றன. இங்கே அதற்கான திருப்பணி தொடங்கியுள்ளது. மண்ணில் ஒரு விதை விதைத்தால் பல்லாயிரம் காய்ப்பதுபோல், இத் திருப்பணிக்கு ஒன்று உதவினால் ஆயிரம் ஆயிரமாக நலங்கள் பெறுவர். ஆதலால் இத் தெய்விகப் பணிக்குக் காதலால் எல்லோரும் உதவி, இகபர நலன்களைப் பெறுமாறு வேண்டுகிறோம்" என வெகு அருமையாக எழுதியருளினார்கள். மற்றொரு சமயம், "கருவையில் திருப்பணி நன்கு நடைபெறுவது பற்றி மகிழ்ச்சி. எதிர்காலம் அது ஒரு சிறந்த தலமாக விளங்கும். அன்னதானத்தின் சிறப்பு அளவிடற்கரியது", என்று ஆசி கூறினார்கள்.

1966ஆம் ஆண்டு நான் புதுவை ஐ.ஜி.யாகப் பணிபுரிந்தேன். அப்போது திருமுருக வாரியார் சுவாமிகளின் இன்னிசை விரிவுரையைப் பத்து தினங்களுக்குப் புதுவையில் ஏற்பாடு செய்திருந்தோம். அப்பத்து நாள்களில் புதுவை நகரமே திருவிழாக் கோலம் பூண்



டிருந்தது. அச் சொற்பொழிவுத் தொடரின் இறுதி நாளன்று நாங்கள் சுவாமிகளது அறுபது ஆண்டு நிறைவு மணிவிழாவை வெகு விமரிசையாகக் கொண்டாடினோம். "வினை விதைத்தவர்கள்" எனும் என் நாடக நூலுக்கு மனமுவந்து வாரியார் சுவாமிகள் அணிந்துரை அளித்தார்கள். அதில் அவர்கள், "இந்த நாடகங்களில் வரும் நிகழ்ச்சிகள் அத்தனையும் உண்மையில் நிகழ்ந்தவை. பொன். பரமகுரு அவர்களின் தந்தையார் தவத்திரு பொன்னையா சுவாமி அவர்கள் ஓர் இல்லற ஞானி. சிவயோக நெறியில் நின்றவர். அவருடைய தவப்புதல்வராகிய பொன். பரமகுரு அவர்கள் பண்பு மிகுந்தவர். இந்த நூல் அவருடைய கைவண்ணமாகத் திகழ்கின்றது. இது உய்வண்ணத்தைத் தரும்", எனச் சிறப்பாய் எழுதினார்கள்.

சென்னையில் 1981ஆம் ஆண்டு ஜனவரி மாதம் என் மூத்த மகன் செல்வன் பொன்னுராமின் திருமணம் நடந்தது. அதற்கு அருமையாகத் திருமண வாழ்த்து அனுப்பியதுடன், இன்னிசைச் சொற்பொழிவும் ஆற்றி, மணமக்களை நேரில் வாழ்த்தி அருளாசி புரிந்தார்கள். பின்னர் அத்திருமணம் குறித்து எனக்கு, "நமது திருமணம் மிகமிகச் சிறப்பாக அமைந்திருந்தது. இந்திர சபைபோல் காட்சியளித்தது. தங்கள் அன்பும், பண்பும் இதற்குக் காரணங்களாகும்" எனப் பாராட்டி எழுதி என்னை ஆனந்தக் கடலில் ஆழ்த்தினார்கள்.

ஓர் அன்பர், "புராணச சொற்பொழிவுகள் தேவையில்லை. திருக்குறள் பிரசங்கங்களே தேவை. இது சரிதானே?" எனக் கேட்டார். அதற்கு வாரியார் சுவாமிகள், "சரியில்லை. திருக்குறள் நீதி நூல். பெரிய புராணம் அருள் நூல். இராமாயணம் அன்பு நூல். சிலப்பதிகாரம் விதி நூல். சீவக சிந்தாமணி இன்ப நூல். பாரதம் அற நூல். அதனால் திருக்குறளால் நீதி மட்டும் தெரிந்து கொள்ளலாம். பக்தி, ஞானம் இவைகள் பாரத இராமாயணத்தால் தெரியவரும். கடிகாரத்தைப் பழுதுபார்ப்பவனுக்குப் பூதக் கண்ணாடி தேவை. வேதத்தில் வரும் நுட்பக் கருத்துகளைத் தெளிவுபடுத்தும் பூதக் கண்ணாடி புராணம். தருமத்தை விவரிப்பது பாரதம். சத்தியத்தை விரித்துச் சொல்வது அரிச்சந்திர புராணம். ஆகையால் புராணம் இன்றியமையாதது", என்றருளினார்கள்.

மேலும், "எங்கே வேற்றுமை மறைகிறதோ அங்கே ஒற்றுமை வருகிறது. பக்தி உணர்வு துளிர்க்கிறது. வானத்தில் பறப்பவனுக்கு மேடு பள்ளங்கள் தெரியாது. அதுபோல உயர்ந்த உள்ளம் கொண்டவனுக்கு வேற்றுமை கிடையாது. எனவே நாமெல்லாம் உள்ளத்தால் உயர்ந்து பக்தியைக் கடைப்பிடிக்க வேண்டும்" என்றார்கள்.

காஞ்சிப் பெரியவர் நம் வாரியார் சுவாமிகளுக்கு 'சரஸ்வதி கடாக்ஷாமிர்தம்' என்ற விருது வழங்கி, அறுபத்து நான்காவது திருப்பணித் தொண்ட நாயனார் என்று சிறப்பித்து அருளினார்கள். சங்கீத அகாடமி தேசிய விருது அளித்து கௌரவித்தது.

முருகப் பெருமானை 'வள்ளியின் நாயகன் வள்ளல்' என்பார்கள் சுவாமிகள். அந்த அரிய வள்ளலின் சிறந்த பக்தரான சுவாமிகளும் ஓர் அரும்பெரும் வள்ளலே. அவர்கள் கல்வியிலும் வள்ளல், கலையறிவிலும் வள்ளல், கொடையிலும் வள்ளல், கோயில் திருப்பணியிலும் வள்ளல், உள்ளத்திலும் வள்ளல், உழைப்பிலும் வள்ளல், சொல்லிலும் வள்ளல், நகைச்சுவையிலும் வள்ளல், பக்தியிலும் வள்ளல், பண்பிலும் வள்ளல், அன்பிலும் வள்ளல், அருள் புரிவதிலும் வள்ளல்.

இருநூறுக்கும் மேற்பட்டத் தமிழ் நூல்களை எழுதியுள்ளார்கள். திருப்புகழ் விளக்கவுரை, பெரியபுராண விரிவுரை, மகாபாரதம், கம்ப இராமாயணம் ஆய்வுரை முதலியவை குறிப்பிடத்தக்கவை. சமயப் பணிக்காக மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, அமெரிக்கா, ஐரோப்பா, இங்கிலாந்து, தெற்கு மற்றும் மேற்கு ஆப்பிரிக்கா முதலிய நாடுகளுக்கெல்லாம் சென்றுள்ளார்கள்.

மெய்ஞ்ஞான தீபமாய் விளங்கிய திருமுருக வாரியார் சுவாமிகள் இலண்டன் மாநகர் சென்று சென்னை திரும்புகையில் 7.11.93 அன்று காலை விமானத்திலே இறைவனடி சேர்ந்தார்கள். தமது எண்பத்தேழு வயதில் அமரரான அவர்கள் காங்கேய நல்லூரில் இலட்சக்கணக்கான அன்பர்கள் அஞ்சலி செய்ய அடக்கம் எய்தினார்கள்.

இறப்பவர் பிறப்பதில்லை. ஆனால் மண்ணிலே தோன்றி விண்ணிலே மறைந்த வாரியார் போன்ற நாயனார் இறப்பதில்லை. இறந்தும் இறவாப் புகழுடன் இலங்கும் ஏற்றமிகு ஏந்தல் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள். என்றென்றும் வாழ்க அவர்கள் புகழ்!

# சங்கப் பலகை

## கண்ணனின் காதல் ஓவியம்

(எழுதியவர் - புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார். வெளியீடு - முல்லை நிலையம், 43, புதுத் தெரு, மண்ணடி, சென்னை - 600 001. விலை – ரூ. 35.00).

'சத்சயீ' என்று மகாகவிஞன்... காதல் கவிஞன். பிஹாரிலால் எழுதிய ஹிந்தி நூலின் தமிழ்ப் பெயர்ப்பு, இந்த நூல். இராதையும் கோகுலத்தில் வாழ்ந்த கோபியரும் கண்ணன் மேல் கொண்டிருந்த ஈடு இணையற்ற பக்தியையும் காதலையும் தேனும் பாலும் கலந்த தெள்ளிய தமிழ்க் கவிதைகளில் அருமையாக மொழிபெயர்த்துள்ளார், திருமலை நல்லான் சக்கரவர்த்தி டாக்டர். புலிப்பாணி சுந்தரவரதாச்சாரியார்.

நூலின் முகப்பில் உள்ள ஆராய்ச்சி முன்னுரையே அற்புதமான படைப்பு. அடுத்துள்ள ஆசிரியர் வரலாறும், நூலமைப்பு - கவிதை நயம் விளக்கமும் நம் உள்ளத்தைக் கிள்ளிக் கொள்ளுகின்றன. வெளியில் போய் வீடு திரும்பிய தலைவி, பஞ்சணையில் கூந்தல் இழைகள் ஒட்டிக்கிடப்பதைப் பார்க்கிறாள். தான் இல்லாத வேளையில் தலைவன் வேறு ஒருத்தியுடன் கூடியிருப்பதைப் புரிந்து கொள்கிறாள். இதனைக் கவிஞர் "பஞ்சணையைப் பார்த்தழுவாள் பரத்தை குழல் கண்டாள், நெஞ்சம் வெடித்து நின்றாள் நித்திரையும் செய்யாளே" என்று ஓர் அருமையான காட்சியைக் நம் கண்முன் கொணர்ந்து நிறுத்துகிறார்.




உள்ளக்கிளர்ச்சியையும், சிந்தனை வளத்தையும், கற்பனை விரிவினையும் முதல் பக்கம் முதல் இறுதிப் பக்கம்வரை உள்ளடக்கியுள்ள இந்த நூல், ஓர் அரிய படைப்பு. பல இடங்களில் திருக்குறள், கலிங்கத்துப்பரணி, கம்பராமாயணம் போன்றவற்றை மேற்கோள் காட்டியிருப்பது, நூலாசிரியரின் பரந்த இலக்கியப் புலமையை வெளிப்படுத்துகிறது.

—தாமரைக்கண்ணன்

## ஞானச்சரம்

(ஆசிரியர் - ஸ்ரீகுரு சுராஜானந்தா. வெளியீடு - குரு பப்ளிகேஷன்ஸ், 242, ராமகிருஷ்ண மடம் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4. பக்கங்கள் – 136. விலை – ரூ 12.00)

பெறற்கரிய பேரருளால் தன்னில் பிறந்த தத்துவங்களைச் சின்னச்சின்ன பேச்சு வழக்குச் சொற்களில் வடித்திருக்கிறார் குரு சுராஜானந்தா. 'பளிச் பளிச்' சென்று ஊடுருவிப் பாய்ந்து மனித மனங்களை ஞான ஒளியில் குளிப்பாட்டுகின்ற குட்டிக் குட்டிக் கதைகள், ஐந்து வரி ஆறு வரிகளில் அறவுரைகள் படிக்கப் படிக்கப் பரவசங்களில் திளைக்க செய்கின்றன.

'அஞ்ஞானங்கறது ஒரு பெரிய பாறை. அதை நாம் சுமக்க சுமக்க அது ரொம்ப கனமாவே கூடிகிட்டுப் போயி கடைசியிலே ஆளையே அமுக்கிடும். ஞானங்றது லேசான பஞ்சு. அதை நாம எவ்வளவு சுமந்தாலும் கனம் தெரியவே தெரியாது. முத்தின ஞானம் காத்திலே பறக்கிற பஞ்சு மாதிரி'.

'செங்குத்தா ஏர்றதும் தப்பு. இறங்கறதும் தப்பு. அதுபோல தான் வாழ்க்கையும்' - இவை போன்ற ஞானச்சரங்கள் மலிந்திருக்கின்றன.

— நீலவன்

## பலன்தரும்பதிகளும் பதிகங்களும்

(ஆசிரியர் - ஈரோடு த.விசுவநாதன். பதிப்பகம் - அருணோதயம், 3, கௌடியாமடம் சாலை, சென்னை - 14. பக்கங்கள் - 160. விலை – ரூ. 20.00).

சைவசமயக் குரவர் நால்வர், சிவபிரானைத் துதித்துப் பாடிய பல்வகைப் பதிகங்களினின்றும், உலகியல் துன்பங்களைப் போக்கிக் கொள்ளவும், நலன்களை சேர்த்துக் கொள்ளவும் வழி வகுப்பவற்றைத் தேர்ந்தெடுத்து, பட்டியலிட்டு தந்திருக்கிறார், ஆசிரியர். பதிகங்களின் பொருளையும், அவை பாடப்பெற்ற தலங்கள் பற்றிய விபரத்தையும் குறிப்பிட்டுள்ளார். எல்லாச் செல்வமும் பெற, தீராநோயும் தீர என்று தொடங்கி இருபத்திரண்டு வகையான பலன்களைப் பெற, பக்தியுடன் அப்பதிகங்களை ஓதுதல் உதவிடும் என்கிறார்.

— கே.ஏ.

## ஆனந்தமாய் வாழ ஆசாரியாள் வழிமுறைகள்

(தொகுப்பாசிரியர் - அம்மன் சத்தியநாதன். வெளியீடு - அருள்மிகு அம்மன் பதிப்பகம், 212, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014. விலை ரூ. 22).

பரமாச்சார்யாள் நூற்றாண்டு ஜன்ம தினம் சிறப்புற கொண்டாடப்பட்டுள்ள தருணத்தில், மிகப் பொருத்தமாக, சுவாமிகளின் 223 அருளுரைகளுடன் வெளிவந்திருக்கும் நூல். நமது வாழ்க்கையை ஆனந்தமாக வைத்துக் கொள்வது எப்படி என்ற வழிமுறைகளைப் பெரியவர்கள் அருளியுள்ளார்கள். இளமைப் பிராயத்திலிருந்து வயோதிக நிலை வரை அந்தந்த நிலைகளில் மனிதன் கைக்கொள்ள வேண்டிய நற்சிந்தனைகள், நடப்புகளை பெரியவர்கள் விளக்குகிறார்கள். எளிய முறையில் பெரிய தத்துவங்களை விளக்கும் அருள் நூல்.

—க.ப.

→



# ஆலங்கிழவி!

ஆலமரம் விழுதுகட்டி
ஆராரோப் பாட்டுப் பாட..
தாலி கட்டி வந்த பொண்ணு
கவலையிலே தொட்டில்கட்டி
தனித் தூக்கம் போடுறாளாம்
தென்னங்கீத்துக் குடிசைக்குள்ளே...

காட்டுப் பூவு, கன்னிப் பூவு
வீட்டுப் பூவா வேணுமின்னு
விரும்பி வந்தான் தாய் மாமன்
வெடல்புள்ள மயங்கி நின்னா!

மாவிலையும் தோரணமும்
மல்லிகையும் பஞ்சணையும்
குங்குமமும் குடைசாய
தங்கரதம் போனதம்மா!

மாமனுக்கு இடுகாடு...
மரிக்கொழுந்து நந்தவனம்
தீப்பிடிச்சுத் தலைசாய
பூமிமட்டும் காஞ்சுகிட்டு இருக்குதய்யா!

கட்டும் புடைவையிலே
கட்டிவச்ச மாமனையே
சுட்டுப் பொசுக்கிவிட்டுப்
பொட்டிழந்த வட்டநிலா
போகுதையா காட்டுக்குள்ளே
பொழுசாயம் வெறகெடுக்க...

குடிசையில பொட்டப்புள்ள
கூழு காச்சும் வேளையிலே
ஒசந்து வளந்த மகன் - அவனுக்கு
ஊருக்குள்ள வியாபாரம்

காலங்களத் தாண்டி
கன்னிமக வாழுறாளாம்
ஆலமரக் கெழவிபோல
ஆராரோப்பாடுறாளாம்
விழுதுகளை இறக்கிவிட்டு
வீடுகட்டி ஆளுறாளாம்

கவியரசு நா.காமராசன்

# சங்கப் பலகை

## விநோபாவின் கீதைக் கதைகள்

(தொகுப்பாசிரியர் - வீ. செல்வ ராஜ். வெளியீடு - காந்திய இலக் கியச் சங்கம், தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, மதுரை - 625 020. பக்கங்கள் - 56. விலை - ரூ. 8.00).

பாரதத்தின் ஆன்மிக ஊற்று களாக விளங்குபவை உபநிட தங்கள். அவற்றின் சாரத்தைச் சுவைமிக்க பாலாகத் திரட்டித் தருவது பகவத் கீதை. இதற்கு இந்நூற்றாண்டில் விநோபா ஆற்றியுள்ள கீதைப் பேருரைகள் புதிய சகாப்தத்தின் குரலை ஒலித் தன. அந்த கீதைப் பேருரையில் இருந்து ஐம்பது சிறுகதைகளை தமிழில் மொழி பெயர்த்து இந் நூலில் தொகுத்திருக்கிறார் வீ. செல்வராஜ். சிறுவர் முதல் பெரிய வர்கள் வரை படித்துப் பயன் பெறலாம்.

நாகு

## திருக்குறள் ஆய்வுச் சிந்தனைகள்

(ஆசிரியர் - புலவர் குமரன். பதிப்பகம் - கவிச்சிங்கம் பதிப் பகம், உத்தமபாளையம் - 626 533. பக்கங்கள் - 112. விலை - ரூ. 15.00).

பிற இலக்கியங்களுடன் ஒப் பிட்டும், நடைமுறை வாழ்விற்கு வழிகாட்டுவதாகவும், குறளின் சிறப்புகளை எடுத்துரைக்கும் நூல்.

— கே.ஏ.

## கம்பனும் கண்ணதாசனும்

(எழுதியவர் - பேராசிரியை டாக்டர் சரசுவதி ராமநாதன். வெளியீடு - வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 15.00)

கவிச் சக்கரவர்த்தி கம்பனை யும், கவிச் சக்கரவர்த்தி கண்ண தாசனையும் ஒப்பிட்டு மகிழும் நூல், இது. 'கம்பனாகிய நானே தற்போது கண்ணதாசனாய்ப் பிறந்துள்ளேன்' என்று கவிஞர் புதுவையில் பாடிய பாடல்களை நூலாசிரியை உளம் சிலிர்க்க எடுத்துக் காட்டியுள்ளார். கண்ணதாசனை, கண்ணன், கந்தன், பாரதி ஆகியோருடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ள பாங்கு பாராட்டத்தக்கது. திருமணம், தத்துவ வித்தகர் கண்ணதாசன் ஆகிய இரண்டு கட்டுரைகளும், கண்ணதாசனின் உள்ளத்தை உள்ளவாறே படம் பிடித்துக் காட்டுகின்றன.

—தாமரைக்கண்ணன்

## கற்றல் குறைபாடு ஏன்?

(ஆசிரியர் - ஜான் முருக செல் வம். பல்கலைப் பதிப்பகம், 36, தெற்குச் சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 24. பக்கங்கள் - 152. விலை - ரூ 20.00)

ஊனமுற்றோர் சேவையில் தம்மை ஈடுபடுத்திக்கொண்ட இந் நூலாசிரியர், தம் அனுபவத்தில் கற்றல் குறைபாடும் ஒருவகை ஊனமேயாகும் என்று உணர்ந்து கொண்டு அதற்குத் தீர்வு காணும் முயற்சியில் இந்நூல் வழி முயன் றுள்ளார்.

கற்றல் என்பது வாசிப்பது, எழுதுவது, கணக்கிடுவது என இம்மூன்றையும் உள்ளடக்கிய தாகும். குழந்தைப் பருவத்தி லிருந்தே தொடங்கும் இம் மூன்றிலும் ஏற்படும் கற்றல் குறை பாட்டுப் பிரச்னைகளைக் களையத் தம் அனுபவத்தோடு கூடிய தீர்வு களைத் திறம்பட விளக்கியுள்ளார்.

"தமிழில் கற்றல் குறை பாட்டைப் பற்றி எழுதப்பட்ட முதல் நூல் இதுதான்" என்று ஆந்திர மஹிளா சபாவின் செய லாளர் திருமதி அக்கம்மா கிருஷ்ண மூர்த்தி அவர்கள் கூறுவதி லிருந்தே இந்நூலின் சிறப்பை உணரலாம்.

— ப. இராமலிங்கம்

## இலக்கியச் சுவை

(எழுதியவர் - ப. ஜீவானந்தம். வெளியீடு - நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41 பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை - 98. விலை - ரூ. 12.00)

ஒன்பது கட்டுரைகளின் தொகுப்பு இந்த நூல். முதல் கட்டுரை விஞ்ஞானத்தில் ஏனைய நாடுகள் எவ்வாறு முன்னேறி உள்ளன என்பதையும் நம் நாடு அதில் எவ்வாறு கவனம் செலுத்த வேண்டும் என்பதையும் உணர்த்து கிறது. ரகுநாதன் கவிதைகளை ஒரு கட்டுரை திறனாய்வு செய் கிறது. சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகத் தொண்டு, கம்பன் மில்டன் இருவரின் ஒத்துவரும் சிந்தனை கள், இக்பாலின் கவிச் செல்வம், வள்ளுவரின் சீரிய சிந்தனைகள், சாமி சிதம்பரனாரின் தமிழ்த் தொண்டு ஆகியவற்றை மற்ற கட்டுரைகள் விரிவாக ஆய் கின்றன.

—தாமரைக்கண்ணன்




## 1994 புத்தாண்டுப் பலன்கள்

(கணித்தவர் - ஜோதிட நிபுணர் ஹநுமத்தாசன். வெளியீடு - அருள்மிகு அம்மன் பதிப்பகம், 8, கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 14. விலை - ரூ. 5 /-. பக்கங்கள் - 56)

ஒவ்வொரு ராசிக்கும், ஒவ் வொரு மாதத்திற்கும் துல்லிய மான பலன்களும், எளிமையான பரிகாரங்களும் அடங்கிய நூல். 12 ராசியினருக்கும் ஒரே புத்தகம்.

—நாகு




## சாமர்த்திய நரி

(ஆசிரியர் - பேராசிரியர் ஏ. சோதி. வெளியீடு - நன்மொழிப் பதிப்பகம், 75, அரவிந்தர் வீதி, புதுச்சேரி - 605 001. பக்கங்கள் - 80. விலை - ரூ. 10.00).

ஏழு வயதுக்கு உட்பட்ட சிறுவர் சிறுமியர்களுக்காக எழுதப்பட்ட நூல். மொத்தம் 9 கதைகள் இந் நூலில் உள்ளன. ஒவ்வொரு கதைக்கும் படம் போடப்பட்டுள்ளது. இனிய எளிய நடையில் தந்திரத்தாலும் அறிவுக் கூர்மையாலும் ஆபத்திலிருந்து தப்பிய நரிக் கதைகள். கதைக் கேட்கும் குழந்தைகளுக்கு, கதைச் சொல்ல பெரியவர்களுக்கும் உதவும் நூல். 'இரண்டு எதிரிகள்' கதை நயமான இதம்.

— நாகு

## மாசில்லாச் சுற்றுச் சூழல்

(ஆசிரியர் - நா. முகம்மது செரீபு. பதிப்பகம் - வைதேகி பதிப்பகம். கன்னார் தெரு. மானாமதுரை - 623 606. பக்கங்கள் - 92. விலை - ரூ. 20.00)

சுற்றுச்சூழல் பாதுகாப்பென்பது இன்று நம்மிடையே மட்டுமன்று. உலகம் முழுவதும் பேசப்படும் ஒரு பொருளாகிவிட்டது. காரணம், வளர்ந்து வரும் மக்கள் தொகைக்கு வளமான வாழ்வு வேண்டுமெனின், பசுமைப்புரட்சி வேண்டும்; பல தொழில்கள் பெருகவேண்டும்; போக்குவரத்தில் புதுமை வேண்டும். இப்படி, எத்தனை எத்தனையோ புதுமைகள் வேண்டும். அறிவியல் பயனால், இவை ஈடேறுகின்றன; கூடவே துன்பமும் சூழுகின்றன. அதாவது, சகவாழ்வுக்கு ஆதாரமான சுற்றுச்சூழல் கேடுறுவதாகும்.

அந்தச் சுற்றுச் சூழல் நிலம், நீர், காற்றாகும்.

'இவை எப்படியெல்லாம் மாசடைகின்றன?

இவற்றைப் பாதுகாப்பது எப்படி? இவற்றில் தனிமனிதனின் பங்கென்ன? அரசு மற்றும் பல நிறுவனங்களின் பங்கென்ன?' என்பனவற்றை எடுத்துக்காட்டி, இவற்றில் மக்களிடையே ஒரு விழிப்புணர்வு வேண்டுமென்பதைத் தமது எளிய, இனிய நடையில் ஆசிரியர் இந்நூலில் வலியுறுத்துகிறார்.

சுற்றுச்சூழல் பாதுகாப்பு விழிப்புணர்வில் அக்கறை கொண்டுள்ளோர், இந்நூலை அவசியம் வாங்கிப்படிக்க வேண்டும். நூலில், பின் இணைப்பாகக் கொடுக்கப்பட்டுள்ள "தமிழ்நாடு மாசு கட்டுப்பாட்டு வாரியங்களின்" முகவரிகள் அவர்களுக்கு நன்கு துணைபுரியும்.

— ப. இராமலிங்கம்

## விடுகதைகள் - புதிர்கள் 250

(ஆசிரியர் - பேராசிரியர் ஏ. சோதி. வெளியீடு - நன்மொழிப் பதிப்பகம், 75, அரவிந்தர் வீதி, புதுச்சேரி - 605 001. பக்கங்கள் - 84. விலை - ரூ. 10.00).

'கிட்ட இருக்குது பட்டணம்; எட்டிப் பார்க்க முடியலே?' -அது என்ன?' நமக்கு தெரிந்த பொருளையே விடுகதை மூலம் விடுவிக்க வைக்கிறார் பேராசிரியர் ஏ. சோதி. சுவாரஸ்யமான நூல். 200 விடுகதைகளும், 50 புதிர்களும் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

அறிவுக் கூர்மையை வளர்க்கவும் பொழுது போக்கவும் இந் நூல் துணைபுரியும்.

— நாகு

## என் தமிழ் இயக்கம் - 2

(ஆசிரியர் - முனைவர் இரா. திருமுருகன். வெளியீடு - 'ஏழிசைச் சூழல்', 62, மறைமலை அடிகள் சாலை, புதுச்சேரி - 605 001. விலை - ரூ 32.)

தமிழ் இயக்கம் இயல், இசை, நாடகம் ஆகிய துறைகளில் நன்கு முன்னேற நூலாசிரியரின் பல் துறை ஆராய்ச்சியை நன்கு வெளிப்படுத்தும் தமிழாராய்வு நூல். சொல் பிழை, வரலாற்றுப் பிழை முதலியவற்றைப் பண்பாட்டுடன் சுட்டிக்காட்டி சம்பந்தப்பட்டவர்களுடன் இலக்கியப் போர் தொகுத்துள்ளார். ஆனால் மாறுபட்ட கருத்துகளைச் சொல்வதிலும் பண்பான மொழி, தெளிந்த வாதம் முதலியன திறனுடன் கையாளப்பட்டிருக்கிறது. தமிழாராய்ச்சியாளர்கள் அவசியம் கவனிக்கத்தக்க நூல். காரணம், தனித்த தன்மையுடன் உள்ள ஓர் இலக்கியத் திறனாய்வு.

— க. ப.

# சங்கப் பலகை

## தத்துவங்கள் 1008

(ஆசிரியர் - ஸ்ரீகுரு சுராஜானந்தா. வெளியீடு - குரு பப்ளிகேஷன்ஸ், 242, ராமகிருஷ்ண மடம் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4. பக்கங்கள் - 178. விலை - ரூ. 15.00)

மனிதன் மனிதனாக வாழ்ந்து தான் அவன் பிறப்பிற்குப் பெருமை சேர்க்கிறான். ஆரோக்கியத்தையும், ஆயுளையும், அறிவையும், அனுபவத்தையும் சேகரிக்கிறான். தத்துவங்களில் தன்னை ஈடுபடுத்தி அவற்றின் தரிசனங்களில் தன்னைத் தோய்த்தெடுத்து தன்னின் சுயரூபத்தை அறிகிறான். தன்னின் முழுமைக்காக அவ்வப்போது தன்னைச் செதுக்கிக் கொள்கிறான். தத்துவங்கள் 1008 அவனுக்கு மிகச் சரியான பயணிக்கும் பாதையை அமைத்துத் தருவனவாய் அமைகின்றன. 'அகங்காரம் கொண்ட மனிதனின் மனதில் என்றும் அமைதி தங்கவே முடியாது' எந்த மனிதனும் அன்புக்கு அடி பணிந்தே ஆகவேண்டும்' 'மனிதனை மனிதனாக மதிக்கத் தெரியாத மனிதன், மனிதனாகவே இருக்க முடியாது' 'தேவையில்லாத ஆசை மனிதனை ஒருநாளும் வாழவைப்பதே இல்லை' 'காலம் தனிமனிதனுக்கு அளிக்கும் மகத்தான விடுதலைதான் மரணம்' போன்றவை 1008 தத்துவங்களில் அடங்குவன. அற்புதமான நூல்.

— நீலவன்

## 'என்றும் திகட்டாத அரும் களஞ்சியம்'–பத்திரிகைகள் பாராட்டுகின்றன

### அமுதசுரபி – தீபாவளி மலர்'

மேலட்டையில் ஓவியர் கோபுலுவின் ஓர் அழகிய ஓவியம். உள்ளே முகப்பில் பிள்ளையார்பட்டி ஸ்ரீகற்பக விநாயகர், அமரர் சில்பியால் 1961இல் தீட்டப்பட்டது. இதைத்தவிர சில்பியின் யோக நரசிம்மர், யோக ஆஞ்சநேயர், ஸ்ரீவெங்கடேசப் பெருமாள், ஸ்ரீஅலமேலு மங்கை தாயார் – ஆகிய ஓவியங்களும் இந்த மலரை அலங்கரிக்கின்றன.

108 ஸ்ரீவைணவத் திருத்தலங்களில் ஒன்றான சோளிங்கரில் எழுந்தருளியிருக்கும் யோகம் தரும் 'நரசிம்மர்' பற்றி 'சிக்கி' எழுதியிருக்கிறார். இதில் சில்பி வடித்துள்ள யோக நரசிம்மர் திருக்கோயிலின் சித்திரங்களும் இடம் பெற்றுள்ளன,

என்றும் திகட்டாத எம்பெருமானாகிய திருமலையில் குடிகொண்டிருக்கும் ஸ்ரீவெங்கடேசப் பெருமானைப் பற்றியும் இந்தத் திவ்யத் திருக்ஷேத்திரத்தைப் பற்றியும் யோகா அழகிய வண்ணப்படங்களோடு கட்டுரையாகத் தந்திருக்கிறார். இதில் சில்பியின் திருமலைக் கோயில் சித்திரங்களும் இடம் பெற்றுள்ளன.

தாமரைக் கண்ணன், வைத்தீஸ்வரன் கோயிலைப் பற்றி எழுதிய கட்டுரைக்கு அமரர் சில்பியின் சித்திரங்கள் மேலும் அழகூட்டுகின்றன.

அமிர்தானந்தமயி தேவி, யோகிராஜ் வேதாத்ரி மஹரிஷி, சுவாமி ஓங்கார நந்தா, சந்த் துக்காராம் சுவாமிகள் ஆகிய ஆன்மிகத் தூதுவர்களை ஜி.கே. மூர்த்தி ஓவியமாக வடித்துத் தந்துள்ளார்.

சேக்கிழார் கண்டுகளித்து, திருமங்கையாழ்வார் கண்டுகளித்த அற்புதங்கள் நிறைந்த ஒரு கனவு நகரமாகத் திகழ்ந்த கடல்மல்லை (மாமல்லபுரம்) இன்று ஒரு கேளிக்கை நகரமாகிவிட்டதைக் கண்டு மனம் வருந்துகிறார் ஆசிரியர் விக்கிரமன்.

சென்னையில் நிலவிவரும் கடுமையான குடிநீர்த் தட்டுப்பாட்டை எப்படித் தீர்க்கலாம்? 'கடலிலிருந்து குடிநீர்' கட்டுரையில் நமது முன்னாள் குடியரசுத் தலைவர் ஆர். வெங்கட்ராமன் விளக்கியிருக்கிறார். இது 1961இல் அவர் எழுதிய ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம்.

தமிழ்த் திரைப்பட உலகில் இப்போது பரபரப்பை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் இசையமைப்பாளர் 'இளம்புயல்' ஏ.ஆர். ரகுமானுக்கும் இந்த மலரில் இடமுண்டு.

கீத கோவிந்தத்தைத் தமிழில் இலந்தை சு. இராமசாமி தந்திருக்கிறார். இதற்கு எழிலூட்டும் வண்ணம் அமைந்துள்ளது மணியம் செல்வனின் அழகிய ஓவியங்கள்.

— தினத்தந்தி



The opening page of this special issue features a colour photograph of Pillayarpatti Sri Karpaga Vinayagar. It is followed by the poem Mahakavi Bharathiyar's Vinayagar Nanmani Malai. It also carries an awe-inspiring article on Mahabalipuram by the Editor, Vikraman. A worthy piece by the former President Mr. R. Venkataraman on converting sea water into drinking water, published in 1961in The Hindu, has been reproduced. Write-ups by Mr. Justice S. Mohan, the Food Minister Mr. R. M. Veerappan and the industrialist Mr. N. Mahalingam, are interesting. Art plates of Matha Amirthananda Mayi Devi, Yogi Vedhathri Maharishi, Swami Omkaranandha and Santh Thukaram Swamigal, find a place. Mi.Pa. Somu, Sujatha, Gouthama Neelambaron, Rajendrakumar, Suba, Anuradha Ramanan and Rajeshkumar, have contributed short stories. Aatralarasu, Na. Kamarasan, Ilangkamban, Bala Ramani, Mathi Oli and Ko. Mohanarangam have contributed poems. There is an article on Film Music Director A.R. Rahman the national award winner, this year.

- THE HINDU



'அமுதசுரபி' தீபாவளி மலர் வழக்கம்போல வண்ண மலராக மலர்ந்து மணம் வீசுகிறது. தாமரைத் தடாகத்து மங்கையின் உருவம் கோபுலுவின் கைவண்ணத்தில் அட்டைப்படமாக மிளிர்கிறது.

344 பக்க மலரில் தமிழ்நாட்டு பிரமுகர்கள், ஆர். வெங்கட்ராமன், நீதிபதிகள் மோகன், அமைச்சர் ஆர்.எம்.வீரப்பன், பல்கலைக்கழக – முன்னாள் துணைவேந்தர்கள் கி. வேங்கடசுப்பிரமணியன், சி. பாலசுப்பிரமணியன், எழுத்தாளர் விக்கிரமன் மற்றும் ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள் எனப் பலர் கட்டுரை எழுதி இருக்கிறார்கள். தாய்லாந்து, இங்கிலாந்து போன்ற வெளிநாட்டு பயணக் கட்டுரைகளும் இதில் இடம் பெற்று உள்ளன. பல பிரபல எழுத்தாளர்களின் கதைகள் இடம் பெற்று உள்ளன.

இவை தவிர பக்கத்துக்குப் பக்கம் கவிதைகளும் வண்ணப் படங்களும் தீபாவளி மலரை பொக்கிஷமாகப் போற்றிப் பாதுகாக்கத் தூண்டுகின்றன. இதன் விலை 35 ரூபாய்

—தினமணி



The Deepavali Malar of Amudhasurabhi runs true to form: it has the usual quota of pictures of deities and saints, essays, short stories, photo features... but it also has a few surprises.

The ones that top the list are the sketches of the late artist Silpi of the Tirupati and Vaitheeswaran temple complexes and the paintings of G.K. Murthy. The painting of the deity Sri Kalikambal (Madras) and the portraits of Sri Mata Amritananda Mayi, Yogiraj Vedatri Maharishi, Swamy Omkarananda and Sant Tukaram come to life with Murthy's deft strokes.

The volume is not short on non-fiction writing: ex-President R. Venkataraman has written about water from the sea, N. Mahalingam on Tholkappiyam, Justice S. Mohan on Tirukural, Dr K. Venkatasubramanian on Bharathi and Bharathidasan, Ragami on Jallianwala Bagh, Dr S. Padmanabhan on the forts in Kanyakumari District, Dr M.S. Udayamurthy on 'thought'. etc.

Priced Rs 35, this 343-page issue promises to be a Deepavali treat.

- INDIAN EXPRESS

# ஆனால்....

● துணிவிருக்குமானால்
கடல் கடக்க முடியும்
கப்பல் தேவை யில்லை!

மனதில் கவிழ்ந்து
போனால்
கப்பல் என்ன செய்யும்?

● மனமிருக்கு மானால்
பறப்பதற்கு முடியும்
சிறகு தேவையில்லை!

கூண்டில் கிடக்கும்
கிளிக்குச்
சிறகால் என்ன லாபம்?

● மதியிருக்குமானால்
புதிர் திறக்க முடியும்
சாவி தேவையில்லை!

திறப்பை மறந்த
கையில்
சாவி எதற்கு வேண்டும்?

● இதய ஒளி இருந்தால்
இருளை வெல்ல முடியும்
கிழக்கு தேவையில்லை.

இருளில் ஆன்மா
ஜனித்தால்
கிழக்கின் மேலா வழக்கு?

● மனசு பூக்கும் என்றால்
மணம் பரப்ப முடியும்
வனங்கள் தேவையில்லை!

நினைவில் குப்பை
நெடிகள்...
பூக்கள் மேலே தப்பா?



தமிழன்பன்



## 'மேஸ்ட்ரோ' இசை ஞானி இளையராஜா

மதுரை மாவட்டம் பண்ணை புரத்தில் மிகச் சாதாரணக் குடும்பத்தில் பிறந்த இளையராஜா இசையில் ஆர்வம் கொண்ட பாவலர் சகோதரர்களில் ஒருவர். ஆரம்ப நாட்களில் மேடைக் கச்சேரிகள் செய்து பின்பு சென்னைக்கு குடிபெயர்ந்து மேற்கத்திய மற்றும் கர்நாடக இசை வல்லுநர்களிடம் இசை ஞானத்தைப் பெருக்கிக் கொண்டு தயாரிப்பாளர், கவிஞர் பஞ்சு அருணாசலத்தின் ஆசியுடன் 'அன்னக்கிளி' படத்திற்கு முதல் முதல் இசையமைத்து திரையுலகில் பிரவேசம் செய்தார். 'அன்னக்கிளி'ப் படத்தின் இசைத்தட்டுகளின் விற்பனை பெரிய சாதனையை ஏற்படுத்தி முந்தைய எல்லாப் படங்களின் இசைத்தட்டுகளின் விற்பனையையும் மிஞ்சி இவருக்கு பெரும் புகழைச் சேர்த்துத் தந்தது. அதன்பிறகு கடந்துபோன பதினாறு ஆண்டுகளில் மிகப் பெரிய முன்னேற்றங்களும் சாதனைகளும் படைத்து விஸ்வரூபம் எடுத்துவிட்டார் இளையராஜா. 700 படங்களுக்குமேல் இசையமைத்து சுமார் ஐயாயிரம் பாடல்கள் இவர் இசைக்கோவையில் உருவாகி உலகமெங்கும் தற்போது ஒலித்துக் கொண்டிருக்கின்றன. 'Nothing but wind' 'How to name it' ஆகிய இரண்டு பிரத்யேக இசை வடிவங்கள் 'காம்பாக்ட் டிஸ்கில்' பதிவாகி வெளியிடப்பட்டு உலகத்தின் அத்தனை இசைக் கலைஞர்களையும் மூக்கின் மேல் விரலை வைத்து வியந்து பாராட்டும்படி அமைந்திருக்கிறது. படத் தயாரிப்பாளர்கள் இவரை ஒப்பந்தம் செய்தாலே விநியோகஸ்தர்கள் கண்களை மூடிக்கொண்டு 'ஃபைனான்ஸ்' செய்யும் அளவுக்கு இவரை ஒரு 'வெற்றி நாயகனாக' மக்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

இவரின் புகழுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் கடந்த சில மாதங்களுக்குமுன் லண்டன் சென்று 'சிம்பனி' இசை அமைத்து ஆசிய கண்டத்திற்கே புகழைத் தேடித் தந்திருக்கிறார்.

'இவருக்கு 'பால்கே அவார்ட்', 'பத்ம பூஷண்', 'டாக்டர் பட்டம்' ஆகிய விருதுகளை இந்திய அரசாங்கம் கொடுத்து இளையராஜாவைக் கௌரவப்படுத்திப் பாராட்ட வேண்டும்' என்று ஏவி.எம். சரவணன் சமீபத்தில் நடந்த ஒரு கூட்டத்தில் கேட்டுக் கொண்டார்.

மேற்படி விருதுகளை விரைவில் அரசாங்கம் அளித்து இளையராஜாவைப் பெருமைப்படுத்தும் என்ற எதிர்பார்ப்போடு மேலும் இமாலய சாதனைகள் பல இசை ஞானி இளையராஜா படைக்க வேண்டும் என்று அமுதசுரபி சார்பாக வாழ்த்துகிறோம்.

வண்ணப்படம்,

தகவல் :

**யோகா**

மேலட்டை விளக்கம்

## அதிஷ்டான மகா கும்பாபிஷேகம்

★ சென்னை நீலாங்கரையில் உள்ள யோகாலயா ஆஸ்ரமத்தில் அதன் ஸ்தாபகரும் சேந்தமங்கலம் ஸ்ரீஸ்வயம்பிரகாச அவதூத ஸ்வாமிகளின் சிஷ்ய பரம்பரையைச் சார்ந்தவரும் குண்டலினி யோகியுமான ஸ்ரீஸ்ரீஸ்ரீ குரு சுராஜானந்தா அவர்களின் மூர்த்தி பிரதிஷ்டையும், அதிஷ்டான மகா கும்பாபிஷேகமும் விநாயக சதுர்த்தியன்று மிகவும் சிறப்பாக நடந்தேறியது. கும்பாபிஷேக நிகழ்ச்சியில் ஸ்வாமிஜியின் பக்தர்களும், திரளான பொது ஜனங்களும் கலந்து கொண்டார்கள்.



# "சிற்றினம் அஞ்சும் பெருமை"

டாக்டர் கீ.வேங்கடசுப்பிரமணியன்



பெரியோரின் துணைகோடல், அறிவாளிகளின் நட்பு. இவை எப்படி நமக்குச் செயலாக்கத்தை ஏற்படுத்தும் என வள்ளுவர் நம்பினாரோ, அதே போல் "கீழ் மக்களது நட்பை" ஒழித்தல் பற்றியும் பேசுவார். ஒரு முறை உலக வங்கியின் ஒப்பற்றத் தலைவராக விளங்கிய ராபர்ட் மக்னமாரா (Robert McNammara) அவர்கள் வளரும் நாடுகளின் சித்தாந்தம் (Philosophy of Developing Countries) என்ற பொருள் பற்றி ஜப்பானின் தலைநகரான டோக்கியோவில் பேசினார். நானும் அப் பேச்சைக் கேட்கும் வாய்ப்புப் பெற்றேன். ஐக்கிய நாடுகள் நிறுவன பல் கலைக் கழகத்தில் (University) நடந்த கருத்தரங்கில் துவக்க உரை யாற்றினார், உலக வங்கித் தலைவர். பொருள் "வளரும் நாடுகள் - வளராத காரணம்".

அப்போது மிக மிக முக்கியமானதொரு பொருள் பற்றி அவர் அழுத்தமாகப் பேசினார். வளரும் நாடுகள் பல வளரும் நாடுகளாகவே பல ஆண்டுகள் இருப்பதின் காரணம் - அவர்கள் பல பழைய முறைகளைக் கைவிட முடியாது இருத்தலேயாகும் என்று கூறி ஒரு விளக்கக் கதையைக் கூறினார். இது ஒரு குடும்பக்கதை.

"ஒரு போர்வீரன் சிறிய வேலையில் பட்டாளத்தில் சேர்ந்த போது, பல சிறியவர் நட்பு அவனுக்குக் கிடைத்தது. அவரது கீழ்ப் பண்புகளும், பழக்க வழக்கங்களும் அவனைப் பற்றிக் கொண்டன. ஆனால் அவன் உயர உயர அவனது கூடாநட்பு ஒரு நங்கூரம் போல் அவனைக் கீழே இழுத்து மேலே முன்னேற முடியாமல் செய்துவிட்டது. அதேபோல் வளரும் நாடுகள் பழைய முறைகளையே விடாமல் பற்றிக் கொண்டிருப்பதால் அவர்கள் வளரும் நாடுகளாகவே நின்று விட்டன" என்றார்.

ஒரு தனி மனிதனுக்குப் பொருந்தும் உண்மைகள் ஒரு நாட்டுக்கும் பொருந்தும். ஒரு தனி உடலுக்குப் பொருந்துபவை ஒரு நாட்டுக்கும் (Body Politic) பொருந்தும். அதேபோல் இவை ஒரு நிர்வாகத்துக்கும் பொருந்தும்.

"சிற்றினம் அஞ்சும் பெருமை,
சிறுமைதான்
சுற்றமாய்ச் சூழ்ந்துவிடும்"

என்கிறார் வள்ளுவர்.

பெரியோர், கீழ்மக்கள் இனத்தைக் கண்டு அஞ்சுவர். ஆனால் சிறியவரோ அதைத் தன் சுற்றமாகக் கருதிச் சூழ்ந்து கொள்வர் என்கிறார் இவர்.

ஒரு நிர்வாக அமைப்பில் இரு வகையான மக்கள் இருக்கலாம். இவரை "Stay Puts" "Push Outs " என Peter Drucker கூறுவார். இதில் Stay Puts என்பார் வள்ளுவரின் சிற்றினம் எனலாம். எதுவரினும் இவர் கவலைப்படுவதில்லை. ஏனோ தானோ என்று எந்நாளும் இருப்பர். நிர்வாகம் பற்றிக் கிஞ்சித்தும் கவலை கொள்ளாதவர். இவர் போன்றோரால்தான் 'ஸ்ட்ரைக்' போன்றவை நடைபெறுகின்றன. சுயநலத்தையே விரும்பும் இவர் பிறர் நலம் விரும்புவார் போல் நடிப்பர்.

என்றும் உயராமல் பிறரையும் உயர்த்தாத இவரை "Stay Puts" என மிக அழகாக வருணிக்கிறார் பேராசிரியர் டிரக்கர்.

மற்றையோரோ Push Outs வெகுவேகமாகச் செயல்பட்டு, துப்பாக்கியிலிருந்து வெளியேறும் விசைக்குண்டு போல் செயல்படுபவர். 'You require Push' எனறு சிலநேரம் சொல்லுகிறோமே - அதுதான் இந்த Push. முன்னேறும் வேகத்தைக் குறிக்கிறது.

இம் மக்களை நாம் வள்ளுவர் காலத்து 'மேலோர்' என்று கொள்ளலாம். அவ்வப்போது ஆய்ந்து ஆய்ந்து கீழோர் யார், மேலோர் யார் என்று கண்டு நிர்வாகத்தை முடுக்கி விடுவது ஒரு நல்ல நிர்வாகியின் கடமை. சிற்றினம் சேராது அவர் கண்டு அஞ்சி இருப்பதுவே ஏற்ற நிலை - அன்றும் அதுவே; இன்றுகூட அதுதான்.

ஃ



# இல்லத்தரசிகள் விரும்பும் பிரெஸ்டிஜ்



ஹோசூர் தொழிற்சாலையின் முன் தோற்றம்.

**1948**ஆம் ஆண்டு டி.டி.கே நிறுவனம் முதன் முதலாக பிரெஸ்டீஜ் - யு.கே.விலிருந்து பிரஷர் குக்கரை இறக்குமதி செய்து விற்பனை செய்து வந்தது. 1955ஆம் ஆண்டு டி.டி. லிமிடெட் கம்பெனி நிறுவப் பெற்று பிரஷர் குக்கர்கள் தயாரிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. முதலில், எளிதில் சூடு பரவும் அலுமினியம் குக்கர்களை பங்களூர் தொழிற்சாலையில் தயார் செய்தனர்.

இந் நிறுவனத்தின் வெற்றிக்கு, அவர்களின் தயாரிப்பில் பெரிதும் புதுமையையும், பாதுகாப்பு வசதிகளையும் மாறுபட்டு வரும் சூழ்நிலைகளுக்கு ஏற்பக் கவனம் செலுத்தித் தயாரித்து வருவது தான் என்றால் அது மிகையாகாது. தரக் கட்டுப்பாட்டில் சிறந்ததாக அமைந்த ஜிண்டால் அலுமினியம் இக் குக்கர்களுக்கு உபயோகப் படுத்தப்படுகின்றன. தற்போது தயாரிக்கப்படும் ஒவ்வொரு குக்கரிலும் ஐந்து மிக மிக முக்கியமான பாதுகாப்பு வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

1. அதிகப்படி நீராவி அழுத்தத்தை வெளிக் கொணர 'வெயிட் வால்வ்'

2. அப்படி ஒரு வேளை தவறி விட்டால்; உலோகப் பாதுகாப்பு வால்வ். ஒரளவிற்கு மேலெழும் சூட்டினால் இந்த உலோக வால்வின் 'சலாய்' உருகி நீராவி அழுத்தத்தை வெளிக் கொணரும்.

3. மூடியில் இருக்கும் 'காஸ்கட்' அதிகப்படியான நீராவி அழுத்தத்தினால் நகர்ந்து சமன் செய்தல் (Gasket release system). இப் பாதுகாப்பு வசதியை இந் நிறுவனம் தான் தங்களுடைய ஆய்வுக் கூடத்தில் முதன் முதலில் கண்டறிந்து தங்கள் தயாரிப்புகளில் அறிமுகப் படுத்தியுள்ளனர். மக்களின் நலன் கருதி இவ் வசதி அனைத்து குக்கர் தயாரிப்பாளர்களும் பயன்படுத்த வென்று 'பேடன்ட்' செய்யப்படவில்லை என்பதை அறிய இந் நிறுவனம் தன் வியாபாரம் மட்டுமின்றி மனித நேயத்திலும் கொண்டுள்ள அக்கறை குறித்துப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

4. தற்போது அறிமுகப்படுத்தப்பட்டுள்ள 'காஸ்கட் ஆப்செட் டிவைஸ்' Gasket offset device.

5. இரட்டிப்பு பூட்டுள்ள மூடி. உள்ளிருக்கும் அழுத்தம் முழுவதுமாக குறையும்வரை திறக்க முடியாத இரட்டிப்பு பூட்டுள்ள மூடி.

இவ்வளவு பாதுகாப்பு வசதிகளினால், ஆரம்பக் காலத்தில் ஏற்பட்டு வந்த விபத்துகள் தவிர்க்கப்பட்டு அதிகமான பாதுகாப்பு உறுதி செய்யப்பட்டுள்ளது.

தொழிற்சாலைக்குத் தேவையான 'தயாரிப்பு சாமான்களைத்' தயாரிக்கும் டூல் ரூம்.



**மனைவியை விரும்புகிறவர்கள் (வாங்கும்) பிரெஸ்டீஜ் - ஐ வேண்டாம்னு சொல்ல மாட்டாங்க!**

டி.ஆர்.ஜி.



அலுமினிய குக்கர் பளபளக்க வகை செய்யப்படுகின்றது.

1983ஆம் ஆண்டு தமிழ் நாட்டி லுள்ள ஹோசூரில் முதல் தொழிற் கூடம் ஆரம்பிக்கப்பட்டது. அதில் முழுவதும் அலுமினியத்திலாலான குக்கர்களும், 'பிரஷர் பான்'களும் தயாரிக்கப்படுகின்றன. இவர்கள் தயாரிப்பிற்குத் தேவையான செய்முறை உறுப்புகள் அனைத் தும் மிக நவீன 'டூல் ரூம்'இல் இவர் களே தயாரித்துக் கொள்கிறார்கள். 1991ஆம் ஆண்டு இரண்டாவது தொழிற் கூடம் நிறுவப்பட்டது. முழுவதுமாக எவர்சில்வர் பிரஷர் குக்கர் தயாரிக்கவும், பாத்திரத்தில் ஒட்டாத 'நான் ஸ்டிக்' வகை சமை யல் பாத்திரங்கள் தயாரிக்கவும் இத் தொழிற் கூடம் பயன்படுத் தப்படுகின்றது. இந்திய அளவில் மிக நேர்த்தியாக, நவீனமாக அமைக்கப் பெற்றத் தொழிற் கூடம் என மத்திய அரசினால் பாராட்டப்பெற்று பரிசளிக்கப்பட் டுள்ளது. அவ்வளவு சிறப்பு மிக்க தொழிற் கூடத்தைக் காண ஆவல் கொண்டு ஹோசூர் பயண மானோம்.

முதலில் தேவையான கொள்ள ளவிற்குத் தகுந்தாற்போன்ற அலு மினிய வட்டத் தகடுகள் 'ஜிண்டால்' நிறுவனத்திலிருந்து தருவிக்கப் படுகின்றன. இவைகளை மிக அழுத்த 'டை' இயந்திரங்களிலிட்டு குக்கருக்குத் தேவையான அடிப் பாத்திரங்கள் தயாரிக்கப்படு கின்றன. அங்கிருந்து பாலிஷிங் இயந்திரத்தில் இரு வகையில் மெருகூட்டப்படுகின்றன. தேவை யான மூடியும் இதே வகையில் செய்யப்படுகின்றது. கைப்பிடி, காஸ்கட், உலோக வால்வ், சேஃப்டி வால்வ் என்று அசெம்ப்ளி லைனில் ஒவ் வொன்றாகச் சேர்க்கப்பட்டு அழ கான பெட்டியிலிடப்பட்டு விற் பனைக்கு வருகின்றன. ஒவ்வொரு பகுதியிலிருந்து (Batch) சில குக்கர் கள் அதன் தரக்கட்டுப்பாட்டு அறைக்கு எடுத்துச் செல்லப் பட்டு, எல்லாவிதப் பாதுகாப்பு வசதிகளும் முழுமையாகச் செயல் படுகின்றனவா எனச் சோதித்து, திருப்தி அடைந்த பிறகே வியா பாரத்திற்கு வெளிக் கொணரப் படுகின்றன.

எவர்சில்வர் குக்கர் தயாரிப்பில் சில மாறுதல்கள் உள்ளன. 'ஜிண் டால்' அலுமினியம் தேவையான அளவில் தருவதுபோல் தராமல் சேலம் Stainless Steel நீள Sheet ஆகவே அனுப்புகிறார்கள். எவர் சில்வர் வெப்பத்தை மிக மெது வாகக் கிரகிக்கும் தன்மையுடையது என்ற காரணத்தினால், வேகமாக கிரகிக்கக்கூடிய 'செப்புத்தகடுகள் பாத்திரத்தின் அடிப்பகுதியில் ஒட்டப்படுகின்றன. ஒட்டிய செப்புத்தகடுகள் பிரிந்துவிடாமல் இருக்கவும், வேறு எந்தவித ரசாயன மாறுதலுக்கும் உள்ளா காமல் இருக்கவும் இன்ஃப்ரா ரெட் ஒளிக்கற்றையினூடே' செலுத்தப் படுகின்றன. இப்படிச் சேர்க்கப் பட்ட அடிப்பாத்திரம் கழுவப் பட்டு 'கன்வேயர்' முறையில் உதிரிப் பாகங்களைச் சேர்க்க 'அசெம்ப்ளி லைனுக்கு அனுப்பப் படுகின்றன. அலுமினிய குக்கர் களுக்குச் சேர்ப்பது போலவே இங்கும் எல்லா உபகரணங்களும் சரியான முறையில் சேர்க்கப்பட்டு அழகிய அட்டைப் பெட்டியிடப் பட்டு வியாபாரத்திற்கு எடுத்துச் செல்லப்படுகின்றது. ஆரம்ப காலத்தில் நாளொன்றிற்கு சுமார் 400 குக்கர்கள் தயாரித்த இந்

மெருகூட்டும் இயந்திரம்.





...வர்சில்வர் குக்கரில் செப்புத் தகடு ஒட்டப்பட்டு, 'இன்ஃப்ரா ரெட்' அறைக்குள் அனுப்பப்படுகின்றது.



...திரி பாகங்கள் சேர்க்கப்படுகின்றன.



நிறுவனம் தற்போது சுமார் 2200 குக்கர்கள் தயாரிக்கின்றது.

ஒட்டுதல் தன்மையற்ற (Non stick) சமையல் பாத்திரங்கள் முழுவதும் தானியங்கி இயந்திரத்தினால் உருவாக்கப்படுகின்றன. அமெரிக்க நிறுவனமான டியூபாண்ட் (Dupont) ஒத்துழைப்புடன் தருவிக்கப்படும் 'டெப்லான்' பாத்திரங்களில் மிக அழுத்த வேகத்தில் ஒட்டப்படுகின்றது. பிறகு உஷ்ண அறைக்குள் செலுத்தப்பட்டு வெளிவரும்போது சமன் செய்யப்பட்ட ஒட்டுதல் தன்மையற்றப் பாத்திரங்கள் தயார். இவற்றிற்குத் தேவையானக் கைப்பிடி போன்ற உதிரிப் பொருட்களும் ஒரே லைனில் சேர்க்கப்பட்டு ஒரு முழுமையடைந்த பாத்திரமாக வெளிவருவதைக் காண மகிழ்ச்சியாய் இருக்கிறது. இந்நாட்டுத் தேவைக்கேற்ப இந்த இயந்திரத்தை இவர்கள் மாறுதலுடன் செயல்வடிவம் தந்துள்ளனர்.

இந்திய குக்கர் வியாபாரத்தில் 26 சதவிகிதமும், தென்னிந்தியாவின் வியாபாரத்தில் 70-லிருந்து 80 சதவிகிதமும் 'பிரெஸ்டீஜ்' பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. தற்போது 38 வகையானத் தயாரிப்புகள் இந்திய மக்களுக்கு விற்பனைக்குக் கொணரப்பட்டுள்ளன. 'எலக்ரோமேடிக்' என்ற மின்சாரக் குக்கர்களும், பெரிய விருந்துகளுக்குச் சமையல் செய்யத் தேவையான பெரிய அளவிலான குக்கர்களும் இப்போது தயாரிக்கிறார்கள். 5000 வியாபாரிகளையும் சுமார் 500 நிறுவன விற்பனை ஊழியர்களையும் கொண்டு 'பிரெஸ்டீஜ்' சிறப்புற விற்பனையாகின்றது. இவ்வாண்டு சுமார் 25 கோடி ரூபாய்க்கு 'பிரெஸ்டீஜ்' 'மந்த்ரா' (MANTRAA) என்ற பெயரில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது.

ஒட்டுதல் தன்மையற்ற சமையல் பாத்திரங்கள் தயாரிக்கும் தானியங்கி இயந்திரம்.

# காற்று வாக்கில்!...

☆ நாட்டின் ஏற்றுமதிகளை அதிகரிக்க, மிக முக்கியமான ஏற்பாடுகள் நடந்து வருவதாகத் தெரிகிறது. வங்கிகளும் அரசாங்க அதிகாரிகளும் கொண்ட ஒரு குழு, நியமனம் செய்யப்பட்டுள்ளது. ஏற்றுமதியாளர்களுக்கு எந்தெந்த முறையில் சலுகைகள் வழங்கினால் ஏற்றுமதிகள் அதிகரிக்கும் என்று பரிசீலனைகள் செய்யப்பட்டு வருகின்றன.

☆ வேலையில்லாத படித்த இளைஞர்களுக்கு ஒரு லட்சம் ரூபாய் வரை கடனுதவி வழங்க, பிரதம மந்திரி புதியதாக ஒரு திட்டத்தை உருவாக்கியுள்ளார். இதன் மூலம் சிறு தொழில்கள் பெருகவும், வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவும் வழி உண்டாகும் என எதிர்பார்க்கப்படுகிறது.

**PMRY [Prime Minister's Rojkar Yojhana]** வின்படி



தமிழ் நாட்டில் 3000 பேர்களுக்கும் மேலாக, மார்ச் மாதத்திற்குள் கடன் வழங்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

☆ வெளி நாட்டிலிருந்து, நம் நாட்டுத் தொழில்களுக்கு உதவும் வகையில் முதலீடு செய்பவர்களுக்கு உள்ள விதிகள், மேலும் தளர்த்தப்படவிருக்கிறது.

☆ ஈஸ்ட்ரன் மைனிங் மினரல்ஸின் பங்குகள், தற்போது ரூ. 47 ஆக இருக்கின்றது. இதன் அரையாண்டு முடிவுகள் மிக நல்ல முறையில் இருப்பதால், அடுத்த மூன்று மாதத்திற்குள் இதன் விலை, ரூ. 100 வரை உயரக் கூடும் எனப் பேசப்படுகிறது.

☆ பம்பாயைச் சேர்ந்த ஜோர்டு இன்ஜினிரிங், கரும்பு பயிர் சாகுபடி செய்வதற்கான இயந்திரங்களைத் தயாரிக்கும் ஒரே நிறுவனம். இதன் செயலாக்கம் மிக நல்ல முறையில் இருப்பதால் தற்போது, ரூ. 34 ஆக உள்ள இதன் பங்குகள் ரூ. 60 ஆக உயரக் கூடும் என எதிர்பார்க்கப்படுகிறது.

☆ கடந்த எட்டு வருடங்களாகத் தொடர்ந்து 22 சதவிகித டிவிடெண்டை வழங்கி வரும் பொன்னி சுகர்ஸின் செயலாக்கம் மிக நல்ல முறையில் இருந்து வருகிறது. ஒரிஸ்ஸாவில் இயங்கும், இதன் மற்றொரு தொழிற்சாலையின் உற்பத்தி சிறந்து விளங்குவதால், இதன் பங்குகள் விலைஅதிகரிக்கும்.

☆ ஜி.கே. ஸ்டீல்ஸ்ஸின் ஒரு பங்கு சம்பாத்தியம், ரூ. 10 ஆக உயரவிருக்கிறது. இதன் பங்கு ரூ. 50 லிருந்து ரூ. 60 வரை, ஏறக்கூடும் என எதிர்பார்க்கப்படுகிறது.

☆ குக்கர்களைத் தயாரிக்கும், இண்டோ மாட்ஷுஷிட்டா அப்ளையன்ஸஸ் **[Indo. Matshushita Appliences Ltd.,]** ன் ஏற்றுமதி உயர்ந்துள்ளது. ஜப்பானின் கூட்டுறவில் இயங்கும் இந்நிறு வனத்தை அடித்தளமாகக் கொண்டு, ஜப்பான் நிறுவனம் கிழக்கு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யத் தீர்மானித்துள்ளதால், இதன் பங்குகளை வாங்குவது சிறந்ததாகக் கருதப்படுகிறது.



☆ தமிழ்நாடு ஜெயபாரதத்தின் ஏற்றுமதி உயர்ந்து, ஒரு பங்கு சம்பாத்தியமும் ரூ. 10 ஆக உயரவிருப்பதால், இதன் பங்குகள் ரூ. 70 வரை உயரக் கூடும் எனப் பேசப்படுகிறது.

☆ இந்த்-ரத்னாவின் ரூ. 10 மதிப்புள்ள யூனிட்டுகள், ரூ. 15-16 ஆக உள்ளது. கடந்த ஆண்டு 27 சதவிகித டிவிடெண்ட் வழங்கிய இந்நிறுவனம், இந்த ஆண்டு 36 சதவிகித டிவிடெண்டை வழங்க முடிவு செய்துள்ளது. உரிமைப் பங்கு வெளியீடும், வரவிருக்கிறது. இதில் முதலீடு செய்வது, பாதுகாப்பானதோடு மட்டுமல்லாமல், மிகவும் பயனளிக்கக் கூடியதாகவும் இருக்கும்.



## குல்ஷன் குமாரின் புதிய திட்டங்கள்

இந்தியாவில் மிக அதிக அளவில் வருமானவரி கட்டுபவரான 'சூப்பர் கேசட்' குல்ஷன் குமார் விரைவிலேயேப் பல புதிய திட்டங்களில் முதலீடு செய்யவிருக்கிறார். இவர் ஹிமாசலப் பிரதேசத்தில் பீர் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றை நிறுவத் திட்டமிட்டுள்ளார். மேலும் தொலை தொடர்பு, மினரல் வாட்டர் உற்பத்தி, பீரிமாயம் சோப்பு தயாரிப்பு என பல தொழில்களில் ஈடுபடவிருக்கிறார் என்றும் பேசப்படுகிறது. இத் திட்டங்களுக்காகக் குல்ஷன் குமார் பங்கு வெளியீட்டிலும் ஈடுபடலாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

# ஆயுள் காப்பின் அவசியம்

எஸ். இராஜரத்தினம்

'ஆயுள் காப்பு முகவரைக் (Life Insurance Agent) கண்டாலே ஓடி ஒளியும் காலம் ஒன்று இருந்தது. ஆயுள் காப்பு எடுத்துக் கொள்வதே ஓர் அமங்கலமான ஒன்று என்றும், அதுவே சில துயரச் சம்பவங்களுக்கும் காரணம் ஆகலாம் என்று நினைப்பவர் பலர் இருந்தனர். ஆயினும் இன்று அதன் அவசியத்தை உணராதவர்கள் மிகச் சிலரே.

வாழ்க்கை நிலையில்லாதது என்பதால் எதிர்பாராதவிதமாக மரணம் ஏற்பட்டால் ஒருவர் தனது குடும்பத்தினர் வாழ வகை செய்ய வேண்டியது கடமை என்பதை அனுபவத்தால் இன்று பலரும் உணர்ந்து இருக்கின்றனர்.

### இன்ஸ்ஷ்யூரன்ஸ் குடும்பப் பாதுகாப்பு முதல் தேவை

சம்பாதிக்கும் எவரும் தமது குடும்பத்தினரின் நலனுக்கு மிக அதிகப்படியாக இல்லாவிட்டாலும் ஓரளவு ஆயுள் பாதுகாப்பு செய்வது அவசியமாகிறது. எந்த அளவிற்குச் செய்ய வேண்டும் என்பதற்குக் கீழ்கண்ட அளவுகோல்களை வைத்து நிர்ணயம் செய்யலாம்.

1. குறைந்த பட்சம் குடும்பத்தை நடத்திச் செல்வதற்கு எவ்வளவு வேண்டும்?

2. இன்றைய வருமானத்தில் அதிகப்படியான சேமிப்பில் பாதுகாப்புக்கு எவ்வளவு ஒதுக்கி வைத்துக் கொள்ள முடியும்?

3. இதனால் வரும் வருமான வரியில் வருமான வரித் தள்ளுபடியைக் கழித்துப் பார்த்தால் நாம் எவ்வளவு அதிகமாகச் சேமிக்க முடியும்?

### இளம் வயதில் சேமித்தலே நலம்

சேமிக்கத் தொடங்கும் காலத்திலேயே ஓரளவிற்கு ஆயுள் பாதுகாப்பு எடுத்து அதை அதிகப்படுத்துவது நலம். நீண்டகால பாலிசி எடுக்கும்போது சந்தாத் தொகை குறைகிறது. அதனால் ஒரு குறிப்பிட்ட அளவு சந்தாவிற்கு மிக அதிகப்படியான அளவிற்கு பாதுகாப்புச் செய்ய வேண்டுமானால் இளமையில் செய்வது தான் சிறந்தது.

### வரிச்சலுகை ஒரு நல்ல சலுகை

ஆயுள் பாதுகாப்புக்குச் செலுத்தப்படும் சந்தாத் தொகையில் 20% வரித் தள்ளுபடியாக நாம் கட்ட வேண்டிய வரியிலிருந்து கழிவாகப் பெறலாம். அதனால் இதைக் கணக்கில் கொண்டு பார்க்கும்போது ஆயுள் பாதுகாப்பின் விலை அதிகம் என்று சொல்ல முடியாது. ஒருவர் பாலிசி காலம் முழுவதும் உயிரோடு இருந்தால் பாலிசி முடிவுற்ற நிலையில் அவருக்குக் கிடைக்கும் வருமானம் மற்ற முதலீடுகளோடு ஒப்பிட்டால் குறைவாகவே தோன்றும். ஆயினும் உயிர் அபாயம் ஒரு பக்கம், வரித் தள்ளுபடி மறுபக்கம் என்று காணும்போது அந்த வருமானத்தை மிக குறைவாகக் கொள்ள முடியாது. அத்துடன் லாபத் தொகையுடன் (with Profits) பாலிசிகளில் சந்தாத் தொகைச் சிறிதளவே கூடினாலும் அதிக காலம் வாழ்ந்தால் ஒரு கணிசமானத் தொகை கிடைக்கும்.

ஆயுள் பாதுகாப்பு சந்தாத் தொகையை வருடாந்தரம் ஆகவோ, வருடத்திற்கு நான்கு முறையாகவோ, மாதந்தோறுமாகவோ கட்ட முடியும். சில நிறுவனங்களில் கூட்டுத் திட்டத்தின் கீழ் சம்பளத்தில் இருந்து கழிவு செய்து கட்டுவதற்கும் வசதியுண்டு. அந்த நிறுவனத்தைச் சார்ந்த வைப்பு நிதியிலிருந்து அதன் மூலம் கூடக் கட்டலாம். அப்படிக் கட்டினால் அதற்குப் பிரத்யேகமாக வரித் தள்ளுபடி கிடைக்காது.

### பலவகை பாதுகாப்புத் திட்டங்கள்

நமது நாட்டில் ஆயுள் காப்பீட்டுக் கழகம் (LIC) ஒரு பொது அரசு நிறுவனமாக உள்ளது. ஆயினும் சேமிப்புக் காலத்தில் பலருடைய பல விதமானத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் பல திட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன. முழு ஆயுள் காலத் திட்டத்தின் கீழ் சந்தாத் தொகையை ஆயுட் காலம் முழுவதும் கட்டவேண்டும். குடும்பத்தினருக்கு மட்டுமே பயன்படக் கூடிய திட்டம் இது. ஆயினும் இவைகளில் ஒரு வகை குறிப்பிட்ட வயது வரை மட்டும் கட்டுவதற்கு வழியுண்டு. ஆயினும் தொகை சந்ததியினருக்கு மட்டுமே.

ஒரே தொகையாகக் கட்டும் பாலிசிகூட உண்டு. உயிருள்ள வரை வருமானம் தந்து சந்ததியினருக்கும் ஒரு தொகை கிடைக்க வழி செய்யும் வகைகள் கூட உண்டு.

முழு ஆயுள் பாதுகாப்புத் திட்டத்தை 5 வருடத்தில் வேறு திட்டத்திற்கு மாற்றிக் கொள்ள முடியும். அப்படி மாற்றாவிட்டால் எழுபது வயது வரை சந்தா கட்டவேண்டிய அவசியமாகிறது. பொதுவாக ஒருவர் தனது ஓய்வு காலம் ஆரம்பிக்கும் காலத்தில் முடிவுறும் பாலிசிகள் எடுக்கலாம். ஓய்வு காலத்திற்குப் பின் வருட வருமானமாகக் கொடுத்து, பின் சந்ததியினருக்கு முதல் தொகை போகும் முறையில் 'பீமாஸ் சஞ்சய்', 'ஜீவன் மித்ரா' போன்ற பாலிசிகள் உள்ளன. முழுத் தொகையும் பாலிசி காலம் முடியும் போது ஒரேயடியாக வராமல் மூன்று தடவையாகத் தவணை முறையில் பெறுவதற்குள்ள பாலிசிகளும் உண்டு.

குழந்தைகளின் திருமணம், படிப்பு இவற்றுக்கு பாலிசிதாரர் இறந்தால் உபயோகப்படும் முறையில் உள்ள திட்டங்களும் உள்ளன. சில வருடங்களுக்கு மட்டுமே மிக அதிகப்படியான

சந்தாத் தொகையும், பின்னர் குறைந்த அளவிலே அல்லது சந்தாத் தொகை இல்லாமலே' உள்ள திட்டங்கள் உள்ளன. திரைக் கலைஞர்கள், விளையாட்டு வீரர்கள், வெளிநாட்டில் குறுகிய கால வேலைத் திட்டங்களில் செல்வோர் முதலியவர்களுக்கு இத் திட்டம் பயன்படும்.

இருவர், அதாவது கணவன், மனைவி பொதுவாகச் சேர்ந்து எடுத்துக் கொள்ளும் பாலிசிகளும் உள்ளன. குழந்தைகளுக்கு வயது 18 அல்லது 21 வரும் வரை அல்லது அவர்களுடைய நலனுக் காகவும் பல பாலிசிகள் உள்ளன.

விபத்தினால் ஏற்படும் மரணத் திற்கு இரட்டிப்புத் தொகை கொடுப்பதற்குச் சிறிதளவே அதிக மானச் சந்தாத் தொகை செலுத்தி னாலே போதும். இன்றைய வாழ்க்கை முறையில் இதுகூட அவசியமாகலாம். ஒரு சில பாலிசிகளில் பிராணோபாயமின்றி விபத்தின் காரணமாகத் தொழிற் திறன் பாதிக்கப்பட்டால் அதன் பின்னர் சந்தாத் தொகை கட்ட வேண்டிய அவசியம் இல்லாமல் அல்லது கட்டவேண்டிய ஒரு பகுதியை விட்டுக் கொடுக்கும் திட்டமும் உண்டு. சாதாரணமாக, மருத்துவப் பரிசோதனைக்குப் பின்னர்தான் ஒரு பாலிசி கொடுக் கப்படும். ஆயினும் தனரக்ஷா, தனவிருத்தி போன்ற ஒருசில வகைகளுக்கு இது கூடத் தேவை யில்லை.

தமது ஊதியத்திற்கும், தேவைக்கும், திறனுக்கும் ஏற்ற வகையில் ஒரு திட்டத்தைத் தேர்ந்தெடுத்து அந்தத் திட்டத்தின் படி சந்தாத் தொகையை உரிய காலத்தில் செலுத்தி அதைக் காலாவதியாகாமல் வைத்திருப் பது ஒவ்வொரு குடும்பத் தலை வருக்கும் உரிய கடமை. ⚬

# நிறுவன நியூஸ்

## ஸ்டேட் பாங்க் மியூச்சுவல் திட்டம்

*ஸ்டேட் பாங்க் தலைமை ஜெனரல் மானேஜர் திரு கோமதி நாயகம் ஒரு புதிய திட்டத்தை அறிமுகப்படுத்தி உள்ளார். எஸ்.பி.ஐ. மியூச்சுவல் ஃபண்ட்ஸ் திட்ட அடிப்படையில் இது மேலும் ஒரு புதிய திட்டம்.*

*வருவாய் அதிகரிப்புத் திட்டமான 'மேக்னம் ரைசிங் இன்கம்' திட்டம் பற்றித் திரு கோமதி நாயகம் விளக்கும்போது, இதில் முதலீடு செய்தால் மற்ற திட்டங்கள்போல நல்ல வருமா னத்தைத் தரும். முதலீட்டி லிருந்து வரும் லாபம் வருடா வருடம் அதிகரித்துக் கொண்டு செல்லும்.*

*முதலீட்டாளர்கள் ஒரு மேக்னத் திற்கு 10 ரூபாய் பணம் செலுத்தி வாங்கிக் கொள்ளலாம். குறைந் தது 100 மேக்னம் விண்ணப்பிக்க வேண்டும். அதிகபட்சம் எத்தனை மேக்னம் வேண்டுமானாலும் உரிய தொகை செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம். உச்ச வரம்பு இல்லை.*

*வருமான வரி சட்டத்தின் 80 மற்றும் 48 பிரிவுகளின்படி வரி விலக்கும் உண்டு. மொத்த முத லீட்டுத் தொகை ஏழு ஆண்டு களுக்குப் பின் முழுத் தொகை யாகப் பெற்றுக் கொள்ளத் தக்கது.*

*எஸ்.பி.ஐ. மியூசுவல் ஃபண்ட் பம்பாயைத் தலைமையகமாகக் கொண்டு இயங்கி வருகிறது. முதலீட்டாளர்களுக்கு நல்ல முறை யில் சேவை செய்வதற்காக இந்தியா முழுவதும் 12 முக்கிய நகரங்களில் கிளைகள் உள்ளதாக வும், கிளைகள் அனைத்தும் கம்ப் யூட்டர் மூலம் ஒருங்கிணைக் கப்பட்டுச் சேவை புரிவதாகவும் திரு. கோமதி நாயகம் தெரி வித்தார்.*

## வாகனத் துறையில் எம்.ஜி.எம். குரூப் முதலிடம்

*ஒரு வாகனத்துக்குப் பொருத்தமான, தரமான உதிரிப் பாகங்களைப் பொருத்திவிட்டால், அந்த வாகனங்களின் ஆயுட்காலம் பல வருடம் நீடிக்கும்.*

*எம்.ஜி.எம். குரூப் நிறுவனம் ஆல் போல் தழைத்து வளரக் காரணமாக இருந்ததே அவர் களுடையப் போக்குவரத்து வாகனத் துறைச் சேவைதான். 35 ஆண்டுகளாக இந்த அனுபவம் அவர்களுக்கு உண்டு.*

*பெருங்குடியில் டயரைப் பழுது பார்க்கும் 'டயர் ரீ டிரேடிங்' தொழிற் கூடமும் இயங்கி வரு கிறது. இத் தொழிற்கூடம் 24 மணி நேரமும் இயங்கி வருகிறது.*

*மீன் பிடிப்படகுகளுக்கான எஞ் சின் மற்றும் உதிரிப் பாகங்களும் எம்.ஜி.எம்.மில் உற்பத்தி ஆகின் றன.*

*எம்.ஜி.எம். கிரெடிட் கார்டுகள் வைத்திருப்பவர்கள் முன்பணம் செலுத்தத் தேவையில்லை, உதிரிப் பாகங்களை வாங்கிச் செல்லலாம். 10 சதவிகித சிறப் புத் தள்ளுபடியும் உண்டு.*

*தவணை முறையிலும் கடனாக வழங்குகிறார்கள். உதிரிப் பாகங் கள் உடனுக்குடன் வாடிக்கை யாளர்களுக்குக் கிடைக்க ராயபுரம், மயிலாப்பூர், மாம்பலம் ஆகிய இடங்களில் கிளை நிறுவனங்களும் உண்டு.*

## தேவ்ரியா இண்டர்மீடியேட்ஸ்

*துணிகளுக்கானச் சாயங்கள், மற்றும் ரசாயனப் பொருட்களின் தயாரிப்பு நிறுவனமான தேவ்ரியா இன்டர்மீடியேட்ஸ் லிமிடெட் நிறுவனத்தாரின் ஓர் வருங்காலத் திட்டம்: வினில்சல் போன்ற சாயத்துக்கு வேண்டிய ரசா யனத்தை உற்பத்தி செய்யும் ஆலையைத் துவங்க உத்தேசித்து அதற்காக நிதி திரட்டும் பொருட்டு பங்கு மார்க்கெட்டில் நுழை கிறார்கள். ரூபாய் 10 மதிப்புள்ள 23 லட்சம் சம பங்குகளை வெளி யிடவிருக்கிறார்கள்.*

*நம் நாட்டில் துணிவகைகளின் உற்பத்தி பெருகி வரும் நிலையில் இவர்கள் பணி, சேவையும் லாபமும் சேர இருக்கும்.*

# நிறுவன நியூஸ்

## பூபேந்திரா இண்டஸ்ட்ரீஸ்

மஹாராஷ்டிராவைச் சேர்ந்த பூபேந்திரா இண்டஸ்ட்ரீஸ், தனது விரிவாக்கத் திட்டங்களுக்காக மூலதன மார்க்கெட்டில் நுழைய விருக்கிறது. இந் நிறுவனம், ரூ 10 முக மதிப்புள்ள 65 லட்சம் சாதாரணப் பங்குகளை டிசம்பர் மாதம் வெளியிடவிருக்கிறது. இதன் மூலம், தனது தேவையான ரூ. 1148.60 லட்சத்தில் ஒரு பகுதியைப் பெறவிருக்கிறது. இந் நிறுவனம் இரும்புப் பொருட்கள், கட்டடப் பணிகளுக்குத் தேவையானச் சாமான்கள், ரெசின் சம்பந்தப் பட்டப் பொருட்கள், மார்பிள் ஆகிய வற்றை உற்பத்திச் செய்வதோடு, ரியல் எஸ்டேட், ஹோட்டல்கள் போன்றத் துறைகளிலும் ஈடுபட்டு வருகிறது. இதன் வியாபார உற்பத்தி ஜூலை 1994இல் தொடங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. கடந்த மூன்று ஆண்டுகளில் இதன் விற்று முதல் ரூ. 20.63 கோடியிலிருந்து ரூ. 52.50 ஆக உயர்ந்துள்ளது.

## ரோச்சி விலகல்

உலகின் முதல் பத்து மருந்துக் கம்பெனிகளில் ஒன்பதாவது இடத்திலிருக்கும் சுவிஸ் நாட்டைச் சேர்ந்த ரோச்சி (Roche) நிறுவனம் தனது இந்தியக் கூட்டு நிறுவனமான 'ரோச்சி புரொடக்ட்ஸி'லிருந்து விலகவிருக்கிறது. இந்திய ரோச்சியின் இயக்கம் மந்த நிலையில் இருந்து வருவதே இதன் காரணம்.

## சீமென்ஸ் இந்தியாவின் புதிய திட்டம்

சீமென்ஸ் ஏ.ஜி. ஜெர்மனியின் இந்திய நிறுவனமான சீமென்ஸ் இந்தியா, ஆப்டிகல் ஃபைபர்களின் உற்பத்திக்கானப் புதியத் திட்டம ஒன்றைத் தீட்டி வருகிறது. சீமென்ஸ் ஏ.ஜி. ஜெர்மனியின் தொழில் நுட்பத்தைப் பெற்று இதற்கானத் தொழிற்சாலை ஒன்றை ஔரங்காபாதில் நிறுவ இருக்கிறது. ரூ. 30 கோடி செலவில் நிர்மாணிக்கப்படும் இத் தொழிற்சாலையின் மூலம் ஆண்டொன்றுக்கு 40,000 கி.மீ. ஆப்டிகல் ஃபைபர்கள் உற்பத்தி செய்ய இயலும்.

சீமென்ஸ் ஜெர்மனி, ஆப்டிகல் ஃபைபர்களின் உற்பத்திக்குப் பெயர் பெற்றது. இதற்கென அமெரிக்கா, துருக்கி, ஜெர்மனி, ஆஸ்திரேலியா மற்றும் கிரீஸ் ஆகிய இடங்களில் பெரிய தொழிற்சாலைகளைக் கொண்டுள்ளது.

## ஏ.ஸி.ஸி அமெரிக்கக் கூட்டுறவு

அமெரிக்காவைச் சேர்ந்த அலுமினியம் கம்பெனி (ALCOA) அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனி (ACC) யுடன் இணைந்து இந்தியாவிலுள்ள செராமிக் தொழிற்சாலைகளுக்கும், ரிஃப்ராக்டரிகளுக்கும் தேவையான அலுமினிய அடிப்படைப் பொருட்களை உற்பத்தி செய்வதற்கான ஒப்பந்தம் ஒன்றினை மேற்கொண்டுள்ளது. இப் புதியத் திட்டத்தில் ALCOA 60 சதவிகிதமும் ACC 40 சதவிகிதமும் பங்கேற்று, ஆண்டொன்றுக்கு 10,000 டன்கள் உற்பத்தித் திறன் கொண்ட தொழிற்சாலை ஒன்றை மேற்கு வங்காளத்திலுள்ள ஃபால்டா (Falta) எனும் இடத்தில் அமைக்கத் திட்டமிட்டுள்ளன. இத் தொழிற்சாலை 1994ஆம் ஆண்டின் பின்பாதியிலிருந்து செயல்படக் கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## பிராக்டர் & கேம்பிள்

அமெரிக்க நிறுவனமான பிராக்டர் & கேம்பிள், தனது உற்பத்திப் பொருள்களின் விலையைக் குறைக்க உத்தேசித்துள்ளது. போட்டி நிறுவனங்களின் விலை குறைவான உற்பத்திப் பொருட்களின் ஆக்ரமிப்பைத் தகர்க்கவே இந்த முடிவு. மேலும் இந் நிறுவனம் செலவுகளையும் கட்டுப் படுத்திக் கொள்வதற்காக, தனது மனித சக்தியையும் 12 சதவிகிதம் குறைக்கவுள்ளது. அடுத்த மூன்று ஆண்டிற்குள் தனது 30 தொழிற்சாலைகளையும் மூடிவிட முடிவு செய்துள்ளது. இதனால் 1996ஆம் ஆண்டில் வரிக்குப் பிந்தைய லாபமாக சுமார் 500 மில்லியன் டாலர்கள் கிடைக்கக் கூடும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

## ஐரோப்பாவில் கார் விற்பனை

ஐரோப்பாவில் தொடர்ந்து ஆறு மாதங்களாகக் கார் விற்பனை மிகவும் குறைந்துள்ளது. ஐரோப்பிய ஆட்டோமொபைல் உற்பத்தியாளர்களின் கூட்டுறவுச் சங்கத்தின் கூற்றுப்படி வோல்ஸ்வேகன் 20 சதவிகிதமும், பி.எம்.டபிள்யூ 22.7 சதவிகிதமும், மெர்சிடஸ் 19.2 சதவிகிதமும், இத்தாலிய ஃபியட் எஸ்.பி.ஏ. 24.4 சதவிகிதமும் விற்பனையில் இறங்கியுள்ளன.

## ஜப்பான் ஏர்லைன்ஸும் ஏர்வேஸும்

ஜப்பான் ஏர்லைன்ஸும், ஆல் நிப்பான் ஏர்வேஸும் இனி இணைந்து செய்படுவதற்கான ஒப்பந்தத்தினை ஏற்படுத்திக் கொண்டுள்ளன. இரண்டு நிறுவனங்களின் செலவுகளையும் கட்டுப்படுத்துவதுதான் இந்த ஒப்பந்தத்தின் நோக்கமாகும். இனி வாங்கவிருக்கும் போயிங் 777 விமானங்களின் பராமரிப்பு, உபரி இயந்திரங்கள், வேர்ஹவுஸ் அனைத்திற்குமானப் பொறுப்புகளையும் இரு நிறுவனங்களுமே பங்கிட்டுக் கொள்ளும். ❀

# நான்

'கர்மயோகி'



மனித சுபாவத்தைப் பற்றியும், வாழ்வின் இரகசியங்களைப் பற்றியும் மனிதன் அறியாத தில்லை என்ற கருத்தை, "எவ்வளவு உயர்ந்த கருத்தை ஒருவர் இன்று ஞானோதயத்தால் கண்டுபிடித்தாலும், பழைய ஏடுகளைப் புரட் டிப் பார்த்தால், எங்காவது அதை யாராவது, எப்பொழுதாவது சொல்லியிருப்பார்கள்" என்று மேதைகள் சொல்வது வழக்கம். அது உண்மை. மகாவிஷ்ணு மீது கொண்டுள்ள பக்தியில் தன்னை மிஞ்சியவரில்லை என்று நாரதர் நினைத்ததையறிந்து, பூவுலகில் ஏர் ஓட்டிக் கொண்டிருக்கும் ஒரு குடியானவனைக் காட்டி, அவனே தனக்குச் சிறந்த பக்தன் என்று நாரதரிடம் சொல்லி, அதையும் ஒரு சோதனை மூலம் நிரூபித்தார் என்று ஒரு கதையுண்டு. பக்தியுயர்ந்தது என்பதைப் பயன்படுத்தி, நான் சிறந்த பக்தன் என்று தன்னையும், தன்னில் நிறைந்துள்ள அகங்காரம் என்பதையும் உயர்த்துவது மனித குணம். இது மனிதனில் ஊறிப் போனது. மாற்ற முடியாது. மனிதன் வேறு, அவன் அகந்தை வேறில்லை. அகந்தை யுடன் அவன் ஒன்றிவிட்டான் என்பது தொன்று தொட்டு நாமறிந்தது.

யோகம், தவம், பக்தி, பூஜை, சிஷ்ய பாவம், ஞானம், சேவை ஆகியவற்றை நாடினால், 'நான்' அழிய வேண்டும். அது அழியும் அள வுக்கே நமக்குப் பலனுண்டு என்பது அஸ்திவார மான தத்துவம். இவற்றை மேற்கொண்டவரும் நான் சிறந்த யோகி, என் தவம் பெரியது, என் பக்தி சிறந்தது, பூஜையில் வல்லவன் நான், எனக்கு மிஞ்சிய சிறப்பான சிஷ்யனில்லை, ஞானமே பக்தியைவிட உயர்ந்தது. அதனால் நான் அதை மேற்கொண்டேன், எனவே நான் சிறந்தவன், என்னைப் போல் சேவை செய்ய யாரிருக்கிறார்கள் என்று உயர்ந்த தத்துவங் களைப் பாராட்டுவதன் மூலம், 'நான்' முந்திக் கொண்டு வரும். 'நான்' வந்தால், அது எந்த உருவத்தில் வந்தாலும், அங்கு இறைவனுக் குரிய சிறப்பு எதுவுமிருக்காது.

'நான்' வரும் ரூபங்களை அறிய ஆன்மாவில் உண்மையிருக்க வேண்டும். உண்மையிருந்தால் 'நான்' மேலே வருகிறதா எனத் தெரியும் என்கிறார் அன்னை. பூரண யோகத்தின் முதல் நிபந்தனை 'நான்' அழிவது.

**அன்னையை வழிபட, வழிபடுவதால் பலன் பெற முக்கியமாகத் தேவைப்படுவது அடக்கம். 'நான்' என்பது பின்னணிக்குப் போய், அழிந்து, மறைய வேண்டும். அதன் மற்ற ரூபங்களும் அழிய வேண்டும்.**

அன்னையை வழிபட ஆரம்பித்தபின் காரியங் கள் தடையின்றி நடக்கும். ஏற்கனவே தடையாக இருந்தவை இப்பொழுது தானே நடக்கும். அப்படியும் குறையாகியுள்ள காரியங்களுக் காகப் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தால், முதற் பிரார்த்தனையிலேயே அது பூர்த்தியாகும். தொடர்ந்த பிரார்த்தனையால் பூர்த்தியாகா தவை இல்லை என்பது அனுபவத்தில் கண்ட வுடன், 'நான்' வீரியம் கொண்டு, எழுந்து, தன்னை அலங்கரித்துக் கொண்டு, ஆர்ப்பாட்ட மாக மனதில் பறைசாற்றுவது என்னவென் றால்,

**என் பிரார்த்தனை தவறாது**

என்பதாகும். அடுத்த நிமிஷம் நிலைமை தலை கீழே மாறும். பிரார்த்தனை பலிக்காது. சில ருக்கு எல்லாப் பிரார்த்தனையும் பலிக்கும், முக்கியமான பிரார்த்தனை கிணற்றில் கல் போட்டாற் போலிருக்கும். பிரார்த்தனையை அதிகப்படுத்தினால், உள்ள சிக்கல் அதிக மாகும். இதுவரை எல்லாம் பலித்தது, இப் பொழுது இப்படி ஒரே அடம் செய்வது போல் காரியம் நகரவில்லையே, அன்னைமீது என்

நம்பிக்கையே ஆட்டம் கண்டுவிடும் போலிருக்கிறதே என்று மீண்டும் தியானம், பிரார்த்தனை, சமர்ப்பணம் ஆகியவற்றை மேற்கொண்டால், பிரச்னை அசையாது. மேலும் கடினமாகும். இதுபோல் நடந்தால் 'நான்' தீவிரமாக முன்னுக்கு வருகிறது எனப் பொருள்.

வெற்றியும், தோல்வியும் நமக்குரியது, மனித வாழ்வுக்குரியது. மனிதன் ஒரு காரியத்தை மேற்கொண்டால், நிச்சயமாக வெற்றி பெறுவேன் என்று சொல்ல முடியாது. அது அவன் கையில் இல்லை. அன்னைக்குத் தோல்வியில்லை. அன்னையை வாழ்வில் ஏற்றுக்கொண்டவருக்குத் தோல்வி என்பதே கிடையாது என்பது ஒருவர் தன் வாழ்வில் கண்டவுடன், அன்னைக்குத் தோல்வியில்லை என்பதை மாற்றி, என் பிரார்த்தனைக்குத் தோல்வியில்லை, எனவே எனக்குத் தோல்வியில்லை என்கிறார். இதனால் நான் முன்வருகிறது. அதன் பின் தோல்வி ஆரம்பமாகும்.

நானெனும் அகந்தையும், மனிதனும் இரண்டறக் கலந்துவிட்டதால், எங்கு 'நான்' முனைப்போடு கிளம்பி வருகிறது என்பதைக் காண்பது சிரமம். இதில் பல நிலைகள் உள்ளன. அவை,

1. தன் அகந்தை 'நான்' என்ற உருவில் நம் செயலில் வெளிவருவதை அறிய முடியாதவர்.

2. வாயால் பேசும் வரை தன்னையறியாமல் பேசி, காரியம் என வரும்பொழுது சுயநலம் வெளிப்பட்டு, வெளிப்படுவது தெரிந்து, அதையே விரும்பிப் பின்பற்றுபவர்.

3. 'நான்' என்பதே சரி, அதுவே நிலைபெற வேண்டும் என்று நம்புபவர்கள்.

4. இலட்சியமாகப் பல ஆண்டுகள் பேசி, பேச்சு செயல்பட வேண்டிய நேரம் வந்தபொழுது, தானும் மற்றவர்களைப் போல இருப்பதை முதன் முறையாகக் காண்பவர்கள்.

5. 'நான்' என்பதை வலியுறுத்திப் பலன் பெறுவதை சாமர்த்தியம் என நினைப்பவர்கள், நினைத்ததை வெளியிட்டுப் பெருமைப்படுபவர்கள்.

நண்பர்கள் இருவர். இருவரும் சுயநலமானவர்கள். இரகசியமானவர்கள். ஒருவர் இரகசியம் 100% அடுத்தவர் இரகசியம் 60%. சேர்ந்து செய்யும் வேலையில் அடுத்தவருக்கு ஒரு வேலையைப் பற்றியும் சொல்லாதவரிலும், அடுத்தவர் 5,6 விஷயங்களைச்சொல்லி,7ஆவது விஷயத்தை மறைத்தபொழுது, 'என்ன மனிதன். இதைக்கூடச் சொல்லவில்லை' என்றார். குழந்தைகளை வற்புறுத்தி உடம்புக்கு நல்லது என்று சொல்லி, 5,6 பேரைச்சாப்பிட வைத்த பொருளை, தான் சாப்பிட ஆரம்பித்தபொழுது, "இப்படியிருக்கும் என்று எனக்குத் தெரியாது, எப்படி இதைச் சாப்பிட முடியும்" என்று சொல்லிச்சாப்பிடாமலிருந்தார் ஒருவர். அகந்தையை அழிப்பதை அடிப்படையாகக் கொண்ட ஸ்தாபனத்தின் முக்கியஸ்தர், பிறர் சொல்வதை தான் ஏற்க வேண்டிய ஸ்தாபன நிலைமை ஏற்பட்டவுடன் "என்னால் ஒருவர்க்குக் கீழ்ப் படிந்து செயல்பட முடியாது" என்றார். எச்சில் என்பது மூடநம்பிக்கை என்று பலநாள் பேசியவர், ஒரு சந்தர்ப்பத்தில் மற்றொருவர் எச்சிலிட்ட டம்ளரில் குடிக்க நேரிட்டபொழுது, "அட, சனியனே, இதை மனிதன் சாப்பிட முடியுமா?" என்றார். திருட்டுக் கூட்டத்தில் ஒருவர் பிறரை அணுகிக்காரியங்களை மேற்கொள்ளும்பொழுது தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு, "எங்கள் கூட்டத்தில், என்னைத் தவிர அனைவரும் திருட்டுப் பசங்கள்" என்று கூறி நம்பிக்கை ஏற்படுத்த முயன்றார். மானேஜராக வேலைக்குச் சேர வந்தவர் முதலாளியைப் பார்த்து, "இந்த பாக்டரியை 5 வருஷத்திற்குப் பின் எனக்கே கொடுத்துவிடுங்கள்" என்று கேட்டார்.

நாட்டின் ஊழலைப் பற்றி நாலு பேர் பேச ஆரம்பித்தபொழுது, இனி தலைவராக வர லஞ்சம் வாங்காத ஒருவரைக் கண்டுபிடிக்க முடியுமா என ஒருவர் கேட்டார். பதிலுக்கு "அப்படிப்பட்ட ஒருவரை நான் அறிவேன்" என்று அதில் ஒருவர் சொல்லியபொழுது யாரை நாட்டில் அவர் குறிப்பிட விரும்புகிறார் என அனைவரும் தெரிந்து கொள்ள விரும்பினர். அவர் தன்னைப்பற்றி மிக அதிகமான நினைப்புடையவர் என அறிந்த மற்றொருவர், "உங்களைத்தானே அப்படிக் குறிப்பிடுகிறீர்கள்" எனக் கேட்டார். தன் உயர்வின் சிறப்பை அதிகமாக நினைப்பது மனித இயல்பு.

கூலிக்காரனுடைய மகன் படித்து, பட்டம் பெற்று, தொழில் நடத்தி, செல்வம் பெற்ற பொழுது தன் தகப்பனாருக்கு அவருடைய முதலாளியானவர் செய்த உதவியை ஆர்வமாக விவரித்தார்.

> என் தகப்பனாருடைய முதலாளிக்கு நிறைய நிலமுண்டு. ஒரு ரைஸ்மில் உண்டு. அவருக்கு நாலு பிள்ளைகள். பாகம் பிரித்தபொழுது எல்லாப் பிள்ளைகளும் ரைஸ் மில் யாருக்கு என்று நினைத்தனர். நிலத்தைப் பிரித்துக் கொடுத்த தகப்பனார், ரைஸ் மில்லை உனக்குக் கொடுக்க விருப்பப்படுகிறேன். இன்று முதல் நீயே அதற்கு முதலாளி. அதற்கு ஒரு விலை நிர்ணயம் செய்து, அதிலிருந்து வரும் வருமானத்தில் கொஞ்சம்

கொஞ்சமாக அதை நாளடைவில் கொடுத்துவிடு என்றார். அவருடைய பிள்ளைகள் ஆட்சேபித்த பொழுது, அவனும் எனக்கு ஒரு பிள்ளை என்று பதில் சொன்னார்.

தன் தகப்பனாரின் சேவை, விசுவாசம், அவருடைய முதலாளியின் பெருந்தன்மை ஆகியவற்றை ஆர்வமாக விவரித்தவர், தன் தம்பி படிப்பில்லாமலிருப்பதையும், தன் அண்ணன் முன்னுக்கு வர சிரமப்படுவதையும், அவர்களுக்கு தான் ஒரு சிறிதும் உதவ முன் வராததும் தவறாகப் படவில்லை. அவர் மனப்பான்மை,

என் தகப்பனாருக்கு அவர் முதலாளி உதவியது சரி,

நான் அண்ணன் தம்பிக்கு உதவாதது சரி,

என்பதாகும். எல்லோரும் எனக்கு உதவ வேண்டும், நான் யாருக்கும் உதவக் கூடாது என்ற தன் நிலையைக் கண்டு அவர் வெட்கப்படும் நிலையிலும் அவர் மனம் இல்லை.

அடிக்கடி உன் பழைய கல்லூரி நண்பன் வீட்டுக்குப் போகிறாய், அவனுக்கு அடிக்கடி கடிதம் எழுதுகிறாய், இது என்ன விஷயம், ஒருவேளை அவன் உனக்கு உறவா என்று கேட்டவருக்கு, "அவன் எனக்குப் பண உதவி செய்கிறான். அதனால் போகிறேன். என்னை மடையன் என்று நினைத்தாயா? அந்த இலாபம் இல்லாவிட்டால், நான் ஏன் அங்கு போகிறேன்?" என்று பதில் சொன்னார். ஆதாயத்திற்காக நட்பைப் பாராட்டுவது அவருக்கு வெட்கமான காரியமாகத் தோன்றவில்லை. வேறு பல ரூபங்களில் இந்த 'நான்' ஒளிவு மறைவு இல்லாமல், இது வெட்கப்பட வேண்டியது என்பதையும் அறியாமல் கீழ்க்கண்டது போல் வரும்.

"நான் ஒரு புள்ளி போட்டேன். அது எப்படி நடக்காமல் போகும்?"

"என்னை யாரென்று நினைத்தாய், நானா, கொக்கா?"

"உங்கள் வீட்டில் நான் சாப்பிட்டால், அது உனக்கு ஆசீர்வாதம்"

"நான் வந்து போனால், உனக்கு நல்லது நடக்கின்றதா இல்லையா பாரு"

"என்ன மனிதர்கள், இவர்கள், நல்லெண்ணம் வேண்டாமா?"

இதுபோன்ற சுயநலம் மிகுந்த மனப்பான்மையை 'நான்' என்பதன் மூலமாக வெளியிடுவதை சிறுவர்கள் படம்பிடித்துக் காட்டுவது போல், கேலியாக, "கடவுளே, என்னை மட்டும் காப்பாற்று". "புலிக்குப் பயந்தவர்கள் என்மீது படுத்துக் கொள்ளுங்கள்" என்ற வாசகங்களால் குறிக்கின்றார்கள்.

ஒரு வீட்டில் டிரைவர் மாதத்தில் 5 நாள் லீவு எடுத்துக் கொள்கிறான். வண்ணான் அடிக்கடி துணிகளைத் தொலைத்து விடுகிறான். போட்ட Fan, Lightஐ வீட்டிலுள்ளவர்களும், வருபவர்களும் நிறுத்துவதில்லை. இது போன்ற அநேக காரியங்கள் தொடர்ந்து நடப்பதை அந்த வீட்டில் ஏற்கனவே வேலை செய்தவன் பார்த்துவிட்டு, "இந்த வீட்டில் நடக்கும் அநியாயம்; எந்த வீட்டிலும் நடக்காது. அநியாயம், பெரிய அநியாயம்" என்று சொன்னான். இவன் வேலையிலிருந்தபொழுது, மாதத்தில் 10 நாள் லீவு எடுப்பது வழக்கம். பிறகு அதுவும் அதிகமாக, மாதத்தில் 10 நாள் வேலைக்கு வந்த பொழுதும் சம்பளம் முழுமையாகக் கொடுத்தார்கள் என்பது இவனுக்கு மறந்து போகிறது. மனித இயல்பின் சட்டம்,

நான் செய்யலாம்.

அது எப்படி மற்றவர்கள் செய்யலாம் என்பதே.

ரயில்வே ஸ்டேஷனில் நின்றபொழுது இறங்கிக் கீழே போய் டிபன் சாப்பிட்டுவிட்டுவந்து திரும்பி வந்த பொழுது, தாங்கள் உட்கார்ந்த இடத்தில் மற்றவர்களிருப்பதைக் கண்டு, சண்டை போட்டு, எழுப்பி, திரும்பவும் உட்கார்ந்து கொண்டார்கள். எதிரிலிருந்தவர் இவர்களை யார் என விசாரித்தார். பூதான இயக்கத்தின் தொண்டர்கள் என்றார்கள். "ரயிலில் உட்கார்ந்த இடத்தை விட்டுக் கொடுக்க முடியாத நீங்கள் மற்றவரைத் தங்கள் நிலத்தைப் பிறருக்குத்தானம் செய்யச் சொல்கிறீர்களா?" எனக் கேட்டார்.

ஒருவன் தான் இலட்சியவாதி எனவும், பிறர் பொருளுக்கு ஆசைப்படாதவன் எனவும், எவருக்கும் கடன்பட்டதில்லை எனவும் தினமும் பறைசாற்றி வந்தபொழுது, மனைவி அவனை உட்காரவைத்து, அவன் கடன்பட்டவர் பட்டியலை ஒவ்வொன்றாய் அவன் வாய் மூலம் சொல்லச் சொன்னாள். 15 பேருக்குத்தான் பாக்கி என்று சொல்லிய பிறகும், "இதெல்லாம் வேறே. கணக்கில் சேராது. என் இலட்சியம் இது குறையாது" என்று வீறாப்பாகப் பேசியதாக ஒரு கதை.

ஒரு திட்டம் நாட்டில் பிரபலமானால், அரசியல்வாதி அதைத் தன் திட்டம் என்பார். IAS ஆபீசர் தன் திட்டம் என்பார். அங்குள்ள வல்லுநர் "நான் போட்டது அது" என்பார். சுமார் 15 பேர் அதைத் தன் திட்டம் என்பார்கள்.

உண்மையைக் கண்டுபிடிக்க முடியாது. ஒரு நல்ல விஷயத்தில் ஏதோ ஒரு பங்கிருந்தால் அதன் முழுப்பலனையும் "நான்" தனக்கே நாடும்.

நண்பரின் சுயநலத்தை மறைமுகமாகச் சுட்டிக் காட்ட சுயநலம், குறைவு, மாற்ற முடியாத சுபாவம் இவற்றைப் பற்றிய அன்னை கதை ஒன்றை அனுப்பியிருந்தார். பெற்றவர் கதையை ரசித்தார். பார்த்தவரிடமெல்லாம் அந்தக் கதையைச் சொன்னார். பல வருஷங்களுக்குப் பின் அனுப்பியவருடன் தன்னைப் பற்றிப் பேசும்பொழுது, அந்தக் கதையை பிரஸ்தாபம் செய்தார்கள். "உங்கள் மனநிலை அந்தக் கதை முழுவதும் பிரதிபலிப்பதால், பயன்படும் என அனுப்பினேன்" என்றார். அடுத்தவர் அதிர்ச்சியடைந்தார். தான் அப்பொழுது பேசியதெல்லாம் தன் நிலையை தனக்குணர்த்தியதால் கதை பொருத்தமானது என்று தெளிந்தார். "எத்தனையோ பேரிடம் சொன்னேன். அதுவே என் நிலை என எனக்கு இன்றுவரை புரியவில்லை" என்றார்.

நம் வாழ்வு முழுவதும் "நான்" என்பதால் நிறைந்தது. அதை உணருவதே கடினம். அது விலக்கப்பட வேண்டியது என்று உணருவது அதைவிடக் கடினம். விலக்குவது என்பது எளிதல்ல.

தன்னை உணர்ந்து, தன் குறைகளையறிந்து, அவை விலக்கப்பட வேண்டியவை என விரும்பி, விலக்கும் முயற்சியை மேற்கொள்வது தவ முயற்சி. அதை மேற்கொண்டு, அது பலித்தால், பலித்த அளவுக்கு, நாம் அழைக்காமல் அன்னை நம்மை நாடி வருவார். 'நான்' விலகிய இடங்களில் பிரச்னை வராது. பிரார்த்தனை தேவையில்லை.

**'நான்' என் வாழ்வில் நிரம்பியுள்ளது என்பதை ஏற்றுக்கொள்வதே உயர்ந்த அடக்க மனப்பான்மை. அது அன்னை போற்றும் மனப்பாங்கு.**

# தில்லியில் தமிழோசை!

## அதிசயப்பிறவி

அண்ணல் காந்தியடிகளின் பிறந்த நாள்விழா. தில்லி தமிழ்ச் சங்கத்தில் நான்கே வயதுச் சிறுவன் திருமூலநாதன் தன் திருக்குறள் நினைவாற்றலைப் புலப்படுத்தினான். சிலர் திருக்குறள் எண்ணைக் குறிப்பிட்டுக் குறளைக் கேட்டனர். கருவிலே திருபெற்ற தெய்விகக் குழந்தை டக்டக்கென்று திருக்குறளைக் கூறும் அழகினைக் கண்டு அனைவரும் அயர்ந்துவிட்டனர்! இந்த விழாவுக்குத் தலைமை வகித்த மத்திய அமைச்சர் தங்கபாலு இளவலுக்கு 'குறளரசு' என்ற பட்டத்தை வழங்கிக் கௌரவித்தார். 'ஞானக் குழந்தை' என்ற ஆசீர்வாதத்தைத் திருமூலநாதன் காஞ்சி ஜகத்குரு ஜயேந்திரரிடமிருந்து முன்பே பெற்றுவிட்டான். கூட்டத்துக்கு நடுவில் இருந்த இந்தத் தெய்விகப் பிறப்பைத் தனியே ஜயேந்திரர் அழைத்து ஆசி வழங்கியது குறிப்பிடத்தக்கது.



இரண்டரை வயதிலேயே பாலகன் திருமூலநாதன் சிவ புராணத்தை ஒலி இழை மூலம் கேட்டு அப்படியேத் திருப்பிச் சொன்ன அதிசயத்தைக் கண்டு பெற்றோர் தயாபரன் – நாகவல்லி தம்பதியினர் திருக்குறளையும் கற்பித்தனர். பதினோரு மாதங்களில் திருமூலநாதன் 1330 குறள் பாக்களையும் மனப்பாடம் செய்து பிழையின்றிக் கூறி உலக சாதனை படைத்துவிட்டான். இன்று திருவருட்பா, திருப்புகழ், தாயுமானவர் பாடல்கள், பாரதியார் பாடல்கள் சிலவற்றையும் தரும் திறமை பெற்றிருக்கிறான் திருமூலநாதன்.

தில்லியின் பல தமிழ்ப் பள்ளிகளில் திருமூலநாதனுக்கு அழைப்புக்கு மேல் அழைப்பு வந்து அனைவரையும் அயர வைத்திருக்கிறான். குழந்தை ஜீனியஸ் திருமூலநாதனின் தந்தை திருச்சி மாவட்டம் துறையூர் நகராட்சி நடுநிலைப்பள்ளியில் தலைமை ஆசிரியர். திருமூலநாதனின் தமக்கை காந்திமதியும் தன் ஒன்பதாவது வயதில் 500 திருக்குறள் மனப்பாடம் செய்ததோடு திருப்புகழைச் செவிக்கு இனிமையாகப் பாடும் வல்லமை பெற்றிருக்கிறாள். 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்பார்கள். இவ்விரு குழந்தைகளின் திறமையைக் கண்டு தில்லி தமிழர்கள் கொண்டாடி மகிழ்வது இனிய செய்தி.

—பி.எஸ். மணி

# 21

ராஜியின் ஒற்றைத் தலைவலியின் கடுமை குறைந்திருந்தாலும், அவளால் வீட்டுக் காரியங்களைக் கவனிக்க இயலவில்லை.

"சித்தப்பா, நீங்க எதுக்கு இங்கே சாதம் வடிக்கணும்? நான் அங்கேயிருந்து உங்களுக்கும், சித்திக்கும் கொண்டு வந்திருப்பேனே!'' என்றாள் பாரதி.

"ஸெல்ஃப் ஹெல்ப் இஸ் தி பெஸ்ட் ஹெல்ப். கேள்விப்பட்டிருக்காயா, பாரதி?"

"நீங்க ஓர் அபூர்வ மனிஷர்தான். நீங்க ஊருக்கெல்லாம் உதவி செய்யறீங்க. ஆனா இன்னொர்த்தர்ட்டேந்து எந்த உதவியும் எதிர் பார்க்கறதே இல்லை".

"ஸ்டாண்ட் ஆன் யுவர் ஓன் லெக்ஸ்! கேள்விப் பட்டிருக்காயா?"

பாரதி சிரித்தாள்.

"இந்த மாதிரி அஞ்சாறு இங்கிலீஷ் அறிவுரைகளை வைச்சிக்கிட்டு ஊரையே உங்க பக்கம் மடக்கிப் போட்டிருக்கீங்க...அது சரி, என்ன சமையல்?"

"ரைஸ். டால். கர்ட்".

"அரிசி, பருப்பு, தயிரா?"

"லிட்டில் கீ ஆல்ஸோ! டச் பண்ணிக்க மஸ்டர்ட் மாங்கோ".

பாரதி மீண்டும் சிரித்தாள்.

"கொஞ்சம் நெய்யும், தொட்டுக்க கடுகு மாங்காய்! வயிறு நிறைஞ்சுதா?"

# வானமெல்லாம் ஆசைக் காற்றாடி

பி.வி.ஆர்

"நிறையாம... சித்திகூட ரெண்டு மூணு வாய் தயிர்சாதம் சாப்பிட்டாளே... அதிருக்கட்டும், மௌலி வந்திருக்கானே? என்ன விசேஷம்?" என்று கேட்டான் சகஸ்ரம்.

"எனக்கே தெரியாது. அத்தை கேட்டதுக்கும் சரியா பதில் சொல்லலே. ஆமாம், அப்பா உங்க வீட்டுக்கு வந்தாரே, உங்ககிட்டச் சொல்லலையா?"

"சொல்லியிருந்தா நான் அபத்தமா உங்கிட்ட ஏன் வந்திருக்கார்னு கேட்டிருப்பேனா, பாரதி?"

"உண்மையான காரணம் ஒருத்தருக்குத்தான் தெரியும் போல இருக்கு".

"ஆரு, அண்ணாவா?"

"ஆமாம்".

"ஆனாக்கா , அண்ணா எங்கிட்ட ஒண்ணும் சொல்லலை. இப்ப என்ன சேயறான் மௌலி?"

"அண்ணாவும், தங்கையுமாப் பேசிண்டிருக்கா. நான் சாப்பிடப் போனப்ப அத்தை மாடிக்குப் போனா. நான் கை அலம்பி இங்கே வந்து கால்மணி நேரமாறது. என்னதான் பேசிக்கிறாங்களோ?"

"உன்னைப் பத்தியாக இருக்குமோ, பாரதி?"

"இருக்கலாம். அத்தைக்கு என்னமோ என்னைப் பிடிக்கலை. இப்பவெல்லாம் அவளை எப்படியாவது திருப்தி செய்யணும்னு பார்க்கறேன், முடியலை".

"மன்னியைத் திருப்தி படுத்த யாராலும் கழியாது. என்னைக் கண்டாக்கூட மன்னிக்குப் பிடிக்காது. ஏன் தெரியுமோ பாரதி? நான் ஆரையும் முகஸ்துதி பாட மாட்டேன். பாடிக் காரியம் சாதிச்சுக்க ஆவஸ்யம் இல்லை. பட்பட்டுன்னு நான் மன்னிட்ட மின்னெல்லாம் பேசியிருக்கேன்".

"ஒவ்வொருத்தர் சுபாவம் ஒவ்வொரு மாதிரி".

"ரொம்பக் கரெக்ட் பாரதி. உங்கிட்ட சில குணங்கள் பிடிச்சிருக்கு. ஆனா சிலது பிடிக்கலே".

"உதாரணம்?"

"ஆராவது உங்கிட்ட வந்து பேசினாத்தான் நீ பேசறே?"

"இது கெட்ட குணமில்லையே, சித்தப்பா...?"

"கெட்ட குணம்னு சொல்ல வரலே, எனக்குப் பிடிக்கலேன்னுதான் சொன்னேன். ஒன்னை மாதிரியே எல்லோரும் இருந்துட்டான்னு வைச்சுக்கோ, அப்புறம் என்ன ஆகும்? எல்லாரும் ஊமைகளாத் திரிவா. நீயாக ஒருத்திட்டப் போய் பேசறதிலே தப்பு இல்லை.

அதனாலே நீ குறைஞ்சும் போயிட மாட்டாய்! மனுஷாளுக்கு மனுஷாள்தான் வேணும்".

"அப்புறம் வேற என்ன பிடிக்கலே?"

"சொன்னா தேஷ்யப் படப்படாது".

"நான் என்னிக்காவது உங்ககிட்ட கோவிச்சுட்டிருக்கேனா?"

"ஒன் பிடிவாதம்".

"அது என் கூடப் பொறந்த வியாதி".

"கண்டுடாமைக்கும், கஷண்டிக்கும்தான் மருந்து இல்லை. மத்த எல்லாத்துக்கும் உண்டு".

"எனக்குப் புரியலே, சித்தப்பா".

"பொறாமை, வழுக்கை".

பாரதி சிரித்தாள்.

"எனக்கே தெரியாது சித்தப்பா. எனக்கு ஏன் பிடிவாதம் அளவுக்கு மேலேயே இருக்குன்னு. சின்ன வயசிலே அம்மா, அப்பா, சரியா வளர்க்கலையோ என்னமோ?"

"வயசு வந்தப்புறம், தப்பு ஒண்ணு இருக்குன்னு தெரிஞ்சப்புறம், நாமே நம்மை கரெக்ட் பண்ணிக்கலாம், இல்லியா பாரதி...? அதா ஒன் அப்பா மௌலி வர்றான். ஒனக்கு அவர்ட்ட தனியாப் பேசணுமானா மச்சு மேலுக்குப் போ. ஏஸியைப் போட்டுக்கோ. ஆரும் ஒங்களை டிஸ்டர்ப் சேய வரமாட்டா".

"எனக்கு ஒண்ணும் அவர்ட்ட ஸ்பெஷலா பேச இல்லை".

"வா மௌலி... என்ன இத்தற நேரம்? அண்ணா அப்பவே காரை எடுத்துண்டு போயாச்சே?

"தங்கை தங்கம்மா இருக்காளே? அவகிட்ட பேசிண்டிருந்தேன்.

"சரி ஒக்காரு".

"நான் பாரதிகிட்ட இன்னும் ரெண்டு வார்த்தை சரியாப் பேசலே".

"ரெண்டோட ஏன் நிறுத்திக்கறாய், மௌலி. ரெண்டாயிரம் வார்த்தை பேசேன். என்னால இந்த ஈஸிச்சேரை விட்டுப் போகக்கழியாது. அதா, மச்சுமேல் இருக்கு. அங்க போய் ஆசை தீரப் பேசிக்குங்கோ!"

ஒரு நிமிடம் பாரதி அப்பாவைப் பார்த்தாள்.

"பாரதி".

"என்னப்பா?"

"வா, மாடிக்குப் போகலாம்".

"இங்கேயே பேசலாமே அப்பா!"

"நாம பேசறது சகஸ்ரத்துக்குத் தொந்தரவா இருக்கும்".

"அப்படியா, சித்தப்பா?"

"அப்படீன்னு இல்லை. ஆனா என்கூடப் பேச ஆரும் இல்லைன்னா கொஞ்சம் கண் அசருவேன், அம்படத்தான்".

"சரிப்பா மாடிக்கே போகலாம்".

மாடி அறை சதுரமாக நேர்த்தியாக இருந்தது. ஏஸி அறையாக இருந்ததால் எல்லா ஜன்னல்களையும் அடைத்து வைத்திருந்தார்கள். மங்கிய வெளிச்சத்தில் அவள் விளக்கைப் போட்டாள். ஏஸியையும் முடுக்கி விட்டாள். கொஞ்சம் நாராசமாக ஆரம்பித்த சப்தம் மெல்ல மெல்ல அடங்கிப் போயிற்று.

கட்டிலில் பாரதி உட்கார, அவள் எதிரே ஒரு பிரம்பு நாற்காலியில் மௌலி அமர்ந்தார்.

"என்னப்பா பேசணும்?"

"சொல்றேன்".

"அதுக்கு முன்னாடி எதுக்குத் திடீர்னு இங்கே வந்திருக்கீங்கன்னு சொல்லுங்க".

"என் பேச்சிலே இந்தக் கேள்விக்கு பதில் கிடைக்கும் பாரதி".

"ஓ கே. நான் ரெடி".

வார்த்தைகளைத் தேடிக் கண்டுபிடித்துக் கோவையாக்கிக் கொண்ட மௌலி ஆரம்பித்தார்.

"நான் இப்பச் சொல்லப் போறது ஷாக் அடிக்கறா மாதிரி இருக்கலாம். அனாவசியத் தலையீடாப் படலாம். ஏன், பைத்தியக்காரத் தனமாகவும் தோணலாம்".

"அதை நான் முடிவு செய்துக்கறேன், அப்பா".

"நம்ம ஊர்ல காவிரியை நீ நின்னு நிதானமாப் பார்த்ததில்லே. நீரோட்டம் ரொம்ப அமைதியா சாதுவா இருக்கும். ஆனா உள்ளே காலை வைச்சுட்டா கரெண்ட் இழுக்கும் அது மாதிரி..."

"அது மாதிரி?"

"அது மாதிரித்தான் நீ புகுந்திருக்கிற வீடும் இருக்கு".

"எதை வைச்சுட்டுச் சொல்றீங்க?"

"இந்த லெட்டரை வைச்சுட்டு! இந்த லெட்டர் தான் என்னை இங்கே இழுத்த கரெண்ட். வெளியே நின்னு பார்க்கறப்ப எல்லாம் அமைதியா, ஏன் சுமுகமா இருக்கு. 'பொண்ணே' பொண்ணேன்னு மாமனார் நெகிழறார். வா மௌலி, வா மௌலின்னு சகஸ்ரம் குலாவறான். நீயும் ரொம்ப சௌக்கியமா இருக்கறாப்ல நடமாடறே",

"நீங்க உங்க கண்ணாடியை மாததணும் அப்பா... அந்த லெட்டரை இப்படித் தாங்கோ".

கொடுத்தார்.

ஒரே மூச்சில் படித்தாள்.

பிறகு, "இதில எழுதியிருக்கறதெல்லாம் உண்மைதான்" என்ற பாரதி, தொடர்ந்து "ஆனா, அத்திம்பேர் இவ்வளவு கடுமையா இருப்பார்னு நான் எதிர்பார்க்கலே!" என்றாள்.

"பேசறப்ப சில சமயங்கள்லே வார்த்தைகளோட கடுமை தெரியாது. பாரதி! நீ பி.எச்.டி.,



பண்ணனும்னு பிடிவாதமா இருக்கே. உன் புருஷன் வீட்ல எல்லாரும் எதிர் துருவத்திலே நிக்கறாங்க. இது எப்படி எத்தனை நாளுக்கு ஓடி எப்ப முடியும்னு ஈச்சா கேள்வி கேக்கறார்".

"நீங்க என்ன சொல்றீங்க?"

"நீ பி.எச்.டியைப் பத்தி ரொம்ப நாளா எங்கிட்டப் பேசி என்னை நிம்மதியில்லாமச் செய்திருக்கே. அப்ப மாட்டேன்னேன்".

"இப்ப?"

"நீ ஆசைப்பட்டது எதையும் நான் நிறை வேத்தினதில்லே. இதையாவது இப்பவாவது நிறைவேத்தறேனே?"

"நிஜமாவா அப்பா?"

"நிஜமா".

"கல்யாணத்துக்கு முன்னால பணம் இல்லேன்னு கையை விரிச்சீங்களே?"

"அப்ப அது உண்மை. ஆனா இப்ப இருக்கு".

"அமெரிக்காவிலேர்ந்து அண்ணா அனுப்பி னானா?"

"இல்லை".

"பின்னே?"

"உன் கல்யாணம் முடிஞ்சதும், கல்யாணச் செலவில ஒரு பங்கை நான் ஏத்துக்கறதுதான் நியாயம், முறைன்னெல்லாம் சொல்லி நாப்பதாயிரத்துக்கு மேல் ஈச்சா தந்தான்".

"அப்படியா?"

"அவனோட பெருந்தன்மை ஆருக்கும் வராது, பாரதி. ஆனா அதே ஈச்சாதான் உன் ஆசைக்கு சம்மதிக்க மாட்டேன் என்கிறான்".

"நான் என் கோணத்திலேர்ந்து பாக்கறேன். அவர் தம் கோணத்திலேந்து..."

"யார் எந்தக் கோணமானா என்ன, பாரதி? விதியின் கோணம் சரி இல்லை. நீ இந்தப் பாலக்காட்டுக்கும், பள்ளிப்புறத்துக்கும் இந்தப் புகுந்த வீட்டுக்கும் குட்பை சொல்லிட்டு என் னோட புறப்படு".

"அப்பா... என்னப்பா புதுசா ஒரு குண்டைத் தூக்கிப் போடறீங்க?"

"உன் ஆசையை நிறைவேத்தறதுன்னு வந்தா வேற வழி என்னம்மா?"

"நீங்க இப்ப செய்ய முன் வந்திருக்கிற காரியம் அத்திம்பேருக்குத் தெரியுமா?"

"இந்தக் காரியத்துக்காக நான் வரலே. ஈச்சாவோடப் பேசிப் பார்க்கலாம்னு வந்தேன். உனக்கு ஒண்ணு தெரியுமா, பாரதி?"

"என்னப்பா?"

"அவருக்கு உன் பேர்ல கொள்ளை ஆசை. நீ ரொம்ப புத்திசாலியாம். கெட்டிக்காரியாம். உன்னால் நங்கவரத்துக்குப் பெருமைதான் வருமே தவிர, அவமானம் வராதாம். இதை அவரே அவர் வாயாலேயே சொன்னார்.

"அவருக்கு என் பேர்ல ஒரு தனி வாத்ஸல்யம் உண்டுன்னு எனக்கே தெரியும்ப்பா".

"இன்னும் என்ன சொன்னார் தெரியுமா, பாரதி?"

"சொல்லுங்க".

"நாராயணன் எதையும் மனசிலேர்ந்து கொட்டமாட்டானாம். 'பாரதி நல்ல பொண்ணு. அவளை நடத்தறபடி நடத்தினா வீட்டுக்கே பெருமை கிடைக்கும். ஆனா அம்மாவுக்குத்தான் தன் மருமகளை சரியாகக் கொண்டு நடத்தத் தெரியலேன்னு சொல்லியிருக்கான். யார்ட்ட தெரியுமா? இந்த சகஸ்ரத்துகிட்ட. அவன் அதை அப்படியே அண்ணா ஈச்சாவிடம் ஒப்பிச்சிருக்கான்".

பாரதி ஓரிரு நிமிடங்கள் மௌனமாக அவரைப் பார்த்தாள்.

"ஆனா என்ன செய்யறது பாரதி. பொன் ஊசின்னா கண்ல குத்திக்க முடியுமான்னு ஈசுவரன் எங்கிட்டக் கேட்கிறார்..."

"அதாவது..."

"நீ படிக்கறதுன்னு உன் வழியிலே நீ போற துன்னு முடிவு எடுத்தா அவர் தம் வழியிலே வேறு முடிவு எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமாம்".

"வேற முடிவுன்னா?"

"விவாகரத்து".

"யூ மீன் டிவோர்ஸ்".

"ஆமாம்".

"அதுக்கு நீங்க என்ன சொன்னீங்க?"

"'என் பொண்ணுக்குக் கல்யாணமாகி இன்னும் முழுசா ஒரு மாசம் ஆகலே... அதுக் குள்ள டிவோர்ஸ் பத்திப் பேசறியே ஈச்சான் 'னேன். அதுக்கு என் இடத்திலே நீ இருந்தா என்ன செய்வேன்னு திருப்பிக் கேட்டார். என்னாலே பதில் சொல்ல முடியலை".

"டிவோர்ஸ்னா அவ்வளவு சுலபமா? பண்டாரா ரோடு விமல்நாத் ஞாபகம் இருக் காப்பா? அவரோட பொண் அபர்ணாதேவி என் க்ளாஸ்மேட். அபர்ணாவோட அக்கா பேர்ல கல்யாணமான மூணாம் மாசமே அவ புருஷன் டிவோர்ஸ் கேஸ் போட்டான். ஆனா

ஜட்ஜு கொடுக்கலையே? பாலக்காட்ல ஜட்ஜுகள் தனி ரகமா இருப்பாங்களா என்ன?''

"ஆனா உன் கேஸ் அப்படிப்பட்டதில்லே, பாரதி!"

"எப்படிச் சொல்றீங்க?"

"உனக்குக் கல்யாணம்தான் ஆகியிருக்கு".

"புரியலே".

"உன் கழுத்திலே தாலி மட்டும்தான் ஏறியிருக்கு. மத்தபடி... மத்தபடி...''

"ஓ, புரியறது. ஆமாம் இதை யாரால் நிரூபிக்க முடியும்?"

"ஏன் உன்னாலேயேகூட! கோர்ட் கூண்டிலே ஏத்தி எதிர்த்தரப்பு வக்கீல் துருவித் துருவிக் கேள்வி கேட்கறப்ப உன்னால் பொய் சொல்ல முடியுமா, பாரதி? கல்யாணமாகி 'கன்ஸமேஷன்' ஆகாமப் போனா கேஸ் போடறவன் ஈஸியா ஜெயிச்சுடுவான்".

"நாராயணன் நல்லவர்".

"இப்ப நீ நல்லவ இல்லியா?"

"அவர் கேஸ் போட மாட்டார்.

"அவன் தானாப் போட மாட்டான். அவனுடைய அம்மா – என் தங்கை ஒருத்தி போதும் உன்னைக் கோர்ட்டுக்கு இழுக்க. நீ மெட்ராஸ்லேயோ டில்லியிலேயோ பி.எச்.டி., பண்ணிட்டிருப்பியா, இல்லே சம்மன்ஸ் அனுப்பறப்பவெல்லாம் பாலக்காட்டு கோர்ட் வாசப்படி ஏறிட்டிருப்பியா?"

பாரதி பதில் சொல்லவில்லை.

மௌலி தொடர்ந்தார். "நீ ஏன் கவலைப் படறே, பாரதி? டிவோர்ஸ் ஆன கையோட நாராயணனுக்கு வேறு ஒருத்தி மனைவியாக வந்தா வந்துட்டுப் போகட்டுமே? நீ உன் பி.எச்.டியை முடிச்சுட்டு உன் மனசுக்குப் பிடிச்ச ஒருத்தனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளேன். நீ டாக்டர் பாரதின்னு தெரியறப்ப எத்தனை பி.எச்.டிக்கள் உன்னைத் தேடிக் கொண்டு வருவார்கள்!"

"இப்பத்தான் எனக்கு எல்லாம் புரியறது. சரி, இப்ப நான் என்ன செய்யணும்?"

"என்னோட இன்னிக்கு ராத்திரியே புறப்படு. அப்புறம் ஒரு நாள் நாம மெட்ராஸ் போகலாம். மெட்ராஸ்லே கிடைக்கலேன்னா என்ன, டில்லி, பாம்பே, கல்கத்தான்னு எவ்வளவோ இருக்கு".

"நான் இது பத்தி யோசிக்கணும்".

"இதிலே யோசனை செய்ய என்ன இருக்கு பாரதி?"

"யோசனை செய்ய என்ன இருக்குன்னு எனக்குத் தானே தெரியும்?"

## மணிமொழி




கவிஞன் என்பவன்
காலக் கணிதன்!
புலியைத் திருத்தும்
மனிதப் புனிதன்!

நேற்றை இன்றை
நாளையை நிமிர்த்த
போற்றும் கவிதை
புதுக்கும் வீரன்!

காற்றைச் செதுக்கும்
கவிதைச் சிற்பி;
கூற்றுவன் கூடக்
கவிஞனுக் கற்பம்!

நாட்டிருள் நீக்கும்
நல்லறி வுரைகள்;
தீட்டும் பாட்டினில்
தீர்க்க தரிசனம்!

திட்டங்க ளாயிரம்
தீட்டித் தருபவன்
சட்டங்களி யற்றிச்
சமூகத்திற் களிப்பவன்!

தீயை விதைத்துத்
தீக்குளித் தெழுவான்
தீமையைப் பொசுக்கும்
தூய்மைத் தொடுவான்!

உயிர்களுக் காகவே
கடவுளைப் பாடுவான்
துயர்மிகப் பெருகினால்
கடவுளைச் சாடுவான்!

நதியாய் நடப்பான்
நலங்கள் குவிப்பான்
கதியிலா உயிர்க்காய்
கண்ணீர் வடிப்பான்!

உலகச் சுமைகளை
உயிர்மேல் சுமப்பான்
உலகினுக் காகவே
உயிர்மூச் சளிப்பான்!

வாழும் நாள்களில்
செத்து மடிபவன்
செத்த பின்னாலே
வாழ்ந்து வருபவன்!

அவனே கவிஞன்
அவனே கவிஞன்
அவனுக் கிணை யெவன்
அவனே இறைவன்!

"சரி உன் இஷ்டம்".

"அத்திம்பேர் எதுக்காக உங்களை வரவழைத்து இதில ஈடுபடுத்தணும்? நேரடியா எங்கிட்டேயே சொல்ல வேண்டியதுதானே?"

"வாஸ்தவமான பேச்சுதான் பாரதி. ஆனா ஈச்சா உங்கிட்டே அழுதுகிட்டு சொல்வானா, இல்லே கோபமா முரட்டுத்தனமா சொல்லுவானா? அவன் உன் பேர்ல அலாதிப் பிரியம் வைச்சிருக்கான். இந்த விஷயத்தைப் பேச ஆரம்பிக்கவே அவனுக்குத் தொண்டை அடைச்சுக்காதா?"

"அதான் உங்களை தூது விட்டிருக்கார், இல்லே?"

"நல்லவேளை. இப்ப என்கிட்ட பண வசதி இருக்கு. அது மட்டும் இல்லாமப் போயிருந்தா என்ன செய்திருப்பேன்? பூர்விகமான நங்கவரம் வீட்டை வித்திருப்பேன்".

"நீங்க ஊருக்குப் போங்கப்பா. நான் ஒரு நிமிஷத்திலே என் வாழ்க்கைப் பிரச்னைக்குத் தீர்வு காண முடியாது".

"கல்யாணமே வேண்டாம்னு சொன்னவ தானே நீ? முடிவு எடுக்க என்ன கஷ்டம்?"

"கல்யாணத்துக்கு முன்னாடி இருந்தாப்ல தான் மனசு அப்புறமும் இருக்கணுமா? அது மாறப்படாதா?"

"கல்யாணத்துக்கு முன்னாலே பி.எச்.டி., மேல் இருந்த தீவிரம் கல்யாணத்துக்கு அப்புறமும் குறையாம அப்படியே இருக்கறப்ப..."

"போதும்ப்பா. நான் யோசனை பண்ணி முடிவு எடுத்துக்கறேன். நீங்க ஊரைப் பார்க்கப் போங்க!"

"இப்ப ஈச்சாவுக்கு நான் என்ன பதில் சொல்றது பாரதி?"

"பாதிக்கப்பட்டிருப்பவள் நான்! அவரால தான் நேரடியா இதைப் பத்தி பேச முடியலே. ஆனா என்னால முடியும்".

மௌலி மேற்கொண்டு எதுவும் பேசவில்லை. ஆனால் மாடிப்படியில் கால் வைக்கும் முன்பு -

"நீ என்ன முடிவு எடுத்தாலும் அதுக்கு பரிபூரணமான அங்கீகாரம் என்கிட்டேந்து நிச்சயமா வரும் பாரதி!"

"நான் பி.எச்.டிக்குத்தான் ஆசைப்பட்டேனே தவிர, யாருடைய அங்கீகாரத்துக்காகவும் - எனக்கு அப்பாவா இருக்கிற உங்களையும் சேர்த்துத்தான் - ஆசைப்படவும் இல்லை. அது எனக்குத் தேவையும் இல்லை!"

அவர் முன்னால் இறங்க, அறை விளக்கை அணைத்து ஏஸியையும் நிறுத்திவிட்டு பாரதி மாடிப் படிகளில் கால் வைத்தாள்.

சகஸ்ரம், "என்ன மௌலி, பொண்ணோடப் பேசிப் பேசி மடுக்கலையாக்கும். அதாவது அலுக்கலை போலிருக்கு" என்றான்.

பாரதி, வந்தவள் வாசலை நோக்கி நடந்தாள்.

"பாரதி என்ன நீ, என் கிட்டச் சொல்லிக் கொள்ளாதைக்கு விர்ர்னு போறாய்?" என்றார் சகஸ்ரம்.

அவளுடைய காதுகளில் எதுவும் விழவில்லை. மனதில் ஊழிக்காற்று போல எழுந்து விட்ட சத்தம் ஓங்காரமாக அவளுடைய உடம்பையே தாக்கிக் கொண்டிருக்கையில் மற்றவர்களுடைய குரலா அவளுடைய காதில் விழும்?

# 22

**பா**ரதி வீட்டை அடைந்தபோது மணி மூன்றரை. குளியல் அறைக்குச் சென்று கை கால்களைக் கழுவிவிட்டு சமையலறைக்கு வந்தாள்.

காஸ் அடுப்பு எரிந்து கொண்டிருக்கவில்லை. பிற்பகல் போட வேண்டிய காப்பி டிகாக்ஷன் போட்டாகவில்லை. மனதில் ஒரு கடுமையான புயல் வீசிக்கொண்டிருந்தாலும் அவள் தடுமாறவில்லை. இதுவரை பிறந்து அறியாத நெஞ்சுறுதி தன்னிடம் ஏற்பட்டிருப்பதை உணர்ந்தாள். விஷயம் முற்றிவிட்டது. இரண்டு கட்சிகளில் ஒரு கட்சி தீர்மானமான முடிவை எடுத்து எதிர்க்கட்சியிடம் வெளியிட்டாகி விட்டது. ஒருவர் தம்மைத் தாமே ஆலோசகராக நியமித்துக் கொண்டு இந்த இரண்டாவது கட்சிக்கு உபதேசம் செய்ய முன் வந்திருக்கிறார். ஆனால் இக்கட்சிக்கு என்று ஒரு தனித்தன்மை இருக்கிறதே? அந்தத் தன்மையை எந்த ஆலோசகராலும் தகர்த்து எறிய முடியாதே?

"இத்தனை நேரமா நீ எங்கே இருந்தே?"

பாரதி கொதிக்கும் நீரை காப்பி ஃபில்டரில் நிதானமாக மெல்ல மெல்ல ஊற்றிக்கொண்டிருக்கையில் தங்கம்மாவின் கேள்வி வெடித்தது. பாரதி உடனே பதில் சொல்லவில்லை. நீரையெல்லாம் ஊற்றிய பிறகு, ஃபில்டரை

மூடியபின், பால்பாத்திரத்தை மேடையின் மீது வைத்துவிட்டுத் திரும்பினாள்.

"என்னடீ பார்க்கறே? காதுல விழலையா?"

"விழுந்தது. அவசரமாப் பதில் சொல்ல வேண்டிய கேள்வியாப் படலே. சகஸ்ரம் சித்தப்பா வீட்டுக்குப் போயிருந்தேன்."

"அங்கே என்ன வேலை உனக்கு? சகஸ்ரம் என் புள்ளைக்குத்தான் சித்தப்பா. உனக்கு இல்லை."

"நீங்க சொல்றதும் சரிதான் அத்தே! சின்ன மாமனார் வீட்டுக்குப் போயிருந்தேன்".

"அங்க என்ன வேலைன்னு கேட்டேன்?"

"என் அப்பா அங்கே இருந்தார். எங்கிட்டப் பேசணும்னார்".

"என்ன சொன்னான்?"

"எங்க பேச்சு அப்பா - பெண்களுக்கு இடையே நடந்த பேச்சு".

"எங்கிட்டச் சொல்லப்படாதோ?"

"படாதுன்னு படறது".

"நீ எப்பப் புறப்படறே?"

"எங்கே?"

"தெரியாதா?"

"தெரியாது! அதான் கேட்கிறேன்".

"நங்கவரத்துக்கு".

"இன்னிக்கு ராத்திரி".

இன்னிக்கு ராத்திரியா?"

"அப்பா புறப்படறார்".

"நீ?"

"ஏன்?"

"உன் அப்பா சொல்லலையா?"

"என்னென்னு?"

"என்னடீ எங்கிட்ட ஜாலவித்தை காட்றியா?"

"ஜாலவித்தைன்னா?"

"இரு, உன்னைக் கவனிக்கிற விதத்தில் கவனிச்சுக்கறேன்".

தங்கம்மா வெளியேறத் திரும்பினாள்.

"ஒரு நிமிஷம் அத்தே".

"என்னடீ?"

"இது எப்படி உங்க வீடோ அதே மாதிரி என் வீடும்தான். இதை உதறி எறிஞ்சுட்டுப் போறதும் போகாததும் என் முடிவிலே அடங்கியிருக்கு. பாட்டி உங்களைத் துரத்தினா நீங்க போக மாட்டீங்க, இல்லியா? அது மாதிரித்தான் நானும். இதை நன்னா ஞாபகம்.

# மானுடப் பதிப்பு மறுபடி வேண்டாம்



★ 'சாதிகள் இல்லையடி பாப்பா'
நான் சின்ன வயதில்
சத்தமாய்ப் படித்தது
இப்பொழுது
மொத்தமாய் வெடித்தது!

★ காதல் எனக்குக் கைகூடவில்லை
என்மேல்
சாதிச் சாட்டைகள்
வரித்தடம் பதித்தன!

★ ஆயிரம் தகுதிகள்
எனக்குள் அடங்கிக் கிடந்தன!
ஆனால் வேலைகேட்டபோது
நான் 'ராஜபவனி' வந்த
சாதிக்குதிரையே
என்னைக் கீழே தள்ளி
குழியும் பறித்தது!

★ இறைவா!
இன்னொரு பிறவி
எனக்கு இருக்குமெனில்
மானுடப் பிறவியை மட்டும்
மறந்தும் எனக்குத்
தந்துவிடாதே!

**- வேடந்தாங்கல் சுகுணன்**

வைச்சுக்குங்க. அனாவசியமா என்கிட்டக் கத்திக் கத்தி உங்க பிளட்பிரஷரை ஏத்திக்கா தீங்க".

மௌனச் சீற்றத்துடன் அவளை விறைத்துப் பார்த்துவிட்டு தங்கம்மா வெளியேறினாள்.

டிகாக்ஷன் இறங்கிக் கொண்டிருக்கையில் பால் பாத்திரத்தை வைத்தாள். இரண்டு லிட்டர் பால் கொதிக்கச் சில நிமிடங்களாவது ஆகும்.

என்ன டிபன் செய்ய?

இட்லி அல்லது தோசை மாவு இல்லை. உப்புமா பாதிப் பேருக்குப் பிடிக்காது.

திடீரென்று மீனாட்சி அம்மாளின் சமையல் புத்தகம் நினைவுக்கு வந்தது. எவ்வளவு அரிசிக்கு எவ்வளவு பயத்தம் பருப்புப் போட வேண்டும். பார்க்க வேண்டும். அலமாரியில் சீராக வைக்கப்பட்டிருக்கும் ஹார்லிக்ஸ் பாட்டில்களைப் பார்த்தாள். முக்கால் பாட்டில் முந்திரிப் பருப்பு இருப்பது திருப்தி அளித்தது.

பாலைப் பார்த்தாள். காய்ந்து கொண்டிருந்தது. இன்னும் ஓரிரு நிமிடங்களில் கொதிக்க ஆரம்பித்துவிடும். பொங்கிவரும் போது காஸை நிறுத்திவிட வேண்டும்.

பாலும் கொதித்தது.

ஃபில்டரின் அடிப்பாத்திரத்தில் அப்போதைக்குத் தேவையான டிகாக்ஷன் இறங்கியிருந்தது.

மூன்று தம்ளர்களில் காப்பி கலந்தாள்.

ஒன்று ஸ்ட்ராங், சர்க்கரை கம்மி.

இரண்டாவது மீடியம், சர்க்கரை வேண்டாம்.

மூன்றாவது ஸ்ட்ராங், சர்க்கரைக் கொஞ்சம் அதிகம்.

ஒரு பெரிய தட்டில் டபரா தம்ளர்களை வைத்துக் கொண்டு முன் தாழ்வாரத்துக்கு வந்தாள். "இந்தாங்க பாட்டப்பா காப்பி. கொஞ்சம் லேட்டாயிடுத்து".

"தோஷமில்லை பொண்ணே!"

"பாட்டம்மா காபி".

"பஞ்சாரை இல்லையே?"

"இல்லை".

"நீ குடிச்சியா?"

"இனிமேத்தான்".

"பின்னே இது ஆருக்கு?"

"அத்தைக்கு".

சொல்லிவிட்டு தங்கம்மா அருகே பாரதி வந்து அவள் முன்னால் காப்பியை வைத்தாள். தங்கம்மா வாய் திறக்கவில்லை.

"பொண்ணே!"

"என்ன பாட்டாப்பா?"

"காப்பி அமிர்தமா இருக்கு. எச்சுமி நீ என்ன சொல்றாய்?"

"நீங்க சர்ட்டிபிகேட் கொடுத்தாச்சே? நானும் கொடுக்கணுமா? பாரதி, வாஸ்தவத்திலேயே காப்பி ருசியா இருக்கு".

"இந்தைக்கு என்ன பலகாரம்?"

"அரை மணி நேரத்திலே ரெடியாயிடும் பாட்டப்பா".

சமையலறைக்குத் திரும்பி, அவசர அவசரமாகப் புத்தகத்தைப் புரட்டினாள். அத்தியாயமும் கிடைத்தது. அளவும் கிடைத்தது.

குக்கரை ஏற்கனவே பால் பொங்கினதும் இன்னொரு அடுப்பில் வைத்திருந்தாள்.

சரசரவென்று காரியத்தில் ஈடுபட்டாள்.

குக்கர் சத்தம் கேட்ட ஓரிரு நிமிடங்களுக்குப் பின் ஜுவாலையைத் தாழவிட்டுத் தேங்காயை எடுத்தாள், உடைத்தாள், பூவாக்கினாள்.

அவள் பொங்கல் சட்னியுடன் மீண்டும் முன் தாழ்வாரத்துக்கு வந்தபோது கடிகாரத்தைப் பார்த்தாள். நாலரை. சொன்ன நேரத்துக்கு மேல் கால்மணி தாமதமாகியிருக்கிறது என்று மனம் கணக்குப் போட்டது.

"இது என்ன பொங்கலாட்டம் இருக்கு?" என்றார் தாத்தா.

"பொங்கலேதான் பாட்டப்பா".

"நெய் மணம் மூக்கைத் துளைக்கறது. அண்டிப் பருப்பை அள்ளிப் போட்டிருக்காய்."

தாத்தா சாப்பிடத் தொடங்கினார்.

"ஏ கிளாஸா இருக்கு, பொண்ணே! உண்டாக்க ஆர் சொல்லித் தந்தா? உன்னோட அம்மைதானே?"

"ஆமாம்".

"எச்சுமி நீயும் எடுத்துக்கோடி. ஆத்ல பொங்கல் உண்டாக்கி வர்ஷம் ஒண்ணாறது".

"நங்கவரம் கல்யாணத்தில்தான் கல்கண்டு சாதத்தையும், பொங்கலையும் வயிறு தெரியாமல் தின்னேனே" என்றாள் பாட்டி.

பாரதி சிரித்தாள்.

"உங்களுக்கும் கொண்டு வரேன், பாட்டம்மா".

"வேண்டாம்டீ. நான் அங்கே வரேன்".

"அங்கே போனாத்தான் மூக்கொத்தம் திங்கலாம்" என்றார் தாத்தா.



"உங்க மூக்கிலேர்ந்து பொங்கல் வழியாமப் பார்த்துக்குங்கோ!"

பாரதிக்கு உள்ளூரச் சிரிப்பு வந்தது. இந்த வயதிலும் தாம்பத்யத்தை எப்படி ஒருவருக் கொருவர் ரசித்துக் கொண்டிருக்கிறார்கள்?

தங்கம்மா முற்றத்துக்கு அப்பால் சுவரோர மாய் உட்கார்ந்திருந்தாள். காலியாகிவிட்ட டபரா டம்ளர் இன்னும் அவள் அருகேயே இருந்தது.

"அத்தே உங்களுக்கும் டிபன் கொண்டு வரட்டுமா?" என்று கேட்டாள்.

"இப்ப வேண்டாம்".

எங்கேயோ பார்த்தவாறு தங்கம்மா பதில் அளித்தாள்.

தான் பண்ணிய பொங்கல் எப்படித்தான் இருக்கிறது என்று ருசி பார்க்கத்தான் தோன்றி யதே தவிர, தட்டு நிறையப் போட்டுக் கொண்டு சாப்பிட வயிறு இடம் கொடுக்கவில்லை.

சமையலறையில் மீண்டும் மௌனம் நில வியது.

அவளுடைய மனமும் சிந்திக்கத் தொடங் கியது.

அப்பா பேசிய பேச்சின் பாதிப்பைக் காட் டிலும், அதற்குக் காரணமான ஈசுவரன்மீது தான் கோபம் வந்தது. அவர் எப்படி இப்படி ஒரு முடிவுக்கு வரலாம்? கடந்த நான்கைந்து நாள்களாக இருவரும் சுமுகமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அப்படிப் பேசிக் கொண்டிருக்கையில்தான் ஈசுவரன் அப்பா வுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். இதை ஏமாற்று வேலை என்பதா? வஞ்சகம் என்பதா? அவர் கடிதம் எழுதிய விஷயம் நாராயண னுக்குத் தெரியுமா? தெரிந்திருந்தால் அவ னாவது கோழிக்கோடு போவதற்கு முன் அவளிடம் சொல்லியிருக்க வேண்டாமோ?

அன்று இரவு மாமனாரை அவள் தனிமை யில் சந்தித்துப் பேசியாக வேண்டும். அவ ளுடைய தனிப்பட்ட பிரச்னையில் அப்பாவை அவர் ஏன் இழுக்க வேண்டும்?

இரண்டில் ஒன்று தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில் அவள் உறுதியாயிருந் தாள். ஆனால் அவள் அதுவரை தன் இயல்பிலேயே நடந்து கொள்வாள்.

ஐந்தேகாலுக்கு ஈசுவரன், அப்பா பின் தொடர வீட்டுக்குள் பிரவேசித்தார். இருவரும் டிபன் சாப்பிட்டார்கள். காப்பி குடித்தார்கள். அவளுடைய அப்பாவின் தொடர்ந்த மௌனத் தில் அவருடைய நெஞ்சுக் குமுறல் எதி ரொலிப்பதாக பாரதிக்குத் தோன்றியது. ஆனால் எதுவுமே நடக்காததுபோல ஈசுவரன் அவளிடம் சரளமாகப் பேசினார்.

"பொண்ணே, உன் அப்பாவோட வண்டி ராத்திரி பந்திரண்டே முக்காலுக்குத்தான். ஒன் பிளான் என்னென்னு நேக்குத் தெரியாது. நீ படிச்ச பொண். எல்லாம் தெரிஞ்ச பொண். ஒன் ஆசை நிறைவேறி நீ சந்தோஷமா இருந்தா எனக்கும் சந்தோஷம்தான். இதையெல்லாம் ஏன் நான் இப்பவே சொல்றேன்னா, நான் ஓர் அவசர காரியமா எர்ணாகுளம் போறேன். வர்றதுக்கு ரெண்டு நாளாகும்" என்று கூறிவிட்டு ஈசுவரன்,

"மௌலி நான் சொன்னது எல்லாம் ஒறமை இருக்கு இல்லியா?" என்று கேட்டார்.

மௌலி மௌனமாகத் தலையாட்டினார்.

"இப்ப நான் என் ரூமுக்குப் போய் பொட்டி யிலே துணிமணிகளை எடுத்து வைச்சுக்கறேன். ஆறு ஆறே காலுக்கு நான் பொறப்படணும்".

பாரதி இடிந்து போய் நின்றாள்.

அன்று இரவு ஈசுவரனிடம் பேச வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தாள். அதில் மண் விழுந்தது. ஆனால், அவள் விடவில்லை. அவருடைய அறைக்குச் சென்றாள். ஈசுவரன் அலமாரியைத் திறந்து வேஷ்டிகளை எடுத்துக் கொண்டிருந்தார்.

"ஒரு நிமிஷம் அத்திம்பேர்".

"நேக்கு நேரமாறது, பொண்ணே!"

"இன்னமும் 'பொண்ணே'ன்னு என்னைக் கூப்பிடறது அசம்பாவிதா இருக்கு".

"பின்னே?"

"நாயேன்னு கூப்பிடுங்கோ, கழுதேன்னு கூப் பிடுங்கோ".

"நீ என்ன சொல்றாய்?"

"என்னை என் அப்பா நங்கவரத்துக்குக் கூட்டிட்டுப் போயிடணும் இல்லே? இங்கு உள்ள

எல்லார்க்கும் நான் குட்பை சொல்லணும் இல்லே?"

"நேக்கு டயமாறது".

"எனக்கு டயம் நிறைய இருக்கு. நான் இந்த வீட்டை விட்டு ஒரே அடியாப் போறதானாலும் உங்ககிட்டேயும் உங்க பிள்ளைகிட்டேயும் ரெண்டு வார்த்தை பேசிட்டுத்தான் போவேன். நீங்க இப்ப எர்ணாகுளம் போயிட்டு வாங்கோ. அவர் கோழிக்கோட்லேர்ந்து எப்ப வரணுமோ வரட்டும். அதுவரையில் நான் இங்குதான் இருப்பேன். அதுவரையில் இந்த வீட்ல இருக்க எனக்கு எல்லா உரிமைகளும் இருக்கு. இதைச் சொல்லத்தான் வந்தேன். குட் நைட் அத்திம்பேர்! குட்பை இல்லே".

ஈசுவரன் அவளை ஏறெடுத்துப் பார்க்கவும் இல்லை, ஒரு வார்த்தை பேசவும் இல்லை.

அவர் பெட்டியுடன் புறப்படுவதற்கு முன் அப்பா, அம்மா மற்றும் தங்கம்மாவிடம் விடை பெற்றுக் கொண்டார். பாரதியைப் பார்க்க முயற்சியே செய்யவில்லை.

ஈசுவரன் வெளியேற, மௌலி பின் தொடர்ந்தார். அவர் யாரிடமும் விடைபெற்றுக் கொள்ளவில்லை. இரவு பன்னிரண்டே முக்காலுக்குத்தானே ரெயில்? அதில் செல்ல இப்போதே ஏன் யாத்திரை செல்ல வேண்டும்?

தரைமேல் தரை அருகே கண்கள் கனக்க நின்ற பாரதி, இருவரும் சகஸ்ரம் வீட்டுக்குள் பிரவேசிப்பதைக் கண்டாள். சிரித்துச் சிரித்துப் பேசி ஆட்களையே மயக்கும் சகஸ்ரம் தான் இதற்கெல்லாம் காரணமோ? அவன் ஹீரோ அல்ல. கீழ்த்தரமான வில்லன். இனி மேல் அவன் வீட்டுப்படியை மிதிக்கக் கூடாது.

சகஸ்ரம் வீட்டில் அவன் மட்டும் இருந்தான். ராஜி கமலம் வீட்டுக்குப் போயிருந்தாள்.

"என்ன, அண்ணா பொறப்பட்டாச்சா?"

"ஆச்சு. ஆர்ட்டேயும் மூச்சு விடாதே. நான் எஸ்டேட் ஹவுஸில் இருப்பது கோந்தைக்கு மாத்திரம் தெரிஞ்சாப் போரும். சிவராமன் கோவிந்தன் ஆருக்கும் கூடத் தெரியண்டாம். ஆராவது அவசரமாப் பேசணும்னா என்னன்னு கேட்டுக்கோ, போரும்".

"நான் சொன்ன பிளான் தானே அண்ணா இது?"

"மௌலி பேசின பேச்சில் பாரதிகிட்ட ஆட்டம் கண்டிருக்கு" என்ற ஈசுவரன், "நானும் அவளுக்கு மனசிலாகற மாதிரி வார்த்தைகளைப் பிரயோகிச்சேன். இனிமே பொண்ணேன்னு, கூப்பிடண்டாம், நாயே, கழுதேன்னு கூப்பிட்டாப் போறும்னா".

"ஆட்டம் இப்பத்தானே அண்ணா தொடங்கியிருக்கு, போகப் போகத்தான் சூடு பிடிக்கும்" என்றான் மௌலி.

"மௌலி ஒண்ணு மாத்திரம் எனக்குத் தெளிவாப் புரிஞ்சுது. அவளுக்கு டிவோர்ஸிலும் இஷ்டம் இல்லை, ரெண்டாவது கல்யாணத்திலும் ஆசை இல்லை" என்றார்.

"நாம சொல்லிக் கொடுத்ததுக்கு மேலே மௌலி ஜமாய்ச்சிருக்கான். கட்டிலுக்கு அடியில் டேப்ரிகார்டர் இருந்தது அவளுக்குத் தெரியாது. ஆனா ரெண்டு மூணு நிமிஷம் டேப் வேஸ்டாயிருக்கு" என்றான், சகஸ்ரம். பிறகு, "அதை எஸ்டேட்ல எங்கேயாவது வைச்சுத் தொலைச்சுடாதே. கோந்தையும் கேக்கணும்" என்று முடித்தான்.

"தெரியும்டா. அப்ப நான் வரேன்... மௌலி நம்ம பிரயத்தனம் எப்படி முடியும்னு என்னாலே தீர்ச்சையா சொல்லக் கழியலை. எல்லாம் நல்லபடியா முடியணும்னு வேண்டிக்கோ, அது போறும்".

"ஈச்சா இன்னும் ஒண்ணு".

"என்ன மௌலி?"

அன்று தங்கம்மா தம்மிடம் பேசியதையெல்லாம் மௌலி விவரித்தார்.

"தங்கத்தை நான் பார்த்துக்கறேன்.. நீ விசாரப்படாதே... நான் பொறப்படறேன். அவசரம்னு பாரதிட்ட சொல்லியிருக்கேன். ரொம்ப நேரம் இங்கேயே இருந்தேன்னா இங்கே ஏதோ துரியோதனன் சூழ்ச்சி நடக்கறதுன்னு அவ எண்ணத் தொடங்குவள்".

"சரி அண்ணா, நீ போயிட்டு வா, நான் பார்த்துக்கறேன்... ஆனா ஒண்ணை நீ ஒறமை வைச்சுக்கணம்..."

"என்னடா அது சகஸ்ரம்?"



## அக்பரை நம்புங்கள்!

● அக்பர் பாதுஷாவின் தர்பாரில் அநேகக் கவிகள் இருந்தனர். அங்கு அடிக்கடி கவி சம்மேளனங்கள் நடக்கும். எல்லாரும் அக்பரைப் புகழ்ந்து பாடுவார்கள். வெளியூர்களில் இருந்தெல்லாம் கவிகள் அக்பர் சமஸ்தானத்திற்கு வந்து அவரைப் புகழ்ந்து பாடி, சன்மானங்கள் வாங்கிக் கொண்டு போவது வழக்கம்.

அக்பரைப் புகழாத ஒரு கவி அக்பர் சமஸ்தானத்திலேயே இருந்தார். அவர்தான் ஸ்ரீபதி. பகவான் கொடுத்த நாவினால் பகவானைத் துதிக்க வேண்டுமேயொழிய, நரஸ்துதி செய்யக்கூடாது என்கிற கொள்கை உடையவர் அவர். அதனால் அவர் என்ன பாடினாலும், அது சரஸ்வதியைப் பற்றியோ அல்லது ராமரைப் பற்றியோ அல்லது கிருஷ்ணரைப் பற்றியோதான் இருக்கும்.

இந்தக் கவி தம் கொள்கையில் இத்தனை திடமாக இருந்தது, மற்ற கவிகளுக்கு அவமானமாக இருந்தது. உண்மையில் நரஸ்துதி செய்கிறவன் அதை ஆசையோடு செய்வதில்லை. வேறு வழியின்றி இப்படிச் செய்ய வேண்டியிருக்கிறதே என்று வெறுப்போடுதான் செய்கிறான்.

ஸ்ரீபதியை எப்படியாவது மட்டம் தட்ட வேண்டும், அக்பர் அவரை தர்பாரை விட்டு விரட்டும்படிச் செய்ய வேண்டும் என்று மற்ற கவிகள் தீர்மானித்தார்கள்.

அதற்காக அவர்கள் ஒரு யுக்தியைக் கையாண்டார்கள். "அனவரதமும் அக்பரை நம்பு" என்கிற அடிகளைக் கொடுத்து, இந்த அடிகள் கவியில் வரும்படியாக பாடவேண்டும் என்று ஒரு போட்டி வைத்தார்கள். ஸ்ரீபதி கட்டாயம் பாட மறுப்பார், அப்பொழுது அக்பர் அவரைச் சபையில் இருந்து நீக்கிவிடுவார் என்று நினைத்தார்கள்.

போட்டி தினத்தன்று எல்லா கவிகளும், "அனவரதமும் அக்பரை நம்பு" என்ற அடிகள் வருமாறு பாடல்கள் பாடினார்கள்.

கடைசியாக ஸ்ரீபதியின் முறை வந்தது. தர்பாரில் ஒரே நிசப்தம். அவர் எப்படி சமாளிக்கப் போகிறார் என்று எல்லோருக்கும் ஒரே ஆவல்!

ஸ்ரீபதி முதலில் சரஸ்வதி ஸ்துதி பாடினார். "உன் அருளால் அல்லவோ, நான் இந்த தர்பாரில் ஒரு கவி என்று சொல்லிக் கொண்டு வீற்றிருக்க முடிகிறது!" என்னும் பொருள்பட ஒரு கவி பாடினார்.

பிறகு அக்பரைப் பற்றிப் பாடாமல் ஆண்டவனைப் பற்றிப் பாட ஆரம்பித்தார். இதுவரை, "அனவரதமும் அக்பரை நம்பு" என்ற வார்த்தைகள் வரவில்லையே என்ற எல்லாரும் நினைத்துக் கொண்டிருக்கையில் ஸ்ரீபதி,

"இந்த ஆண்டவனிடம் நம் பிக்கையில்லையேல் "அனவரதமும் அக்பரை நம்பு!" என்று பாடலை முடித்தார்.

—நாடோடி

"பாரதிக்கு இப்ப ஒரு சின்ன ஆட்டம் தான் கண்டிருக்கு. அவளோட பி.எச்.டி., ஆசை குறைஞ்சுட்டில்லை".

"தெரியும்".

பாரதி ரேழியில் நின்றபடி எதிர்வீட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஈஸ்வரன் காரில் ஏறிச் சென்றதும் முன் தாழ்வாரத்துக்கு வந்து கடிகாரத்தைப் பார்த்தாள்.

மணி ஆறு முப்பத்தைந்து.

அவளிடம் அவசரம் காட்டிய அவர் இருபது நிமிடங்கள் சகஸ்ரத்தின் வீட்டில் தங்கியிருக்கிறார்!

ஏன்?

அவருக்கும் அவளுடைய அப்பா மௌலிக்குமிடையே ஏதாவது தர்க்கமா? ஒருவரை ஒருவர் வாய் வார்த்தைகளால் தாக்கிக் கொண்டார்களா? ஈசுவரனை வழி அனுப்ப அப்பா வாசல் வரை வரவில்லை. இதற்கு என்ன அர்த்தம்?

இருவருக்கும் சிண்டு முடிகிறவன் நிச்சயமாக சகஸ்ரமாகத்தான் இருக்கும்.

சிந்தனையில் மனம் வலிக்க பாரதி உள்ளே சென்றாள்.

அன்று இரவு படுக்கச் சென்றபோது அன்று நடந்ததையெல்லாம் எண்ணிப் பார்த்தாள். அப்பா பேசிய வார்த்தைகள் எல்லாம் காதில் மோதி ஒலித்தன.

எல்லாவற்றிற்கும் அடிப்படைக் காரணம் யார்? சகஸ்ரம் அல்ல. ஈசுவரன் அல்ல. அப்பா, அம்மா அல்ல. நிச்சயமாக நாராயணனும் அல்ல.

பின் யார்?

யார்?

அவள்தான்.

அவளுடைய பி.எச்.டி., வெறிதான். இந்த வெறியை இவ்வளவு முற்றிய பிறகு எப்படி அடக்குவது? அடக்காவிட்டால் என்ன ஆகும்? வெறி தீரும். ஆசை நிறைவேறும்.

ஆனால் இந்த பி.எச்.டியைவிட பல்லாயிரக் கணக்கு மடங்குப் பெரிதாக ஒன்று இருக்கிறதே?

அது என்ன?

என்ன என்பதை பாரதி கண நேரத்தில் புரிந்துகொண்டாள்.

அவள்தான் புத்திசாலிப் பெண்ணாயிற்றே!

(தொடரும்)

# தமிழில் தவறுகளை அறிவோம்

டாக்டர். தி. முத்து-கண்ணப்பர்

**சுடுதண்ணீர்** : இப்படிச் சொல்வது பெரிய தவறு; பொருளற்றது. தண்மை – என்றால் குளிர்ச்சி. 'சுடு' என்பது சுடுகின்ற, வெப்ப மான, சூடான எனப் பொருள்படும். சுடு என்னும் சொல்லை அடுத்துத் தண்ணீர் என்று சொன்னால் 'சுடுகின்ற குளிர்ச்சியான நீர்' என்பது பொருள். இது முரணாக அல்லவா உள்ளது? Hot Water என்னும் ஆங்கிலப் பதத்தில் 'Water' என்பது 'நீர்' என்பதைத்தான் குறிக்கும். 'Water' என்பதைத் தண்ணீர் என்று சொல்வது தவறு. 'Hot Water' என்பதன் சரியான தமிழ்ச் சொற்றொடர் 'வெந்நீர்' – 'சூடான நீர்' என்பதே. ஆனால் பெரும்பாலோர், 'சுடு தண்ணீர்' என்று தான் சொல்கிறார்கள். ஆங்கிலத்தில் 'Hot cold water' என்று சொல்வது சரியா? வெந்நீர் என்று சரியான, பொருத்தமான சொல்லிருக்க, சுடு தண்ணீர் என்று சொல்வதே எங்கும் பரவலாகி விட்டதே! இது தமிழ்க் கொலையல்லவா?

**சிலவு – செலவு**

**சிலவு** : 'செலவு' என்று சொல்வது கொச்சை வழக்காகி, பேச்சு வழக்காகி, பிறகு இலக்கியத்திலும் புகப்பார்க்கிறது. 'சில' என்றால் கொஞ்சம் என்பது பொருள். 'செலவு' என்றால் தான் செலவு செய்தல், செல்லுதல், போக விடுதல் என்னும் பொருள்களைத் தரும். 'பணத்தைச் செலவு செய்தல்', வருவாய்க்குத் தக்க செலவு செய்தல், இங்கெல்லாம் 'செலவு' என்றுதான் சொல்ல வேண்டும். இனிமேலாவது, வரவுக்குத் தகுந்த செலவு செய்து 'சில'வை விட்டுவிடுவார்களாக.

**சில்லரை, சில்லறை** இச் சொற்களில் பலருக்குக் குழப்பம் ஏற்பட்டுள்ளது. 'சில்லரை' என்று சொல்வது தவறு. அப்படி ஒரு சொல் தமிழில் இருப்பதாகவே தெரியவில்லை. 'சில்லறை' என்பதுதான் சரியானது. 'சில் லறை' என்று இறுதி எழுத்து வல்லினம் (றை) வர வேண்டும். அதுதான் 'சிலவாக அறுத்தல்' – பெரிய தொகையைச் 'சிறு சிறு தொகையாகச் செய்தல்' என்று பொருள்படும். சிறு தொகையாக மாற்றும் பணம் என்பதுதானே பொருத்தமான சரியான பொருள்?

'சில்+அரை' என இதனைப் பகுபதமாக்கினால் (பிரிக்கும் பதமாக) 'சில்' என்பது 'சிறிது', 'கொஞ்சம்' என்று பொருளாகும். 'அரை' – என்றால் 'பாதி' என்று பொருள்படும். அப்படியானால் 'சிறிய பாதி', என்றல்லவா பொருளாகும். 'அரை' என்பது உடலின் இடுப்புப் பகுதியைக் கூடக் குறிக்கும். அப்போது அது சில்+அரை – 'சிறிய இடுப்பு' என்று பொருளாகும். இதை நன்கு புரிந்துகொள்ள வேண்டும். இனிமேலாவது சிறு சிறு தொகையை-பணத்தைக் குறிக்கும். சரியான சொல் 'சில்லறை' என்பதை நன்கு உணர்ந்து கொள்வார்களாக.

**சுவற்றில், சுவரில்** : 'சுவர்' என்றால் மதில், வீட்டுச் சுவர், சுவறு' என்றால் 'வற்றிப் போதல்' என்பது பொருள். 'சுவற்றில் ஆணி அடி', 'சுவற்றில் படத்தை மாட்டு', 'சுவற்றுக்கு வெள்ளையடி' என்றுதானே பெரும்பாலோர் பேசுகிறார்கள்; எழுதுகிறார்கள்? 'சுவர்' என்னும் சொல்லோடு 'இல்' என்பதைச் சேர்த்தால் (சுவர்+இல்) 'சுவரில்' என்றுதானே வர வேண்டும்? 'சுவற்றில்' என்று எப்படி வரும்? 'சுவறு+இல்' என்றால்தானே 'சுவற்றில்' எனப் பொருள்படும். 'சுவரில்' அல்லவா ஆணி அடிக்க வேண்டும்; படத்தை மாட்ட வேண்டும். வெள்ளையடிக்க வேண்டும்? 'சுவற்றில்' என்று சொல்வது தவறல்லவா?

**தவறை – தவற்றை** : 'தவறு' என்பது தப்பு, பிழை, குற்றம் என்னும் பொருள்களைத் தருவதாகும். அதனுடன் 'ஐ' சேர்த் தால் இலக்கண முறைப்படி தவறு+ஐ = 'தவற்றை' என ஆகும் ஒரு சொல்லின் இறுதி எழுத்து 'று' (வல்லினம்) வந்தால் பெரும்பாலும் அதன் அயலில் 'ற்' என்னும் மெய்யெழுத்து வரவேண்டும். இதனை இரட்டித்தல் என்று சொல்வார்கள். (எ-டு) வயிறு + ஐ = வயிற்றை, கயிறு – கயிற்றை, ஞாயிறு – ஞாயிற்றை – இப்படிப் பிறவும், 'வயிற்றிலே பசி', 'கயிற்றை இழு', 'ஞாயிற்றைப் பார்' என்றுதான் சொல்கிறோம். 'வயிறிலே பசி', 'கயிறை இழு', 'ஞாயிறைப் பார்' என்று சொல்வதில்லை அல்லவா? அவ்வாறே 'தவறு' என்னும் சொல்லுடன் வேற்றுமை உருபுகளைச் (ஐ,ஆல், கு,இன் முதலியன) சேர்த்தால் 'தவற்றை', 'தவற்றால்', 'தவற்றுக்கு, 'தவற்றின்' என்று முறையே பெரும்பாலும் வருவதுதான் சரி

யாகும். அவ்வாறன்றித் 'தவறை', தவறால்', 'தவறுக்கு 'தவறின்' எனக் கூறுவது தவறு.

தக்க வைத்து – தங்க வைத்து : வெற்றி பெற்ற அணியினர் சென்ற ஆண்டில், ஏற்கனவே பெற்றிருந்த சுழல் கோப்பையைத் (Rolling Cup) தக்க வைத்துக் கொண்டார்கள் என்று கூறப் படுகிறது. அது பிழையானது.

'தகு', 'தக்க' என்றால் 'தகுதியான', பொருத்தமான' என்று பொருள்படும். உழைப் புக்குத் தக்க கூலி என்றால் உழைப்பிற்கு உரிய கூலி என்றுதானே பொருள்படும்? 'தக்கவர்' தக்கார் என்றால் உரியவர், தகுதியானவர் என்னும் பொருளைத்தானே குறிக்கும்?

*"தக்கார் தகவிலர் என்பது அவரவர்*

*எச்சத்தால் காணப்படும்"* என்பது குறள் 114.

இங்குத் தக்கார் என்றால் உடையவர் என்பது பொருள். எனவே, 'தம்மிடம் தங்க வைத்துக் கொண்டார் என்று கூறினால்தான் தம்மிடம் இருத்திக் கொண்டனர்' என்னும் உரிய பொரு ளைத் தரும். ஆதலால் 'சின்னத்தை' கோப் பையை, 'வெற்றியைத் தம்மிடம் தங்க வைத்துக் கொண்டனர்' எனத் 'தங்க' என்னும் சொல் லையே பயன்படுத்துவதுதான். சரியானது என்பதைத் தக்கவாறு பயன்படுத்தி அப்பரிசு ளைத் தம்மிடமே தங்க வைத்துக் கொள் ளட்டும்.

தலா : 'தலா' என்னும் தமிழில் வழங்காத ஒரு சொல் இப்போது 'ஒவ்வொரு' என்னும் பொரு ளில் பரவலாக வழங்கி வருகிறது. இந்தத் தலா எப்படி வந்ததோ? தலைக்கு ஒரு ரூபாய் கொடு என்றால், இங்குத் தலை என்பது தலையைக் குறிக்கும். உடலின் ஓர் உறுப்பு. ஓர் உறுப்பின் வழியே அந்தத் தலைக்குரிய ஆளைக் குறிக்கும். இலக்கணத்தில் இது வினை (உறுப்பு) யாகு பெயர் என வழங்கப்படும். இந்தத் தலை என்னும் சொல்லைத்தான் 'தலா' என்று தவ றாகக் கூறுகிறார்கள். 'தலா' நான்கு கோல் போட்டனர் என்பதை வானொலியிலும், தொலைக்காட்சியிலும் கேட்கின்ற போது தலை யில் அடித்துக் கொள்ள வேண்டும் போலத் தோன்றுகிறது. 'தலை' என்பது உயிரினங்களில் தலையைத்தான் குறிக்கும். 'இந்தியாவும், இலங்கையும் தலா மூன்று ஒட்டம் எடுத்தன' என்றால், எந்தத் தலையைக் குறிக்கும்? 'அந்த அரசியல் கட்சிகள் தலா 10,000 வாக்குகள் பெற் றன' என்று சொல்வது பெருந் தவறு. தமிழ்க் கொலையேயன்றி வேறென்ன?

பின் இதனை எப்படிப் பயன்படுத்துவது? இந்தத் 'தலா'வின் தலையையும் வாலையும் கிள்ளி எறிந்துவிட்டு, ஒவ்வொன்று 'ஒவ்வொரு' என்று சொல்வதுதான் சரியானது; பொருள் பதிந்தது. ஒவ்வொன்றும் 10,000 வாக்குகள் பெற்றன; என்பது எவ்வளவு பொருந்தும்!

சரியானவை : (எ-டு) இந்தியா இலங்கை ஒவ்வொன்றும் மூன்று ஓட்டங்கள் எடுத்தது. அரசியல் , கட்சிகள், ஒவ்வொன்றும் 10,000 வாக்குகள் பெற்றது. கண்ணன் கந்தன் ஒவ்வொருவரும் நூற்றுக்கு நூறு மதிப்பெண் பெற்றனர் என்று சொல்வதுதானே பொருத்த மானது? சரியானது.

திருநிறைச் செல்வன் – திருநிறை செல்வன் : திருமண அழைப்பிதழ்களில் மணமகன்– மணமகளைக் குறிப்பிடும்போது அவர்கள் பெயருக்கு முன்னர்த் திருநிறைச் செல்வன் என்றே பலர் எழுதுகிறார்கள். இப்பிழையைத் தமிழ்ப் புலவர், பேராசிரியர் சிலர்கூடச் செய்வதுதான் வேதனைதரும் செயல்.

'நிறை' என்பது 'நிறைந்த', 'நிறைகின்ற' 'நிறையும்' என்று முக்காலங்களுக்கும் பொது வாய் உள்ள ஒரு சொல். இது 'வினைத் தொகை' எனக் கூறப்படும். வினைத்தொகை யென்றால் முக்காலங்களில் எக்காலத்தையும் தெளிவாய் காட்டாத – காலம் மறைந்துள்ள ஒரு வினைச்சொல். வினைத் தொகையில் வல் லெழுத்து (க்-ச்-த்-ப்) மிகக் கூடாது என்பது இலக்கண விதி.

ஆதலால், 'திருநிறை செல்வன்' 'திருநிறை செல்வி' என்று வலிமிகாமல் (ச்) போடாமல் எழுதுவதுதான் சரியானது. 'ச்' மிகுமாறு எழுது வது தவறு என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

தேனீர் – தேநீர் : 'டீ'க் கடைகள் பெரும் பாலானவற்றிலும் 'தேனீர்' என்று எழுதப்பட் டிருப்பது அனைவரும் அறிந்த ஒன்று. 'தேனீர்' என்றால் 'தேன்+நீர்' – அதாவது தேன் நீர்' – தேன் கலந்த தண்ணீர்'' என்றுதானே பொரு ளாகும்? அது தேயிலை (டீ)யின் சாறல்லவா? 'Tea leaf' என்னும் ஆங்கிலச் சொல் தேயிலை யைக் குறிப்பது. அப்படியானால் 'தேநீர் (தே+நீர்) என்றல்லவா கூறல் வேண்டும்? 'தேநீர்' அருந்துவோர்க்கு அது 'தேனீராய் (தேன் தண்ணீராய்) இருக்கிறது போலும். இந்த வேறுபாட்டை உணர்ந்து 'தேநீர்' என்றே திருத் திக் கொள்வார்களாக.



# அப்போதைக்கு இப்போதே...

## ஷைலஜா

ஆராதனை செய்து கொண்டிருந்தார் ராமாச்சார். மைசூர் அய்யங்கார்களுக்கே உரிய பப்பாளிப் பழ நிறத்து உடம்பு. பன்னிரண்டு திருமண் தரித்து அவர் அமர்ந்திருந்த காட்சியில் பதின்மூன்றாவது ஆழ்வாராய்த் தெரிந்தார். அவர் எதிரே தேக்குமரத்திலான மந்தகாஸ மண்டபம். மைசூர் சமஸ்தானத்தில் ராமாச்சாரின் அப்பா வரதாச்சார் சிலகாலம் வீணை வித்வானாய் பணியாற்றியபோது, அவருக்கு அரசரிடமிருந்து கிடைத்த அன்பளிப்பு மண்டபம். அதற்குள் ஒரடி உயரத்தில் சேஷ சயனத்தில் ரங்கநாத விக்ரஹம். அதற்கு அருகில் கைக்கு அடக்கமாய் நரஸிம்மரின் விக்ரஹம். மேலக் கோட்டையில் ராமாச்சாரின் நண்பர் சம்பத் அய்யங்கார் மூலம் கிடைக்கப் பெற்றது. அதற்கு உக்கிரம் அதிகமாம். தினமும் பானகம் 'அம்சை' செய்து விடுவார்.

ஆராதனைக்குத் தயாராகும் போதே பெருமாள் சந்நிதியில் அவருக்கு எல்லாம் சரியாக இருக்க வேண்டும். புஷ்பம், சந்தனம், பால், பானகம் என்று தினசரி ஆராதனைக்குரியவற்றை ஜெயம்மா கொண்டு வைத்து விடுவாள். ஜெயம்மாவிற்கு இது ஐம்பது வருடப் பழக்கம். இதில் ஒன்று தவறினாலும் ராமாச்சார், துர்வாசர் ஆகிவிடுவாரென்பது அவள் அறிந்ததே.

ஆயினும் இன்று ஜெயம்மா தவிப்புடன் நின்றாள். ஆராதனை நேரத்தில், கணவரோடு சேர்ந்து சந்நிதியில் தம்பதி சமேதராய் சேவித்து பிறகு அவர் கையால் தீர்த்தம், பூ, பால், பானகம் இவற்றைப் பெறுவது வழக்கம். இன்று மட்டும் ஆராதனை முடியாமலேயே போய்விடக் கூடாதா என்று ஜெயம்மாவிற்கு மனது அடித்துக் கொண்டது.

'பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு...'

ராமாச்சார் உரத்த குரலில் பாசுரம் சொல்ல ஜெயம்மாவிற்கு உடம்பே நடுங்கியது. ஆயிற்று அடுத்தது பால், பானகம் அம்சைதான். பெருமாளுக்கு அதைச் சமர்ப்பித்து 'சர்வம் க்ருஷ்ணார்ப்பணம்' என்று சொல்லி விட்டால் ஆராதனை முடிந்து விட்டது.

அப்புறம் ராமாச்சார் கூடத்துக்கு வருவார். ஊஞ்சலில் உட்கார்ந்து கொள்வார். ஜெயம்மாவை நோக்கி 'பீரோவில் உள் தட்டில் ஒரு வெள்ளி பேலாவில் இருநூறு ரூபாய் வைத்திருந்தேன். அதைக் கொண்டு வா' என்பார்.

ஜெயம்மாவின் இப்போதைய பிரச்னையே இந்த இருநூறு ரூபாய்தான். இது மூன்று மாதமாக பீரோவில் வெள்ளிப் பேலாவிலேயே கிடக்க, நேற்றுதான் அது புடைவையாக மாறிப் போனது. ராமாச்சார் இந்தப் பணத்தை அடியோடு மறந்து விட்டதாய் நினைத்து ஜெயம்மா அந்தப் புடைவையை வாங்கத் துணிந்தாள். ஐம்பது வருஷங்களாய் இல்லாத அசட்டுத் துணிச்சல். ஹாஸனில் இருக்கும் பெரிய பிள்ளை துவாரகீஷிடம் கேட்டிருந்தால் கொடுத்திருப்பான். ஹூப்ளியில் இருக்கும் சின்னப் பிள்ளை பிரசாத்திற்கு ஒரு கார்டு போட்டிருந்தால் நேரிலேயே வந்து தாயார் கையில் தந்திருப்பான். அப்படியெல்லாம் கணவரைக் கேட்காமல் கடிதம் எழுதிப் பழக்கமில்லை; கோவையாய் எழுதவும் வராது.

மேலும் ராமாச்சாருக்குப் பிள்ளைகளைச் சார்ந்திருப்பது விருப்பமில்லாத ஒன்று. அதனாலேயே வயதான காலத்திலும் தனது மல்லேஸ்வரம் வீட்டை விற்காது மனைவியோடு தனியே வாழ்கிறார். பதினைந்தாவது வயதில் மன்னூரிலிருந்து மணமாகி இந்த வீடு வந்த ஜெயம்மாவிற்கு இதுதான் உலகம்.

ஐம்பது வருஷ மண வாழ்க்கையில் ராமாச்சாருக்குத் தெரியாமல் அவள் எங்கும் சென்றதில்லை; எதுவும் வாங்கியதுமில்லை.

நேற்றுதான் முதன்முறையாய் ஒரு பிசகு செய்தாயிற்று. நேற்று ராமாச்சார் தனது பழைய நண்பரைப் பார்த்துவர சென்னப்பட்டினம் போய்விட்டு இரவு வீடு திரும்புவதாய் கூறிச் சென்றார். அவர் நகர்ந்ததும் ஜெய்நகரிலிருந்து ஜெயம்மாவின் ஒன்றுவிட்ட சகோதரி சாயம்மா வந்தாள். சாயம்மாவிற்கு ஜெயம்மாவின் வயதுதான். ஆனால் ஜெயம்மாவைப் போல மடிசார் புடைவையும், முடிந்த கூந்தலும் இல்லாது சற்று நாகரிகமாய்த் தெரிந்தாள். பெங்களூரில் இருந்து கொண்டு கிராமத்து மனுஷி போல இருக்கும் ஜெயம்மாவை சாயம்மா சீண்டிப் போவதற்காகவே அடிக்கடி வருவாள். இம்முறை ராமாச்சார் வீட்டில் இல்லாதது அவளுக்கு சௌகர்யமாகப் போய் விட்டது.

"என் பண்றே ஜெய்ம்மா? எப்போ பார்த்தாலும் உனக்கு உங்க உள் (வீடு) தான். என்னைப் பாரு... நாற்பத்தி அஞ்சு வயஷிலேயும் பதினெட்டு வயசு சின்போண் மாதிரி ஊர் சுத்திக் கொண்டிருக்கேன். உனக்கு சதா உள் உள். போரடிக்கலையோ ஜெய்ம்மா?" என்று விஜாரித்தாள்.

"என் பண்றது சாயம்மா? அவர்க்கு பிடிச்ச மாதிரிதானே இருக்கணும்? பழகிப் போயிடுத்து.." ஜெயம்மா சிரித்து வைத்தாள். உள்ளூற சாயம்மாவின் துணிச்சலைக்கண்டு துவண்டும் போனாள்.

இந்த சாயம்மாவிற்குத்தான் எத்தனை சுதந்தரம்! ஜெய்நகரிலிருந்து தனியே பஸ் ஏறி மல்லேஸ்வரம் வந்திருக்கிறாள்! கணவரை 'கிழவர்' என்கிறாள். லேடீஸ் கிளப்பாம். 'இகபானா' வகுப்பாம். இடையிடையே இங்கிலீஷில் பேசுகிறாள்! அடேயப்பா..

சாயம்மாவின் போதனை அவள் சென்றும் சில மணி நேரங்கள் மண்டையிலேயே தங்கி இருக்க. அப்போதுதான் எதிர்வீட்டு கன்னடப் பெண் மணி வந்தாள்.

"ஜெயம்மா ஆன்டீ! நம் மனைகே பன்னி..." என்று அழைத்தாள்.

"எதுக்கும்மா உன் வீட்டுக்கு வரச் சொல்றே!"

"ஆன்டீ! புது ஸாரி நம் மனைக்கு வந்திருக்குது... மட்ராஸ் ஆளு எடுத்து வந்திருக்கான். வாங்கோ, ப்ளீஸ் ..."

"இல்லேம்மா... மாமாக்கு அப்படில்லாம் வாங்கினா பிடிக்காது..."

"மாமா, மனையல்லி இல்வா... சும்னே பார்க்க வாங்க..."

"பேடாம்மா..."

ஜெயம்மா மறுக்க மறுக்க அந்தப் பெண் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய்விட்டாள்.

"வாங்க பெரியம்மா... மஹாலக்ஷ்மியாட்டம் இருக்கீங்க... பழுத்த சுமங்கலியான உங்க கையால, என் புடைவை ஒண்ணு எடுத்து 'போணி' பண்ணி, ஆசீர்வாதம் செய்யுங்கம்மா..." மதராஸ் புடைவைக்காரர், ஜெயம்மாவின் திட மனதை சற்று ஆட்டி விடவும், அவன் விரித்துப் போட்ட வண்ண வண்ணப் புடைவைகளைக் கண்டதும் மனதின் ஆட்டம் அதிகமாயிற்று.

"ஜெயம்மாவுக்கு இந்தக் கருநீலப்புடைவை ஜோரா இருக்கும். அவங்களோட எலுமிச்சை நிறத்துக்கு இந்தக் கருநீல பாலியெஸ்டர் பட்டுப்புடைவை அமர்க்களமாயிருக்கும்..." பக்கத்து வீட்டுத் தமிழ்ப் பெண் ஒருத்தி தனக்குப் புடைவை எடுக்க வந்தவள் ஜெயம்மாவிற்கு ஒன்றைத் தேர்ந்தெடுத்தாள்.

"இருநூத்தி நாப்பது ரூபாம்மா. எட்டு கஜப்புடைவை. உங்களுக்காக இருநூறுக்கு - வாங்கின விலைக்கு - தரேன். வாங்கிப் போணி பண்ணுங்க, தாயே. மகாலட்சுமி!"

"நா.. நானா? , .. இருநூறு ரூபா..நா...நான் எப்டி?"

"ஆஃப்டரால் டு ஹண்ட்ரட், ஜெயம்மா மாமி! யோசிக்காதீங்கோ... துணிஞ்சி வாங்கிடுங்கோ..."

"ஹவுது, சென்னாகிதே..."

"ஃபஸ்ட் கிளாஸ் புடைவை, மாமிக்கு எடுப்பா இருக்கும்..."

"இருநூறு ரூபாய்தான் பெரிம்மா. மகாலட்சுமி!"

ஆளுக்கு ஆள் உசுப்ப, ஜெயம்மாவிற்கு வெள்ளிப் பேலாவில் மூன்று மாதமாய் இருக்கும் அந்தப் பணம் நினைவிற்கு வந்தது. ராமாச்சார் அந்தப் பணத்தை எப்போதோ கொடுத்து உள்ளே வைக்கச் சொன்னார். அதன் பிறகு அதை அவர் கேட்கவில்லை. மறந்துவிட்டார் போலும்!

ஜெயம்மா அந்தக் கருநீலப் புடைவையை எடுத்தாள். கை நடுங்கியது. சாயம்மாவின் உருவம் நினைவிற்கு வர, சட்டென நடுக்கம் நின்றது. தளர்ந்த உடம்பு நிமிர்ந்தது. நடை விரைந்தது. துணிவு வென்றது.

இன்று காலை எழுந்ததும் ராமாச்சார் எதற்கோ பஞ்சாங் கத்தைப் பிரித்தார். பிறகு உள்பக்கம் திரும்பி, "ஜெயம்... சிலநாள் மிந்தி உன் கையில இருநூறு ரூபா தந்து பீரோவுல வெள்ளிப் பேலாவுல வைக்கச் சொன்னேனே, நினை விருக்கா?" என்று கேட்டார்.



காபி கலந்து கொண்டிருந்த ஜெயம்மாவிற்கு டவரா கைவிட்டு நழுவிக் கீழே விழுந் தது. நல்ல வேளையாய் வாச லில் யாரோ காலிங் பெல் அழுத்த, "அடடே! ஸ்ரீரங்கம் சீமாச்சாவா? வாங்கோ...

வாங்கோ... எப்ப பெங்களூர் வந்தேள்? ஜெயம்... இரண்டு டம்ளரில் காபி கொண்டு வா..." என்று உற்சாகக் குரல் கொடுத்தார் ராமாச்சார்.

'சீமாச்சு வாழ்க!' என்று ஜெயம்மாவிற்குக் கூவ வேண்டும் போலிருந்தது.

சீமாச்சு பேசிப் போனதும் 'மல்லேஸ்வரம் கணபதி சேவா சங்க'ச் செயலாளர் வந்தார். கணேச உற்சவத்திற்கு டொனேஷன் பெ றுப் போனார். பேப்பர்க்காரர் வந்து பில் கொடுத்தார். வாட்டர் மீட்டர் ரிப்பேர் செய்ய ஓர் ஆள் வந்தான். எல்லாம் முடிந்து ஒன்பது மணிக்கு ராமாச்சார் குளிக்கப் போய்விட்டார். தலையில் நீர் ஊற்றிக் கொள்ளும்போதே, 'சப்த ப்ராகர மத்யே..' என்று ஸ்லோகம் சொல்ல ஆரம்பித்தாரானால் ஒரு மணி நேரம் கழித்து ஆராதனை முடியும் போதுதான் அவரால் வேறு எதையும் நினைக்க முடியும்.

ஜெயம்மா கைகளைப் பிசைந்தாள். 'மன்னூர் கிருஷ்ணா! என் குலதெய்வமே, என்னைக் காப்பாத்து... இத்தனை நாள் இல்லாமல் இப்போ ஆசையில் புத்தி தடுமாறிட்டேன்..'

"ஜெயம்..." ராமாச்சார் அழைத்தார். "பெருமாளை சேவிக்க இங்கு வராமல் அப்படி என்ன யோசனை?" அதட்டினார்.

"வந்துட்டேன்..." ஜெயம்மா கண்களில் நீர்மல்க விழுந்து விழுந்து சேவித்தாள். ராமாச்சார் வெள்ளிக்கிண்ணியிலிருந்து உத்ருணி மூலமாய் தீர்த்தம் சாதித்தார். ஜெயம்மாவிற்கு அதை வாங்கிக் கொண்டு கண்ணில் ஒற்றிக் கொள்ளக்கூடத் தோன்றவில்லை. நித்ய மல்லிப் பூக்களை அள்ளிப் பூக்குடலையில் போட்ட ராமாச்சார், "இன்னிக்கு ஏன் இப்படி மரமாட்டம் நிற்கறே? போ, போய் பூவைத் தொடுத்து வை..." என்று விரட்டினார்.

'ஒப்பிலேனாகிலும் யான் உனைச் சரணடைந்தேன், ஆனைக்கு நீ அருள் செய்தமையால்...'

ராமாச்சார் பாசுரம் கூறிய படி மேல் அங்கவஸ்திரத்தை உதறினார். ஊஞ்சலில் போய் உட்கார்ந்தார்.

"அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்..."

பாசுரத்தின் கடைசி வரி. ஜெயம்மாவிற்குப் பூமி பிளந்து உள்ளே போய்விடலாமா என்றிருந்தது. 'அப்போதைக் கிப்போதே...' ஆமாம், பிறகு உண்மை தெரிந்து மாட்டிக் கொள்வதற்கு முன்பு இப்போதே நடந்ததைச் சொல்லி விட்டால்...?

ஜெயம்மா ஒரு முடிவுடன் ஊஞ்சலை நோக்கி நடந்தாள்.

"ஜெயம்!" திடீரென ராமாச்சாரின் குரல் இளகிப் போகவும் ஜெயம்மா அதிர்ந்தாள். இது என்ன மாயம்! மறுபடி மறந்து விட்டாரா? உண்மையை இப்போது சொல்லத் தேவையில்லையா?

"ஜெயம்!"



"அலாரம் கேட்டீங்களே! அதைவிட டயம்பாம் 'சீப்'பா கிடைச்சது மாப்ளே!"

"சொல்லுங்கோ.." பயத்துடன் ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்து நின்றாள் ஜெயம்மா. நடுக்கத்திற்கு ஒரு பிடிப்பு.

"ஜெயம்! பீரோவுல வெள்ளிப் பேலாவுல..."

".....'

"இருநூறு ரூபாய் பணம் இருக்கோல்லியோ?"

"...."

"ஜெயம்! அந்தப் பணத்தை..."

"அந்தப் பணம்.. அந்தப் பணம்?"

"அது உனக்குத்தான் ஜெயம். நாளைக்கு நம்முடைய ஐம்பதாவது கல்யாண நாள். அதுக்கு உனக்கு என்ன வேணுமோ நீயே வாங்கிக்கோ... பாவம், இந்த வருஷமாவது உன் இஷ்டப்படி வாங்கிக் கொள். தொகை ரொம்ப சின்னதுதான்.. பிள்ளைகளைத் தொந்தரவு பண்ணாம என் வருமானத்துல என்னால சேமிக்க முடிஞ்சது அத்தனைதான். என் கையில இருந்தா யாராவது உதவி கேட்டு வந்தா கொடுத்துடுவேன்னுதான் மூணு மாசம் முன்னாடியே திட்டம் போட்டு அதை உன் கையில கொடுத்து உள்ளே வைக்கச் சொன்னேன். உன் குணத்துக்கு நான் இரண்டு லட்சம் தந்து, இந்த பொன் விழா கொண்டாடும் மண நாளை சிறப்பிச்சிருக்கணும். இருநூறு ரூபாய் ரொம்பவும் சின்னத் தொகைதான்; இல்லையா ஜெயம்?"

ராமாச்சார் நெகிழ்ந்த குரலில் முடிக்கவும் ஜெயம்மா சட்டென அவர் காலடியில் விழுந்தாள்!, உங்க மனம் ரொம்பப் பெரிசு. பெருந்தன்மையானது. நான்தான் சிறிதுநேர சபலத்துல அதைப் புரிஞ்சிக்கத் தவறிட்டேன்...!'

ஜெயம்மாவின் மனம் அரற்றிற்று.

# உங்கள் ராசி பலன்...

**16-12-1993 முதல் 13-1-1994 வரை**

ஸ்ரீமுக வருஷம் மார்கழி மாதம்
1ஆம் தேதி முதல் 29ஆம் தேதி வரை


பாலஜோசியர்
வித்வான் வே. லட்சுமணன்


**கிரக மாறுதல்**

21-12-1993 முதல் தனுசு - சுக்கிரன். 22-12-1993 முதல் தனுசு - புதன். 10-1-1994 முதல் மகர - புதன்.

**கிரக பாதசாரம்**

சூரியன் - மூலம் 1. சந்திரன் - உத்திராடம் 3 செவ்வாய் - மூலம் 1. புதன் - கேட்டை 1. குரு - சுவாதி 2. சுக்கிரன் - கேட்டை 2. சனி - அவிட்டம் 3. ராகு - அனுஷம் 2. கேது - கிருத்திகை 4.

## மேஷம் : (அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம் முடிய)

7இல் உள்ள குரு உங்கள் ஜன்ம ராசியையும், 11இல் உள்ள சனியையும் நோக்குவது குறிப்பிடத் தக்கது. ராசிநாதனும் சூரியனும் 9இல் இருப்பதால் கெடுபலன்கள் அதிகம் ஏற்படாது. தெய்வானுகூலம் காரணமாக உங்கள் முயற்சிகள் வெற்றியைத் தேடித்தரும். முக்கியமானவர்கள் உங்களுக்கு உதவிக்கரம் நீட்டுவார்கள். பயணம் பயன் உள்ளதாக அமையும். கணவனால் மனைவிக்கும், மனைவியால் கணவனுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் ஏற்றம் பெறுவார்கள். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். தெய்விகப்பணிகள் நிறைவேறும். மக்களால் பாக்கியங்கள் பெறுவீர்கள். பெற்றோர் நலம் திருப்திகரமாக இருந்து வரும். சமுதாயத்திற்குப் பயன் படத்தக்க ஓரிரு காரியங்களை ஆற்றுவீர்கள். அதனால் உங்கள் புகழும் செல்வாக்கும் உயரும்.

பணவரவு திருப்திகரமாக இருந்துவரும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும். அரசியல்வாதிகளும், அரசுப்பணியாளர்களும் தங்கள் குறிக்கோள் ஈடேறப் பெறுவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற இனங்கள் ஆக்கம் தரும். கறுப்பு நிறப் பொருட்கள் ஆதாயம் கொண்டுவரும். உழைப்பாளர்களும், உத்தியோகஸ்தர்களும் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவார்கள். கலைத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். வியாபாரிகள் செழிப்புப் பெறுவார்கள். ஆசிரியர்களும், பேராசிரியர்களும், மதபோதகர்களும், சட்ட வல்லுநர்களும் தங்கள் செல்வாக்கு உயரப் பெறுவார்கள். 2இல் உள்ள கேதுவும், 8இல் உள்ள ராகுவும் சிறுசிறு பிரச்னைகளை உண்டுபண்ணக் கூடுமாதலால் ராகு, கேதுக்களுக்குப் பிரீதியான காரியங்களில் ஈடுபடுவது நல்லது. பரணி நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது அவசியம். டிசம்பர் 16,18,19,23,24, 26,27,28,30 ஜனவரி 3,4,6,10,11,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் நலம் தரும். துலா, தனுசு, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,8,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## ரிஷபம் : (கிருத்திகை 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2ஆம் பாதம் முடிய)

கிரகநிலை திருப்திகரமாக இல்லாததால் நீங்கள் எதிலும் ஒரு முறைக்கு இருமுறை யோசித்து ஈடுபடுவது நல்லது. அவசரப்போக்கு அடியோடு கூடாது. 8இல் சூரியனும், செவ்வாயும் உலவுவதால் விபத்துக்கு ஆட்பட நேரும். இயந்திரங்கள், எரி பொருட்கள், கூரிய ஆயுதங்கள் பக்கம் நெருங்கும் போது பாதுகாப்புத் தேவை. பயணத்தை ஒத்திப் போடுவது நல்லது. அவசியமானால் தகுந்த பாதுகாப்புடன் மேற்கொள்ளலாம். எதிர்ப்புகளின் கரம் வலுத்திருக்கும் நேரமிது என்பதால் யாரிடத்திலும் வெளிப்படையாகப் பழக வேண்டாம். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. உடல் ஆரோக்கியம் கவனிக்கப்பட வேண்டிவரும். நண்பர்கள், உற்றார், உறவினர்களை நம்பி மோசம் போக வேண்டாம். நிலபுலங்கள் விஷயத்தில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது.

வாழ்க்கைத் துணைநலம் கவனிக்கப்பட வேண்டி வரும். மக்களால் அனுகூலமிராது. பெற்றோர் நலனில் அக்கறை தேவைப்படும். எடுத்த காரியத்தை நிறைவேற்ற அரும்பாடுபட வேண்டிவரும். வீண் வழக்கு, வியாஜ்ஜியங்களில் ஈடுபட வேண்டாம். பிறர் மனம் புண்படும்படியான வார்த்தைகளை

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| சனி | கிரக நிலை | | |
| | | | |
| சூரி செவ் | புத, சுக் ராகு | குரு | |

உதிர்க்காமல் இருப்பது நல்லது. குடும்பத்தில் சிறுசிறு சலசலப்புகள் அவ்வப்போது உண்டாகும். பொறுமையுடனும் பக்குவத்துடனும் சமாளிப்பது அவசியமாகும். நூதன முயற்சிகளை ஒத்திப் போடுவது நல்லது. பொருளாதார நிலை ஏற்றம், இறக்கம் கொண்டதாகவே அமையும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறைவடையும். தெய்வ வழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவதன் மூலம் மனநிம்மதி பெறமுடியும். ரோகிணி நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது அவசியம். டிசம்பர் 16,18,19,23,24,26,27,28,30 ஜனவரி 3,4,6,7,8,13 தேதிகள் அனுகூலமானவை. மேற்குத் திசை அனுகூலமானது. கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,8 எண்கள் நலம் தரும்.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3ஆம் பாதம் முடிய)

குருபலம் காரணமாக உங்கள் எண்ணங்களில் மலர்ச்சி உண்டாகும். தெய்வானுகூலம் சித்திக்கும். மனத்திற்கினிய சம்பவங்கள் வாழ்க்கையில் இடம் பெறும். பெரியவர்களும், தனவந்தர்களும் உங்கள் முன்னேற்றத்திற்கு உற்ற துணையாக விளங்குவார்கள். பொருளாதார நிலையில் விசேடமான வளர்ச்சி காண்பீர்கள். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். தெய்வப்பணிகளிலும், தருமப் பணிகளிலும் ஈடுபட வாய்ப்புகள் கூடிவரும். அலுவலகங்களில் பணி புரிபவர்கள் பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இட மாற்றம் ஆகியவற்றைப் பெறுவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் மதிப்பு உயரப் பெறுவார்கள். ஆசிரியர்களது நிலை உயரும். பொருள் நடமாட்டமுள்ள இடங்களில் பணியாற்றுபவர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும்.

தொலைதூரப் பயணம் ஆக்கம் தரும். வெளிநாட்டுத் தொடர்பு காரணமாக நலம் பெற வாய்ப்புண்டு. கணவன், மனைவி உறவுநிலை ஒருநாள் போல் மறுநாளிராது. ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்திருக்கவும் கூடும். சலசலப்புகளுக்கும் காரணம் உண்டு. விட்டுக்கொடுத்துப் பழகுவது நல்லது. கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும். எக்காரியத்திலும் பதற்றம் அடியோடு கூடாது. நிதானம் மிகத் தேவை. கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் பொறுப்புடன் காரியமாற்றினால் சரிவுக்கு ஆட்படாமல் தப்பலாம். மாதர்களது வளர்ச்சி தடைப்படும். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்துவது நல்லது. நிலபுலங்கள் விஷயத்தில் விழிப்புடன் ஈடுபடுவது அவசியமாகும். திருவாதிரை நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. டிசம்பர் 18,19,23,24,26,27,28,30 ஜனவரி 3,4,6,7,8,10,11 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, கும்ப, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கடகம் : (புனர்பூசம் 4ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

செவ்வாய் பலம் காரணமாக உங்கள் பராக்கிரமம் வெளிப்படும். எதிரிகள் ஓடி ஒளிவார்கள். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். வழக்கு, விவகாரங்களில் நல்ல திருப்பம் உண்டாகும். அரசியல்வாதிகளும், அரசுப் பணியாளர்களும் தங்கள் நிலைமையில் அபிவிருத்தி காண்பார்கள். பொறியியல் துறை ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். நிலம், மனை, வீடு, வாகனங்களால் அனுகூலம் உண்டாகும். நிர்வாகத் திறமை பளிச்சிடும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். நண்பர்கள் தக்க தருணத்தில் முன்வந்து உதவுவார்கள்.

21ஆம் தேதி முதல் வாழ்க்கைத் துணைநலனில் கவனம் தேவைப்படும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. 22ஆம் தேதியிலிருந்து புத பலம் கூடுவதால் வியாபாரிகளுக்கும், எழுத்தாளர்களுக்கும், கணிதத்துறையாளர்களுக்கும் வெளிச்சமான பாதை தெரியவரும். 8இல் உள்ள சனி அலைச்சலை அதிகப்படுத்துவார். அயராது உழைக்கத் தூண்டுவார். உடல் சோர்வையும் உண்டுபண்ணுவார். மறைமுக எதிரிகளால் ஓரிரு தொல்லைகள் சூழும். 8இல் உள்ள சனியை வியாழன் நோக்குவதால் சங்கடங்கள் என்பவை குறைவடையும். செய்துவரும் தொழிலில் சீரான வளர்ச்சியைக் காணமுடியும். நற்பணிகளுக்காக ஓரிரு செலவுகளை மேற்கொள்ள நேரலாம். பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் பற்றுள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். ஆயில்ய நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,23,24,26,27,28,30 ஜனவரி 3,4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. கிழக்கும், தெற்கும் அனுகூலமான திசைகளாகும். தனுசு, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம் முடிய)

கோசாரப்படி குரு, சனி, செவ்வாய் ஆகியோரது பலம் திருப்திகரமாக இல்லாததால் உங்கள் தேக ஆரோக்கியம், கௌரவம், அந்தஸ்து, புகழ், வாழ்க்கை வசதிகள் யாவும் சாதாரணமாகவே காணப்படும். சோர்வை அகற்றிச் சுறுசுறுப்புடன் பாடுபட்டால் ஓரளவு பயன்பெற முடியும். உழைப்புக்குப் பின்வாங்கலாகாது. தீயவர்களின் தொடர்பை விட்டு விலகி, நல்லவர்களின் நட்புறவைக் கூட்டிக் கொண்டால் நலம் பெருக வாய்ப்

புண்டு. பொருள் வரவு சாதாரணமாகவே காணப்படும். செலவினம் கூடும். சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களால் அதிகம் அனுகூலத்தைப் பெற இயலாது. மக்கள் நலனில் கவனம் தேவைப்படும். வாழ்க்கைத் துணைநலனில் அக்கறை செலுத்துவது நல்லது.

கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் பக்குவமாகப் பழகிவருவது அவசியமாகும். புத, சுக்கிர பலம் காரணமாக வியாபாரிகளுக்கும், கலைத் துறையினருக்கும் உற்சாகமான சூழ்நிலை உதயமாகும். நண்பர்களும், உற்றார், உறவினர்களும் உதவ முன்வருவார்கள். கேளிக்கை உல்லாசங்களில் ஈடுபாடு கூடும். மாதர்களது நலம் சிறப்புடன் காணப்படும். சமுதாய நலப்பணியாளர்கள் வரவேற்பு கூடப் பெறுவார்கள். கணிதம், விஞ்ஞானம், எழுத்து போன்ற துறைகள் ஆக்கம் தரும். மாணவர்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். பெற்றோரால் ஓரிரு நன்மைகளைப் பெறச் சந்தர்ப்பம் கனிந்துவரும். செய்துவரும் தொழிலில் பொறுப்புடன் ஈடுபட்டால் முன்னேற்றம் காணமுடியும். நூதன முயற்சிகளில் பிரவேசிக்கலாகாது. பூர நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,18,19,23,24,26,27,28,30 ஜனவரி 3,4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. தென் கிழக்குத் திசை அனுகூலமானது. விருச்சிக, தனுசு ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கன்னி : (உத்திரம் 2ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2ஆம் பாதம் முடிய)

2இல் உள்ள குருவும், 6இல் உள்ள சனியும் உங்களுக்கு நலம் புரியக்கூடிய நிலையில் சஞ்சரிப்பதால் அறிவாற்றலும், செயல்திறமையும் கூடப் பெறுவீர்கள். பேச்சுவன்மை பிரகாசிக்கும். குடும்பத்தில் குதூகலம் கூடும். பொருள்வரவு திருப்திகரமாக இருந்துவரும். வரவேண்டிய பாக்கிப் பணம் வசூலாகும். கடன் தொல்லைகள் கொஞ்சங் கொஞ்சமாகத் தீரும். நல்லவர்கள் நலம் புரிய முன்வருவார்கள். உற்றார், உறவினர்களாலும் அனுகூலம் உண்டாகும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். மக்களால் அனுகூலம் பெறுவீர்கள். விருந்து உபசாரங்களில் பங்கு கொள்ளச் சந்தர்ப்பம் கூடிவரும். கடிதப்போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். அலுவலகங்களில் பணி புரிபவர்களுக்குச் செழிப்பான பாதை புலப்படும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், சட்ட வல்லுநர்கள், மேடைப்பிரசங்கிகள், ஆன்மிகவாதிகள் ஆகியோர் தங்கள் செல்வாக்கு உயரப் பெறுவார்கள்.

பிற மொழி, மதக்காரர்களால் நலம் பெற வாய்ப்புண்டாகும். பயணம் பயன்படும். என்றாலும் சிறு சங்கடமும் ஏற்படும். தொழிலாளர்களும், விவசாயிகளும் தங்கள் குறிக்கோள் ஈடேறப் பெறுவார்கள். இரும்பு சம்பந்தப்பட்ட இனங்கள் ஆக்கம் தரும். பொன் பொருட்களின் சேர்க்கை நிகழும். 4இல் சூரியனும் செவ்வாயும் உலவுவதால் அலைச்சல் அதிகரிக்கும். உடல் நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். இயந்திரங்களில் பணிபுரிபவர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. நிலம், மனை, வீடு, வாகனங்களால் அதிகம் அனுகூலமிராது. பெற்றோர் நலனிலும், உடன்பிறந்தவர்களின் நலனிலும் அக்கறை தேவைப்படும். 22ஆம் தேதி முதல் வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். மாணவர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் மந்தநிலை விலகும். 10ஆம் தேதி முதல் அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடும். ஹஸ்த நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,18,19,26,27,28,30 ஜனவரி 3,4,6,7, 8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம் : (சித்திரை 3ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ஆம் பாதம் முடிய)

3இல் உள்ள செவ்வாயும், சூரியனும் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார்கள். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் செயற்கரிய காரியங்களில் ஈடுபட்டு அவற்றில் வெற்றியும் பெறுவீர்கள். எதிர்ப்புகளின் கரம் வலுக்குறையும். நல்ல தகவல் ஒன்று வந்துசேரும். சிறுசிறு பயணங்களை அடிக்கடி மேற்கொள்ள வேண்டிவரும். அதனால் நன்மையும் உண்டாகும். அரசியல்வாதிகள், நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள், மருத்துவர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான பாதை புலப்படும். பொறியியல் துறை ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகம் கூடப் பெறுவார்கள். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற இனங்கள் நலம் தரும். தொழிலாளர்களும், விவசாயிகளும் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள்.

மக்கள் நலம் சீராக இருந்துவரும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். வியாபாரிகள், கணிதத் துறையாளர்கள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்கள் ஆகியோருக்கெல்லாம் 21ஆம் தேதி வரையிலும் நன்மைகள் பெருகும். அதன் பிறகு ஓரிரு சோதனைகள் உண்டாகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மாதர்களது எண்ணம் ஈடேறும். புதிய ஆடை, அணிமணிகள் சேரும். விருந்து உபசாரங்களில் பங்கு கொள்வீர்கள். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் அனுகூலம் உண்டாகும். 10ஆம் தேதி முதல் மாணவர்களுக்கு வெளிச்சமான சூழ்நிலை உதயமாகும். வியாபாரிகளும், கணிதத் துறையாளர்களும் வளர்ச்சிக்கான மார்க்கத்தைக் காண்பார்கள். சுவாதி நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,18,19,23,24,28,30 ஜனவரி 3,4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. தென்திசை அனுகூலமானது. விருச்சிக, தனுசு, மேஷ ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## விருச்சிகம் : (விசாகம் 4ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

முக்கியமான கிரகங்களாகிய குரு, சனி, செவ்வாய் ஆகியோர் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் அபிலாஷைகள் நிறைவேறத் தடைகள் இருந்துவரும். அங்குமிங்கும் அலைந்து திரியவேண்டிய நிலை ஏற்படும். எடுத்தக் காரியங்களை நிறைவேற்ற அரும்பாடுபட நேரும். மனநிம்மதி குறையும். உடல் நலம் ஒரு நாள் போல் மறுநாளிராது. பேச்சில் நிதானத்தைக் கடைப்பிடிப்பது நல்லது. சூடான வார்த்தைகளை உதிர்க்காமல் இருந்தால் மற்றையோரின் அதிருப்திக்கு ஆளாகாமல் தப்பலாம். குடும்பத்திலும் அமைதி காணமுடியும். பொருளாதார நிலை சீராகவே இருந்துவரும். நற்பணிகளுக்காக ஓரிரு செலவுகளை மேற்கொள்ள நேரலாம். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை.

தொழிலாளர்களும், உத்தியோகஸ்தர்களும் தங்கள் பொறுப்புணர்ந்து காரியமாற்றினால் சோதனைகளுக்கு ஆளாகாமல் தப்பலாம். மக்களால் செலவுகள் அதிகரிக்கும். கணவன், மனைவியிடையே சிறுசிறு பிரச்னைகள் உருவாகும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. பெரியவர்களின் அதிருப்திக்கு ஆளாகாமல் அவர்களின் நல்லெண்ணங்களுக்குப் பாத்திரமாவதன் மூலம் நலம் பெற வாய்ப்புண்டாகும். தெய்வப் பணிகளிலும், தருமப் பணிகளிலும் தொடர்ந்து ஈடுபடுபவர்களுக்கு மன நிம்மதி கிட்டும். செய்துவரும் தொழிலில் சீரான வளர்ச்சி காணலாம். புதிய முயற்சிகளை ஒத்திப் போடுவது நல்லது. அதிர்ஷ்ட வாய்ப்புகளை நம்பி, கைப்பொருளை இழக்க வேண்டாம். கலைஞர்கள் அளவோடு வளர்ச்சி காண்பார்கள். 10ஆம் தேதி முதல் வியாபாரிகளும், கணிதத் துறையாளர்களும், மாணவர்களும் ஓரிரு பிரச்னைகளுக்கு ஆட்பட நேரும். கேட்டை நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,18,19,23,24,26 ஜனவரி 3,4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்குத் திசை அனுகூலமானது. 6ஆம் எண் நலம் தரும். தனுசு, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள்.

## தனுசு : (மூலம், பூராடம், உத்திராடம் 1ஆம் பாதம் முடிய)

குருவும் சனியும் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் முயற்சிகளுக்குப் பலன் கிடைக்கும். கடுமையாக உழைத்துப் பாடுபடுபவர்கள் இரட்டிப்புப் பயன் பெறுவார்கள். தொழிலாளர்களது நிலை உயரும். தொழிலதிபர்கள் புதியத் துறைகளில் ஈடுபடுவார்கள். மனத்தில் உற்சாகம் வேர்விடும். கலைத்துறை ஆக்கம் தரும். நல்ல தகவல் ஒன்று கிடைக்கப் பெறுவீர்கள். மக்கள் நலம், வாழ்க்கைத் துணைநலம், பெற்றோர் நலம் யாவும் சிறப்புடன் இருந்துவரும். இரும்பு சம்பந்தப்பட்ட இனங்கள் ஆதாயம் தரும். தகவல் தொடர்பு துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு கூடும். பயணத்தால் பயன் உண்டாகும். அயல்நாட்டுத் தொடர்பால் அனுகூலம் பெறுவீர்கள். பொன், வெள்ளி, இரத்தின வியாபாரிகள், வங்கிகளில் பணிபுரிபவர்கள் சேமிப்பு நிறுவனங்களில் ஈடுபாடு உள்ளவர்கள் ஆகியோருக்கெல்லாம் சுபிட்சம் கூடும்.

பக்தி மார்க்கத்திலும், ஞான மார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். தெய்வப்பணிகள் நிறைவேறும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் ஏற்றம் பெறுவார்கள். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகமான பாதையைக் காண்பார்கள். 22ஆம் தேதி முதல் வியாபாரிகளுக்கும், கணிதத் துறையாளர்களுக்கும், விஞ்ஞானிகளுக்கும் வெளிச்சம் தெரியவரும். ஜன்ம ராசியில் சூரியனும், செவ்வாயும் உலவுவதால் உஷ்ணாதிக்கம் கூடும். அலைச்சல் அதிகரிக்கும். கோபகுணம் கூடும். மற்றையோர் மனம் புண்படும்படியான செயல்களில் ஈடுபடாமல் இருப்பது நல்லது. வீண் செலவுகளைத் தவிர்ப்பதும் அவசியமாகும். எதிலும் பதற்றம் கூடாது. பொறுமை மிகத்தேவை. பூராட நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. டிசம்பர் 16,18,19,23,24,26,27,28 ஜனவரி 3,4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் நலம் தரும். கும்ப, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் : (உத்திராடம் 2ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2ஆம் பாதம் முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகியோரது பலம் திருப்திகரமாக இல்லாததால் உங்கள் தேக ஆரோக்கியம் சீராக இராது. மதிப்பும், அந்தஸ்தும் குறையும். குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் உருவாகும். பொருள்வரவைக் காட்டிலும் செலவுகள் கூடும். இங்குமங்கும் அலைந்து திரிய வேண்டிவரும். பேச்சில் நிதானம் தேவை. உடன்பிறந்தவர்களால் தொல்லைகள் சூழும். முயற்சிகளுக்கு வெற்றி கிடைப்பது அரிது. மக்கள்நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். விபத்துக்கு இடமுண்டு என்பதால் எக்காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபடுவது நல்லது. வீண் சண்டை சச்சரவுகளில் பிரவேசிக்கலாகாது. நிலபுலங்கள் விஷயத்தில் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது அவசியம். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் ஓரிரு தொல்லைகளுக்கு ஆட்படுவார்கள்.

எரிபொருட்கள், இயந்திரங்கள், கூரிய ஆயுதங்கள் ஆகியவற்றின் பக்கம் நெருங்க வேண்டாம். சுக்கிர பலம் காரணமாக மாதர்களது நலம் சீராக இருந்துவரும். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். 22ஆம் தேதி வரையிலும் கணிதம், விஞ்ஞானம், எழுத்து, வியாபாரம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வளர்ச்சி

## பொய் பிறந்தது!

நாஞ்சில் இராமநாதன்



நீண்ட
நாட்களுக்குப் பின்
பீச்சில்
காதலியைச்
சந்தித்தேன்
மெய்மறந்தேன்
பொய் பிறந்தது!

காண்பார்கள். அதன் பிறகு சரிவு ஏற்படக் கூடுமாகையால் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. தொழிலாளர்களும், உத்தியோகஸ்தர்களும் முன்னேற்றம் காண அரும்பாடுபட வேண்டிவரும். அரசியல்வாதிகள் அடக்கத்துடன் இருப்பது அவசியம். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சோதனைகள் என்பவை குறைவடையும். இறைவழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவதன் மூலம் மனநிம்மதி பெறலாம். டிசம்பர் 16,18,19,23, 24,26,27,28,30 ஜனவரி 4,6,7,8,10,11,13 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, தென்மேற்குத் திசைகள் அனுகூலமானவை. விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 4,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

### கும்பம் : (அவிட்டம் 3ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ஆம் பாதம் முடிய)

9,10,11ஆம் இடங்களில் உள்ள கிரகங்கள் உங்கள் அறிவாற்றலையும், செயல்திறமையையும் வெளிப்படுத்துவார்கள். எதிர்ப்புகளின் கரம் வலுக் குறையும். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் எடுத்த காரியங்களில் ஈடுபட்டு வெற்றி வாய்ப்புகளைப் பெறுவீர்கள். பொருளாதார நிலை உயரும். எதிர்பாராத பொருள் சேர்க்கை நிகழும். தெய்வப் பணிகளிலும், தருமப் பணிகளிலும் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். அரசியல்வாதிகள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். பெற்றோரால் மக்களுக்கும், மக்களால் பெற்றோருக்கும் அனுகூலங்கள் உண்டாகும். முயற்சிகள் எளிதில் நிறைவேறும். தடைகள் என்பவை விலகும். உழைப்பு வீண்போகாது. ஆசிரியர்களும், பேராசிரியர்களும், சொற்பொழிவாளர்களும், ஆன்மிகவாதிகளும், சட்ட வல்லுநர்களும் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவார்கள்.

ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். ஏற்றுமதி, இறக்குமதி துறைகள் லாபம் தரும். அயல்நாட்டுத் தொடர்பாலும், நூதனமானவர்களது தொடர்பாலும் நலம் பெறுவீர்கள். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலைமையில் வளர்ச்சி காண்பார்கள். செந்நிறப்பொருட்கள் லாபம் தரும். வேலையில்லாதவர்களுக்கு வேலைவாய்ப்பு கிடைக்கும். ஏற்கெனவே வேலையில் உள்ளவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவற்றைப் பெறுவார்கள். உடன்பிறந்தவர்கள் பக்கபலமாக விளங்குவார்கள். நிலபுலன்களால் அனுகூலம் உண்டாகும். புதியத் துறைகளில் முதலீடு செய்யச் சந்தர்ப்பம் கனிந்துவரும். 22ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். ஜனவரி 10ஆம் தேதி முதல் வியாபாரிகள் விழிப்புடன் இருப்பது நல்லது. சதய நட்சத்திரக்காரர்கள் எச்சரிக்கையுடன் இருப்பது அவசியமாகும். டிசம்பர் 16,18,19,23,24,26,27,28,30 ஜனவரி 6,7,8,10,11,13 தேதிகள் விசேடமானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, தனுசு ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,4,5,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

### மீனம் : (பூரட்டாதி 4ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

10இல் உள்ள செவ்வாய் உங்கள் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவார். எதிர்ப்புகளின் தாக்குதல் குறையும். தடைப்பட்டக் காரியங்கள் நிறைவேறத் தொடங்கும். அரசாங்கத்தாரால் அனுகூலம் பெறுவீர்கள். அரசியல்வாதிகளுக்குச் செல்வாக்கு உயரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் பாராட்டுகளுக்கு உரியவர்களாவார்கள். குடும்ப நலம் சீராக இருந்துவரும். உற்றார், உறவினர்களாலும், நண்பர்களாலும் நலம் பெறுவீர்கள். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகளின் சேர்க்கையோ, அல்லது அவற்றால் ஆதாயமோ கிடைக்கப் பெறுவீர்கள். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். நிர்வாகத்திறமை கூடும். பக்தி மார்க்கத்தில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு மனத் தெளிவு உண்டாகும்.

கலைத் துறையினருக்கு மாமூலான வரவேற்பு குறையாது. 22ஆம் தேதி முதல் வியாபாரிகள் செழிப்பான சூழ்நிலையைக் காண்பார்கள். மாணவர்களது நிலைமையிலும் அபிவிருத்தி தெரியவரும். எழுத்தாளர்களும் பத்திரிகையாளர்களும் புகழ் பெறுவார்கள். ராசிநாதன் 8இலும், சனி 12இலும் உலவுவதால் உடல்நலனில் கவனம் தேவைப்படும். புதிய துறைகளில் முதலீடு செய்ய இந்த நேரம் ஏற்புடையதாகாது. தொழிலாளர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் ஓரிரு சோதனைகள் ஏற்படும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். குரு, சனிப் பிரீதியான காரியங்களில் ஈடுபட்டு வருவது நல்லது. ரேவதி நட்சத்திரக்காரர்களுக்குச் சோதனையான நேரமிது. டிசம்பர் 16,18,19,23,24,26, 27,28,30 ஜனவரி 3,4,6,10,11,13 தேதிகள் சிறப்பானவை. தென்திசை நலம் தரும். விருச்சிக, தனுசு ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

# மீண்டும் சலங்கை

சியாமளா ராவ்

வீட்டினுள்ளிருந்து வந்த சலங்கை ஒலியைக் கேட்டு ஒரு கணம் தடுமாறிய ரவி, மறுபடியும் தன் வீட்டை உற்றுப் பார்த்தான். ஆமாம். அது அவன் வீடுதான். ஆனால் சலங்கை ஒலி எப்படி...

ஆவலுடன் கதவின்மேல் கை வைத்தான். தாளிடப்படாத கதவு திறக்கவும் சத்தமிடாமல் பார்த்தவன் கண்கள் வியப்படைந்தன.

ஆடியது அவன் அம்மாதான்.

அம்மாவிற்கு நாட்டியம் ஆடக்கூடத் தெரியுமா?

பிரமிப்பு நீங்காமலேயே ஆட்டத்தில் அம்மா காட்டிய நவரசங்களையும் சிலிர்ப்புடன் பார்த்தான். சந்தோஷம் பொங்கியது.

கைகள் படபடவென்று தட்டும் ஒலி கேட்டு ஒரு வினாடி சரீரம் துள்ளத் திரும்பிப் பார்த்தான்.

ஆட்டத்தின் வேகத்தினால் வியர்வை வழிய நின்ற அவன் அம்மா மாலா, களைப்புடன் எதிரே கைதட்டியவரைப் பார்த்துப் புன்னகைத்தாள்.

"மாலு... நம்ம குழந்தை இப்ப எப்படி இருக்கான்? என்னைப் பத்தி எப்பவாவது கேட்பானா? நன்னா வளந்துருப்பானே. இவ்வளவு நாளா... குழந்தையையும்... உன்னையும்... மாலு... மாலு...."

அந்த மனிதர் ரவியின் அம்மாவை அணைத்தபடியே விம்மி, விம்மி அழலானார். கூடவே மாலுவும் அழ, ரவியின் கண்களும் நிறைந்தன.

நினைவு தெரிந்து பார்த்தேயிராத அப்பாவை ஓடி அணைத்துக் கொள்ள வேண்டும் என்ற வெறியே ஏற்பட்டாலும், பெற்றவர்களின் இந்த சங்கமத்தைப் பிரிக்க மனமில்லாமல் கண்கள் வழிய நின்றான்.

சட்டென்று கலைந்து போனவர்களாய், சிவந்து போன முகத்துடன், தங்கள் செய்கைக்குத் தாங்களே வெட்கி, ஒருவரையொருவர் பார்த்துத் தலைகுனிந்தபடியே சிரித்துக் கொண்டனர்.

மாலாதான் சூழ்நிலையின் இறுக்கத்தைத் தளர்த்தினாள்.

"நம்ப ரவி இப்ப எவ்வளவு உசரமா வளர்ந்துட்டான் தெரியுமோ? உசரத்துக்கு உங்களையே கொண்டிருக்கிறான். ப்ளஸ் ஒன் படிக்கிற பையன் மாதிரியே இல்லே. சில குணங்கள் அப்படியே உங்களாட்டமே தான். இதோ, இப்ப வந்துடுவான். பாருங்களேன். அவன் வர நேரமாச்சு".

"அம்...மா, நான் வந்து நேரமாச்சு..."

சொல்லியபடியே வந்த ரவி தன் தந்தையைக் கண்கொட்டாமல் பார்த்தான்.

அவன் உள்ளத்தில் பிறந்த எத்தனையோ கேள்விகள் இத்தனை நாள்கள் விடை தெரியாமல் விழித்ததற்கு, இன்று அவரே பெரிய விடையாக வந்து நிற்பது அவனுக்குத் தாங்கவே முடியவில்லை. அது வேதனையினாலா, சந்தோஷத்தினாலா என்பது குறித்து அவனுக்கே புரியாத புதிராய் இருந்தது.

ரவியைப் பார்த்து ஒரு கணம் அப்படியே உறைந்து நின்றவர், மறு கணம் அவனைத் தன்னுடன் சேர்த்து இறுக்கிக் கொண்டார். இரு கைகளாலும் அவன் முகத்தை ஏந்தி, கண்களால் விழுங்குவது போல் பார்த்தார். பனித்த கண்களை உள்ளடக்கி அவன் நெற்றியில் மென்மையாய் முத்திட்டு, முதுகில் ஆசையுடன் தட்டினார்.

அவ்வளவுதான் உடைந்தே போனான் ரவி.

"அப்பா, ஏம்ப்பா இப்படி எங்களைத் தனியா தவிக்க விட்டீங்க? அம்மா என்னப்பா தப்பு செஞ்சாங்க? எதுக்குப்பா? ஏன்? ஏம்ப்பா? சொல்லுங்கப்பா... சொல்லுங்க..."

கலைந்த தலையும், கொட்டும் விழிகளுமாய், இத்தனை நாள்கள் தவித்த தவிப்பும், அவமானமும், முகத்தை ஒரு கோபமான நிலைக்குத் தள்ள, அத்தனையையும் உடனே அறிந்து கொள்ளும் உத்வேகமுமாய் அவரை இறுகப் பிடித்து உலுக்கினான்.

பற்களைக் கடித்தபடி, நீர் வழியும் கண்களுடன் அவன் நிற்பதைக் காணச் சகிக்காமல் மாலா ஓடி வந்து அவனை சமாதானப்படுத்தினாள்.

"அப்பா, இப்பவாவது வந்தாரேன்னு சந்தோஷமாயிருக்கணும் ரவி. இப்படி அழலாமா கண்ணா..."

ரவியின் தந்தை மோகன் அவனருகில் வந்தார்.

"ரவி, உன்னோட குமுறுற மனசு எனக்கு நல்லாவே புரியுதுப்பா. ஒரு ரெண்டு நாள், ரெண்டே நாள் பொறுத்துக்கப்பா. ப்ளீஸ் ரவி. ஏன்னா, நான், என் மனைவி, மகன்னு இருக்கணும்னு ஆசைப்பட்டது இத்தனை நாள் கனவாயிருந்து, இன்றுதான் நனவாயிருக்குடா கண்ணா. பதினைஞ்சு வருஷத்துக்கப்புறமா சந்திக்கிற நாம, பழசைக் கிளறிக் கஷ்டப்படாம, மொதல்ல சந்தோஷத்தை அனுபவிப்போம். அப்புறமா எல்லா விவரங்களையும் கண்டிப்பா சொல்றேன் ரவி. என்னை நம்பு கண்ணா".

மௌனமாய் நின்றான் ரவி.

"ரவி, அப்பா சொல்றதுக்கு சரின்னு சொல்லு. முக்கியமான ஒண்ணை மட்டும் சொல்லிடறேன். நாம ரெண்டு பேரும் தனியா இருந்ததுக்குக் காரணம் கண்டிப்பா உங்கப்பா இல்லே. அதை மட்டும் இப்ப நீ தெரிஞ்சுண்டா போறும்".

அம்மாவின் ஆணித்தரமான வார்த்தைகளுக்குப் பிறகு ரவியின் மனதிலும் சில மாற்றங்கள். தன்னையே திடப்படுத்திக் கொண்டான். இருவரையும் பார்த்து இணக்கமாய் சிரித்தான். நிறைந்த மனதுடன் இருவரின் கைகளையும் பிடித்துக் கொண்டான்.

"மாலு, இன்னிக்கு நீ சமைக்க வேண்டாம். ஜாலியா மூணு பேருமா போய் சுத்திட்டு, வெளியிலேயே சாப்பிடலாம். சீக்கிரமா ரெண்டு பேரும் ரெடியாகுங்கோ".

சொன்ன மோகனை ஏறிட்டான் ரவி.

"அப்பா, நம்ப சந்தோஷத்தை வீட்டுலேயே அனுபவிக்கலாம்ப்பா. வெளியிலே போனா, மத்தவாளுக்காக, அக்கம் பக்கம் பார்த்து நம்ப பேச்சையும், சந்தோஷத்தையும் கட்டுப்படுத்திக்கணும். வீடுன்னா ஃப்ரீயா ஃபீல் பண்ணலாம்ப்பா".

இத்தனை நாள்கள் ஏக்கத்தையும் இந்த ஒரே . நாளில் அனுபவிக்கத் துடிக்கும் தன் மகனின் மனம், இந்தப் பேச்சில் புரிய, மோகன் பிரமித்துத் தான் போனான். உண்மையான சந்தோஷத்துடன் ஒத்துக் கொள்ளவும் செய்தார்.

ஆயிற்று. மோகன் கூறியபடி இரண்டு நாள்களும் கழிந்தன. எல்லாப் பேச்சுகளிலும் மகிழ்ச்சியாய் கலந்து அனுபவித்தாலும், ஒரு மூலையில் முணுக் முணுக்கென்று ஒரு சிறிய குரல் ரவியைத் தொந்தரவு செய்து கொண்டே இருந்தது. எப்போது நாம் எல்லாம் தெரிந்து கொள்வோம் என்ற பரிதவிப்பிலேயே மனம் பரபரத்துக் கொண்டிருந்தது.

அன்றிரவு மொட்டை மாடியின் நிலா வெளிச்சத்தில் ஒரு பெரிய ஜமுக்காளம் விரிக்கப்பட, அதில் தந்தையின் மடியில் தலையையும், தாயின் மடியில் கால்களுமாய் இருவருக்குமிடையில் ஒரு பாலமாய் படுத்திருந்தான் ரவி.

வளர்ந்த பையனாயிருந்தும் சிறிய வயதில் அனுபவிக்கத் தவறிய தன் ஆசைகளைத் தந்தையிடம் கூச்சமில்லாமல் சிறு பையனாய் நடந்து தணித்துக் கொண்டான்.

"தூக்கம் வரதா ரவி?"

"இல்லேப்பா. நாளைக்கு ஸ்கூலும் லீவு. அதனால் நேரங்கழிச்சுத் தூங்கினாலும் பரவாயில்லேப்பா".

காரணம் அறியும் ஆவல் அவனுள் நிரம்பியிருப்பது புரிந்தது மோகனுக்கு.



"ரவி, இப்போ உனக்கு ஓரளவு புரியற வயசுதான். அதனால் நடந்தது நடந்தபடியே சொல்றேன் கேட்டுக்கோ."

நிமிர்ந்து உட்கார்ந்தான் ரவி.

படிக்க உட்கார்ந்தான் மோகன். ஆழ்ந்து படிக்கும்போது தித்தித்தை, தித்தித்தை என்ற சலங்கை ஒலி அவன் கவனத்தைக் கலைக்க எரிச்சலானான். காதை மூடிக்கொண்டு படிக்க முயன்றாலும் இயலாமல் அந்தச் சலங்கை சத்தம், தாளகதிக் கேற்பச் சீராக ஒலித்து இவனைப் படிக்க விடாமல் செய்தது.

ஆத்திரத்துடன் புத்தகத்தைத் தூக்கி எறிந்தவன், படுக்கையில் வீழ்ந்தான். தலையணையால் காதைப் பொத்திக் கொண்டான்.

மறுநாள் அவன் படிக்கப் புத்தகத்தைப் பிரிக்கும் போதே சலங்கை ஒலியும் கேட்கத் தொடங்கியது. ஆத்திரத்தின் உச்சத்தை அடைந்தவன், கிடுகிடுவெனப் பக்கத்து வீட்டையடைந்து காலிங்பெல்லை அமுத்தியவன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்துச் சிதறிக் கொண்டிருந்தன.

கதவு திறந்ததும் கோபத்துடன், "இதென்ன நீங்க... நீங்க..."

வந்தவளைப் பார்த்து வேகம் சடாரென்று கோபமானியிலிருந்து சரிய, பேச வராமல் குழம்பி, எச்சில் விழுங்கித் தத்தளித்தான்.



"உள்ளே வாங்க... வாங்க..."

புத்தம் புது ரோஜா பனியில் நனைந்திருப்பதைப்போல், குளிர்ச்சியுடன் சிரித்தபடியே வரவேற்ற அந்தப் பெண்ணின் நெற்றியெங்கும் பொடிப் பொடியான வியர்வைத் துளிகள். பைஜாமாவும், அதற்கு மேல் உயர்த்திக் கட்டிய புடவையும், காலில் சதங்கையுமாய் அவள் அழைத்தபோது, அந்த அழகில் மோகனால் இறங்கத்தான் முடிந்ததே தவிர, கோபப்பட முடியவில்லை.

டான்ஸ் மாஸ்டரைக் கொஞ்சம் இருக்கச் சொல்லிவிட்டு அவனை விசாரித்தாள்.

"ஒண்ணுமில்லே... வந்து... நான்..."

சொல்ல முடியாமல் அசடு வழிந்தான் மோகன்.

"என் பெயர் மாலா. சொல்லுங்க. ஏதானாலும் தயங்காமல் சொல்லுங்க ப்ளீஸ்..."

"......................."

"ஒரு வேளை நான் டான்ஸ் பிராக்டீஸ் பண்றது உங்களுக்கு இடைஞ்சலா இருக்கா?"

பளிரென்று அவளை நிமிர்ந்து பார்த்தான் பளபளத்த கண்களுடன்.

"நான் ஸ்கூலுக்குப் போய்ட்டு, டான்ஸும் கத்துக்கறதாலே ஏழு மணியிலேருந்து ஒரு மணி நேரம் கத்துக்க டைம் ஃபிக்ஸ் பண்ணினேன். ஆனா அது உங்களுக்குத் தொந்தரவாயிருந்தா நாளையிலேயிருந்து ஆறிலிருந்து, ஏழுன்னு மாத்திக்கறேன். ப்ளீஸ், இதுக்கும் நீங்க ஒத்துக்கலேன்னா ரொம்பக் கஷ்டங்க. எனக்கு டான்ஸுன்னா உயிருக்கும் மேலே. தயவு செஞ்சு தப்பா நினைச்சுக்காதீங்க..."

எப்படியோ அவளிடம் உளறிக் கொட்டி, கிளறி, மூடி எதையோ பேசிவிட்டு, வீட்டுக்கு வந்த பிறகுதான் சீராக மூச்சு விட முடிந்தது.

இரவு முழுவதும் அவள் 'ப்ளீஸ்' என்று கெஞ்சும் முகமே வந்து, வந்து மறைந்து கண்ணாமூச்சு ஆடியது.

மறுநாளிலிருந்து ஆறு மணியை மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்தான். முதல் நாள் வரை கண்களைச் சிவக்க வைத்த சலங்கை ஒலி, மறுநாளிலிருந்து அவன் கண்களையும், கருத்தையும் ஒருங்கே குளிர வைத்து ஆக்ரமித்துக் கொண்டது.

நாள்கள், மாதங்கள், வருஷங்களைத் தங்கள் வயதைக் கூட்டிக் கொண்டே போனபோது மோகனும், மாலாவும் ஒருவரின்றி ஒருவர் இல்லை என்ற நிலைக்கு உட்பட்டார்கள். எங்கு மாலாவின் நாட்டியக் கச்சேரி நடந்தாலும் தவறாமல் முன்சீட்டில் உட்கார்ந்திருப்பான் மோகன்.

நடனத்தைப் பற்றி ஒன்றுமே அறியாத மோகன், தன் இன்ஜினீயர் படிப்புடன், நாட்டியத்தின் நுணுக்கங்களை நன்கு ரசிக்கவும் கற்றுக் கொண்டான்.

வீட்டில் அவனுக்காகப் பெண் பார்க்க முற்பட்டபோது திட்டவட்டமாகக் கூறிவிட்டான், மாலாதான் தன் மனைவியென்று. மறுத்தால் இந்த ஜன்மத்தில் திருமணமில்லை என்றான். அப்பா சுந்தரம் ஒப்புக் கொண்டாலும், அம்மா பங்கஜம் ஒப்புக்கொள்ள மறுத்தாள். இவன் பிடிவாதம் தளராத நிலையில் வேண்டா வெறுப்பாய் தலையாட்டினாள்.

திருமணமாகி ஹனிமூன் போய் விட்டு சந்தோஷமாகத் திரும்பினார்கள். மறுநாள் வீட்டில் டான்ஸ் மாஸ்டர் வந்தவுடன் பங்கஜம் தன் மகள் மைதிலியுடன் இன்னொரு நடனம் பேயாட்டமாய் ஆடிவிட்டாள்.

விக்கித்துப் போய் நின்று விட்டாள் மாலா. நாட்டியத்தில் தன் உயிரையே வைத்திருந்தவளுக்கு இது பேரிடியாகத்தான் இருந்தது. ஆனாலும் எதிர்ப்பேச்சு எதுவும் பேசாமல், டான்ஸ் மாஸ்டரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, நல்லதனமாய் திருப்பி அனுப்பிவிட்டாள்.

மாலாவிற்காகப் பரிந்து பேச வந்த சுந்தரத்திற்கும் மனைவியிடமும், பெண்ணிடமும் வாங்கிக் கட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று.

மோகன் வந்தவுடன் மறுபடியும் மகாபாரதம் துவங்கியது.

"அம்மா! அவளோட நாட்டியத்துக்காகத் தானேம்மா அவளைக் கல்யாணமே பண்ணிண்டேன். அப்படியிருக்கறப்ப ஆணி வேரையே பிடுங்கறயேம்மா.. ப்ளீஸ் மா. இந்த மாதிரில்லாம் நீ நடந்துப்பேன்னு நான் கனவுலகூட நினைக்கலேம்மா. பாட்டு, வீணை, வயலின் மாதிரி இதுவும் ஒரு கலைதாம்மா. ரசனையோடு பாரும்மா..."

"இந்தக் கலை தலை எல்லாம் எனக்குப் புரியவும் புரியாது. வேண்டவும் வேண்டாம் மோகன். எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இதுதாண்டா. கல்யாணம் பண்ணிண்டு, கட்டிண்டவனுக்கு வாய்க்கு ருசியா வேண்டியதை செஞ்சு போடணும். அவனுக்கு இணக்கமா நடந்து சந்தோஷத்தைக் கொடுக்கணும். இதுதான் எனக்குத் தெரிஞ்சதும், புரிஞ்சதும். அதை விட்டுட்டுக் கூத்தாடிச்சி வீடு மாதிரி, இது என்னடா எப்பப் பாரு சாயந்திரமானா, கட்டையைத் தட்டறதும், சலங்கை சத்தமும்? ஆசைப் பட்டே கட்டி வச்சாச்சு. அதுக்காக இந்தக் குதியலையும் பொறுத்துக் கோன்னா முடியாதுடா மோகன். இப்ப நான் சொன்னா கோவமாத் தான் இருக்கும். அப்புறமா அம்மா சொல்றதுதான் சரின்னு சொல்லுவே. சரிசரி அத்தோட பேச்சை விடு. வேற வேலையைப் பாரு".

சொல்லிவிட்டு உள்ளே படக்கென்று சென்றாள். கண்களின் தளும்பலை மறைத்து மாலா, மோகனுடன் மாடிக்குப் போனாள்.

"மாலா... மாலா... எனக்கு... இப்ப... உனக்கு... மாலு..."

தடுமாறிய அவனை ஆசுவாசப் படுத்தினாள் மாலா. "பெரியவங்க பேச்சை மீறி நாம நடக்கக் கூடாதுங்க. பரவாயில்லே. இதனால் வீட்டுக்குள்ளே குழப்பம் வேண்டாங்க. நீங்க மாஸ்டர்கிட்டே இனிமே வரவேண்டாம்னு சொல்லிடுங்க. ஏன்னா அதைச் சொல்ற தெம்பு எனக்கில்லே".

தழுதழுத்த குரலில் கூறினாள் மாலா.

"அழகான பஞ்சவர்ணக் கிளியைக் கூட்டிலே அடைச்சாப்பிலே உன்னை அடைச்சுட்டேன் மாலா. இது என் தப்பு. எல்லாமே என் தப்பு. இன்னிக்கே நாம தனியா போயிடலாம் மாலா. வா".

"அய்யய்யோ வேணாங்க. இப்படி செஞ்சு அம்மா கோவத்தை அதிகப் படுத்தக்கூடாது. பேசாமலிருங்க".

படுக்கையில் விழுந்தவன் அப்படியே கண்களை மூட, கண்ணீர் இருபுறமும் கோடாக வழிந்தது.

மாலாவினால் அவன் துக்கத்தைத் தாங்க முடியவில்லை.

புடவையின் தலைப்பை இழுத்துச் செருகிக் கொண்டாள். அறையின் கதவைச் சாத்தித் தாளிட்டாள். அவனருகில் உட்கார்ந்தபடியே பாடி அபிநயிக்க ஆரம்பித்தாள்.

"உன் கண்ணில் நீர் வழிந்தால் – கண்ணம்மா
உதிரங் கொட்டுதடி!
என் கண்ணின் பாவையன்றோ கண்ணம்மா
என்னுயிர் நின்றதன்றோ..."

அபிநயித்தபடியே அவன் கண்ணீரைத் துடைத்தவுடன் பொங்கியே போய் விட்டான் மோகன்.

அவளை அப்படியே கட்டிப் பிடித்துக் கண்ணீருடன் முத்தமிட்டான்.

"அம்மா சொன்னபடி சலங்கை கட்டி எல்லார் எதிரிலும் ஆடற

தில்லே. ஆனா இரவு கண்டிப்பா இந்தத் தனி சாம்ராஜ்யத்துல நான் ஆடறேன். அதை நீங்க ஒருத்தர் ரசிச்சா போதும். எந்தக் கலை நம்ம ரெண்டு பேரையும் ஒண்ணு சேர்த்து வச்சுதோ, அந்த நாட்டியக் கலையை நாம ரெண்டு பேர் மட்டுமே ரசிக்கலாம். வாங்க சாப்பிட".

இது ஒருவருக்கும் தெரியாமல் ரகசியமாய் இருந்தது, ரவி பிறக்கும் வரை.

ரவி பேச்சு வந்தும் வராத இரண்டு வயதை எட்டியிருந்த போதுதான் பாட்டியிடம் ஒருநாள் கூறினான்.

"பாத்தீ... அம்மா... தை... தை..." என்று கைகளை ஆட்டிக் கால்களால் தப்புத் தாளம் போட்டுக் குதித்தான்.

"அப்பா... அப்பா..."

இரு கைகளையும் படபடவென்று கையைத் தட்டிக் காண்பித்ததும் புரிந்து கொண்டாள் பங்கஜம்.

ரவியின் தப்புத்தாளம் தன் வாழ்க்கையையே தாளம் தப்ப வைக்கப் போகிறது என்று புரியாமலே வளைய வந்தாள் மாலா.

சமயத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தாள் பங்கஜம். எப்படியாவது மாலாவை வெளியேற்ற அவர்கள் போட்ட தீர்மானம் இவளுக்குப் புரியாமல் போனது விதியின் சதிதான்.

பங்கஜமும், மைதிலியும் கோயிலுக்குப் போனபோது, உடம்பு சரியில்லையெனத் தடுத்த சுந்தரத்தின் பேச்சைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஏதோ சத்தம் கேட்டு ஓடி வந்த மாலா பதறித்தான் போனாள். சுந்தரம் தன் மேலேயே வாந்தியெடுத்துக் கொண்டு முனகியபடி இருந்தார். ஈஸிசேரில் அமர்ந்திருந்த அவரை எழுப்பி, பிடித்து அழைத்துக் கொண்டு முற்றத்தினருகில் உட்கார வைத்து அருவருப்பில்லாமல் நன்றாய் சுத்தம் செய்து, மறுபடி அவரைப் பிடித்து அழைத்து வந்தபோது...

"என்னடியிது அநியாயம்... மாமனார்னாலும் அவரும் ஆம்பிளை யாச்சேன்னு கூச்சமில்லாம இப்படி அணைச்சுண்டு வராளே. என்ன தைரியம்? உடம்புல துளி பயமிருக்கா பாரேன். கிண்ணுனு நிக்கிறதைப் பாரு".

விக்கித்து நின்றார்கள் மாலாவும், சுந்தரமும். பேச முடியாமல் தவித்தார் சுந்தரம். அதற்குள் தொடர்ந்து மைதிலி ஆரம்பித்தாள்.

"தப்பு, திப்புன்னு சலங்கை கட்டிண்டு குதிக்கிறவாளுக்கு உடம்புல கூச்சம் எங்கேம்மாயிருக்கும்? இதெல்லாம் குடும்பத்துக்கு லாயக்கான்ன?

அதுதான் ராத்திரியிலே ஜிமுக்குள்ள ஆட்டம் ஆடி மோகனையும் கட்டி வச்சிருக்கா. இந்த தேவடியாத்தனம் யாருக்கு வரும் சொல்லு".

"நிறுத்துங்கோடீ... நிறுத்துங்கோ".

பேச முடியாமல் ஆவேசத்தில் கத்தினார் சுந்தரம். அதற்குள் ஆபீஸி லிருந்து வந்த மோகனும் நடந்த வற்றை அறிந்தான். சுந்தரத்தைத் தானும் ஒரு பக்கம் பிடித்துக் கொண்டு படுக்கையில் படுக்க வைத்தான்.

"மோகன் இனிமே நீ ஒரு நிமிஷம் கூட இந்த வீட்டுல இருக்கக்கூடாது. உன் பொண்டாட்டியையும், குழந்தையையும் கூட்டிண்டு இப்பவே போயிடு. இந்தாத்துக்குள்ளே நுழையாதே. ஆமா, சொல்லிட்டேன். இவா வாயிருக்கே..."

"இதோ பாருங்கோ, அனாவசியமாப் பேசாதேங்கோ. கண்ணால பார்த்ததைத்தானே சொன்னோம்? இத்தனை ஏன்? பொண்ணு வாழா வெட்டியா வீட்டுல இருக்காளே. அவ வாழ்க்கைக்கு ஒரு வழி காட்டுவோம்னு இல்லாமே இந்த கூத்தாடிச்சிக்கு ஏன் பரியறேள்?"

"அம்மா..." மோகன் கத்தினான்.

சுந்தரம் தன் வலுவைத் திரட்டிப் பெரிதாய் கத்தினார்.

"டேய் உன் பொண்டாட்டியக் கூட்டிண்டு வெளியிலே போன்னு சொல்லி எத்தனை நாழியாச்சு. இன்னுமாடா நிக்கறே?"

"நீங்க யாரு அவனைப் போன்னு சொல்றதுக்கு? அவ போகட்டும். தவமா தவமிருந்து இடுப்பு நோகப் பெத்தெடுத்தது நான்தானே ஒழிய நீங்க இல்லே. எம் புள்ளைய எங்கிட்டேயிருந்து பிரிக்கறதுக்குன்னே அவ வந்துருக்கா. வீட்டு ஆம்பிளைகள் ரெண்டு பேரையும் மயக்கிக் கையிலே போட்டுண்டாச்சு. இன்னும் என்ன வேணும்டி உனக்கு?"

மாலா மருண்ட மானாய் விழிகள் சுழல, உதடு விரிய அழுது கொண்டிருந்தாள்.

"அம்மா! அபாண்டமா பொறத்தியாராத்துப் பொண்ணைக் கண்டபடி பேசாதேம்மா. மொதல்ல நம்மாத்துப் பொண்ணை ஆத்துல வச்சுண்டு கஷ்டப்படறோம்... வீணா..."

"நிறுத்துடா மோகன். உன்னை மாதிரி எங்காத்துக்காரருக்குப் பொண்டாட்டியாத்தா. பெரியாத்தான்னு இருக்கத் தெரியலே. எனக்கும் உன் பொண்டாட்டிபோல எங்காத்துக்காரரை அங்கத்தை அசைச்சு, அசைச்சு ஆடித் தலைப்புல முடிஞ்சுக்கத் தெரியலே. அதெல்லாம் பொறவியிலே வர நீசத்தனம். எங்கம்மா எனக்கு அதைச் சொல்லித் தரலியே...."

"மோகன்... நீ மாலாவைக் கூட்டிண்டு போயேண்டா"

மோகன் ரவியைத் தூக்கிக் கொண்டு, மாலாவை அணைத்தபடியே வெளியில் போகக் காலடியைத் திருப்பினான்.

"டேய் நில்லுடா. என் மேலே ஆணை. அடுத்த தப்படி நீ வக்கக்கூடாது ஆமா. உன்னைப் பெத்த வயிறு பத்தி எரியப் போகாதே. உருப்படமாட்டே. அவளை வெளியே தள்ளு. நீ வா உள்ளே. இல்லே இப்பவே இங்கேயே என் பொணம் உருண்டுடும், ஆமா, சொல்லிட்டேன்".

கழுத்தினருகில் அரிவாள் மணையை அழுத்திக் கொண்டு ஆவேசமாய், பத்ரகாளியைப் போல் நின்ற பங்கஜத்தின் கழுத்திலிருந்து அரிவாள்மணை அழுத்திய வேகத்தில் பொட்டாய் துளிர்த்த ரத்தம் வழிய ஆரம்பித்தவுடன் திடுக்கிட்டுப் பயந்தே போனான் மோகன்.

"அம்மா, அம்மா வேண்டாம்மா. கண்டபடி நடந்துக்காதேம்மா. ப்ளீஸ்மா..."

கெஞ்சிய மகனை அதே ஆக்ரோஷத்துடன் பார்த்தாள்.

"மோகன் ஒண்ணு நானிருக்கணும். இல்லே இவ இருக்கணும். யாருங்கறதை தீர்மானம் பண்ணிடு. தடுக்காதே. அப்புறமா விபரீதமாயிடும்".

ஒருவருக்கும் ஒன்றும் தோன்றாத கணமாய் இருந்த அந்த நேரத்தில் மாலாதான் செயல்பட்டாள்.

ரவியை மோகனிடமிருந்து வாங்கிக் கொண்டாள்.

"அம்மா! என்னால உங்க குடும்பம் பிரிய வேண்டாம். நானே பிரிஞ்சு போயிடறேன். நீங்களும் அனாவசியமாய் என்னாலே சாக வேண்டாம்..."

சொல்லிவிட்டுத் திரும்பினாள்.

"குழந்தையைக் கொடுத்துட்டுப் போடி. எங்க வம்சத்துத் தளிரை எங்கிட்டேயே கொடுத்துட்டு, உன் தாளத்தையும் சலங்கையையும் எடுத்துண்டு போ".

இப்போது மாலாவிற்குள் சீற்றம் மூண்டது. காலை அழுத்தித் திடமாய் திரும்பினாள்.

"இருபத்து நாலு வயசுப் பிள்ளையைப் பிரிய முடியாம இடுப்பு நோகப் பெத்தேன்னு சொல்லிக்கிறேளே. எனக்கு இன்னும் அந்த இடுப்பு வலியே போகலையேம்மா. நான் எப்படி என் ரெண்டு வயசுப் பிஞ்சைப் பிரிய முடியும்? என் வயத்துல உதிச்சு, என் பாலைக் குடிச்சு வளர்ந்த இந்தக் குழந்தை உங்க வம்சத்துத் தளிராயிருக்க வேண்டாம்! ஏன்னா நாளைக்கு அதுவும் ஒரு கட்டையைத் தட்டி னாலும் தட்டும்...

"அப்பா, பாட்டி அநியாயமா பேசறப்ப ஏம்பா நீங்க அம்மாவை சப்போர்ட் பண்ணல்லே. அது தப்பில்லையா? இந்த மாதிரி அநியாயமான சத்தியத்துக்கு நீங்க கட்டுப்பட்டது தப்புப்பா. பாட்டி கையிலேருந்து லாகவமா அரிவாள் மணையை எடுத்தெறிஞ்சிருக்க வேண்டாமா. இப்ப உங்க ரெண்டு பேரோட வாழ்க்கைதானேப்பா வீணாச்சு. இது சரியா?"

வேகத்துடன் கேட்ட ரவியை மோகன் பார்த்தான்.

"தப்புதான் ரவி. நீ யோசிக்கிற அளவுக்கு எனக்கு யோசிக்கத் தெரியலேப்பா. அது கூடத் தப்பு. என் புத்தியை உபயோகப்படுத்திக்கத் தெரியலேன்னுதான் சொல்லணும். காதலுக்காக அடம் பிடிச்ச எனக்கு, அந்தக் காதலியைக் கைவிடாமே வச்சுக்க வேண்டிய தைர்யம் இல்லாமல் போச்சுதான். அதுக்காக நான் ரொம்ப அவமானப் படறேன் ரவி".

அப்பாவின் உள்ளுணர்வுகளைப் புரிந்து கொண்ட ரவி அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

"ஸாரிப்பா. நான் பேசினதுல கூட என்னோட சுயநலம்தான் அதிகம்னு எனக்கே தோணறது. அம்மாவைச் சுட்டிக்காட்டி உங்ககிட்டே பேசினேனே ஒழிய, வளர வேண்டிய நேரத்துல அப்பாங்கறவரோட அன்பு, பாசம், கண்டிப்பை அனுபவிக்காமப் போன ஏமாற்றமும், ஏற்பட்ட அவமானமும் எனக்குள்ளே அதிகமாயிருந்ததுப்பா. அதனாலே தான் அளவுக்கு மிஞ்சிப் பேசிட்டேன். ஸாரிப்பா".

"ரவி, உன்னோட தைரியம் என்னிக்கும் இப்படியே இருக்கட்டும்ப்பா. என்னைப் போல நீ யாரையும் கஷ்டப்படுத்தாதே. ஏன்னா உனக்கு நன்னா யோசிக்கத் தெரியறது. நன்னாப் பேசத் தெரியறது. இப்படியே இரு கண்ணா".

இருவரின் பேச்சையும் கேட்ட மாலா, இருவரையும் பேச்சிலிருந்து மீட்கத் தான் பேசினாள்.

"சரி சரி பனி கொட்றது. வாங்க கீழே. அப்புறமா உடம்புக்கு ஒத்துக்காது. வாங்க".

"அப்பா, இனிமே நாம ரெண்டு பேரும் இந்த அம்மா கிட்டே அடி பணிஞ்சே ஆகணும்ப்பா. ஏன்னா இது அன்புக் கட்டளையாச்சே!"

கிண்டலாய் ரவி கூற, மோகன் சந்தோஷமாய் சிரித்தார்.

# ஸ்ரீராம் டிரஸ்ட் வெளியீடுகள்

145 லிங்கச் செட்டிதெரு, த.பெ.எண். 5043, சென்னை - 600 001



**சந்தனச் சிமிழ் - வசுமதி ராமசாமி -**
**விலை: ரூ.25.00**
சுமார் அறுபது ஆண்டுகளாகச் சிறந்த சிறுகதைகள் படைத்து வரும் திருமதி வசுமதி ராமசாமி எழுதி மணம் வீசும் 12 சிறுகதைகளின் தொகுப்பு. சமூகத்தின் பல்வேறு கோணங்களைப் பிரதிபலிக்கும் நூல்.



**கோலத்தில் சிக்கிய புள்ளிகள் - வேதா கோபாலன் - விலை ரூ.30.00**
'அமுதசுரபி' - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நாவல். திருமதி வேதா கோபாலன் எழுதிய முதல் தொடரும், நாவலும் இதுதான். கவியரசு வைரமுத்து, நூலுக்குச் சிறப்புரை வழங்கியுள்ளார்.



**பாரதியும் புஷ்கினும் - கமலா பத்மகிரீஸ்வரன் - விலை ரூ.16.00**
அமுதசுரபி - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய 1991 -ஆம் ஆண்டில் வந்த, பாரதி இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நூல். ருஷ்யக் கவிஞர் புஷ்கினை நாம் அறியச் செய்கிறார் ஆசிரியர். முன்னுரை வழங்கியுள்ளார் டாக்டர் வே.ஞான பிரகாசம்.

**அமுதசுரபி - சிறந்த சிறுகதைகள் பதினைந்து - விலை: ரூ.22.00**
நவமணிக் கதைகள் வரிசையில் வந்த பத்து சிறந்த சிறுகதைகளுடன், 'அமுதசுரபி' சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற ஐந்து சிறுகதைகளுடன் (1990இல்) பிரகாசிக்கும் சிறுகதைத் தொகுப்பு நூல்.



**அமுதமொழி - தொகுப்பு : அமரர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் - விலை: ரூ.20.00**
பன்மொழிப் புலவர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் தொகுத்த ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் போட்டோக்கள் நிறைந்த, சிறந்த தொகுப்பு நூல்.

**அமரர் கதைகள் - விலை : ரூ.22.50**
அமரர்கள் தி.ஜானகிராமன், சுகி.சுப்பிரமணியன், ஹேமா ஆனந்ததீர்த்தன், லக்ஷ்மி, சாண்டில்யன், ஆதவன், நா.பார்த்தசாரதி, அகிலன், அழகாபுரி அழகப்பன் முதலிய ஒன்பது எழுத்தாளர்கள் எழுதிய - அனைவரும் இன்று இல்லை - அந்தச் சிறுகதைச் சிற்பிகளின் எழுத்தாற்றலும், சமூகப் பிரக்ஞையும், கற்பனை வளமும் வாடாத புதுமலராக என்றும் விளங்கும் சிறுகதைத் தொகுப்பு.



**தியாக தீபம் - நீதியரசர் ச.மோகன் - விலை ரூ.40.00**
காந்திஜியின் கொலை வழக்கு விசாரணையை இளைய தலைமுறையினரும் அறியச் செய்ய நீதியரசர் தொடர்ந்து 'அமுதசுரபி' இதழில் எழுதிய நூல். டாக்டர் நா.மகாலிங்கம் அவர்களின் அணிந்துரையையும், டாக்டர் கி.வேங்கட சுப்பிரமணியம் அவர்களின் அறிமுக உரையையும் கொண்டது.

# கங்காபுரிக் காவலன்

## 6. பயணத்தில் மாற்றம்

அருண்மொழியை இராசேந்திரன் ஒரு கணம் கூர்ந்து நோக்கினார்.

"அருண்மொழி, நீயும் அரையனும் பகைவர்ப் படைகளை எளிதில் வென்று விடுவீர்களல்லவா?" என்று கேட்டார்.

"ஏன் இவ்வாறு கேட்கிறீர்கள்? சோழர்ப் படைகள் தோற்றோடியது என்ற வரலாறே கிடையாதே?" அருண்மொழி புரிந்து கொள்ள முடியாமல் நின்றான்.

"சாளுக்கியர் படைகள் மிகக் கடுமையாக நம்மை எதிர்க்கப் போகிறார்கள். அதனால் அஞ்சிவிட மாட்டீர்களே?" என்று கேட்டார் அரசர்.

சிங்கம் பிடரியைச் சிலிர்ப்பதுபோல் அருண்மொழி உடல் ஒருகணம் சிலிர்த்தது.

"புறப்பட்டுப் பல நாள்களாகியும் பகைவர்களுடன் நேருக்கு நேர் சந்தித்துப் போராட வாய்ப்புக் கிடைக்கவில்லையே என்று கவலையுடன் இருக்கிறேன். எனக்கு அச்சம் ஏது? சக்கரவர்த்திகளே... யுத்த பூமியில் என் திறமையைக் காட்ட எங்கே மறுத்துவிடுவீர்களோ என்று கவலையுடன் இருந்தேன். கட்டளையிடுங்கள்..." என்று பணிவுடன் கூறினான் படைத்தலைவன் அருண்மொழி.

"உங்கள் இருவரைப் பற்றிக் கேட்டேன்; நீ உன்னைப் பற்றி மட்டுமே உறுதி கூறுகிறாய். உன் நண்பன் அரையனைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை. நீயும் அவனும் கலந்துப்பேசி போர் முறைகளை வகுக்க வேண்டும். சோழநாட்டிற்கு இது ஒரு சோதனைக் காலம். உங்கள் இருவருக்குள்ளும் பொறாமை ஏற்படக் கூடாது. கருத்து வேற்றுமை ஏற்படக் கூடாது. படை வீரர்கள் ஒற்றுமையுடன் இல்லாவிடில் குழப்பம்தான் மிஞ்சும்" என இராசேந்திரன் கூறிவிட்டு அருண்மொழியை ஏறிட்டுப் பார்த்தார்.

அவன் கண்கள் கலங்கியிருந்தன. மற்றொரு படைத்தலைவன் அரையனுடன் தனக்கு எந்தவிதப் பூசலும் இல்லாதபோது அரசர் இப்படி ஏன் சொல்கிறார்? தன்னைப் பற்றித் தவறாக அரசரிடம் யார் தெரிவிக்கிறார்கள்? வேறு யார் சொல்வார்? எல்லாம் அரையனாகத்தான் இருக்க வேண்டும்.

ஏன் அரையன் மீது நாம் சந்தேகப்படுகிறோம்? அவனிடம் என் உள் மனத்திற்குள்ளே பொறாமை இருப்பது எனக்கே தெரியவில்லையா?

தன் மௌனத்தை அதிக நேரம் நீடிக்க விடாமல், "சக்கரவர்த்திகளே! எங்களிடம் எந்தவித மன வேற்றுமையுமில்லை. படை வீரர்களுள் சில ஒற்றர்கள் இருப்பதாகத் தாங்கள் அறிந்திருக்கிறீர்களே - இப்படியொரு வதந்தியைப் பரப்புவது அவர்களுடைய கைவரிசையாகத்தான் இருக்க வேண்டும். செய்திகளைப் பகைவர்களுக்குத் தெரிவிப்பதுமட்டுமல்ல ஒற்றர்களின் வேலை. மித்ர பேதம் செய்து பலவீனப் படுத்துவதும் அவர்கள் பணிபோலிருக்கிறது. நாங்கள் இரு கண்களென இயங்குவதாக உறுதி கூறுகிறேன். கட்டளையிடுங்கள்" என அருண்மொழி நிமிர்ந்து நின்று பேசினான்.

"நீங்கள் இருவரும், படைகளை நடத்திக் கொண்டு முன்னேறுகிறீர்கள். நான் தலைநகரம் திரும்புகிறேன். அங்கிருந்து கிடைத்து வரும் செய்திகள் கவலையை அளிக்கின்றன" என்றார் இராசேந்திரன்.

அருண்மொழி ஒருகணம் திகைத்தான் - என்ன சொல்வதென்று. "சரி, நாங்கள் செல்கிறோம்; நீங்கள் திரும்பிச் செல்லுங்கள்" என்று சொல்வதா, என்ன விடை பகர்வது என்று அவனுக்குப் புரியவில்லை.

**விக்கிரமன்**



"நான் திரும்பும் செய்தி யாருக்கும் தெரிய வேண்டாம். கிருஷ்ணா நதிக் கரை வரை ஒரே மூச்சாகப் பயணப்படுங்கள்" என்றார் சக்கரவர்த்தி.

சோழர்ப்படைகள் புதிய உற்சாகத்துடன் அணிவகுத்துச் சென்றன. யானைப் படைகள், குதிரைப் படைகள், தேர்ப் படைகள் என அவை கம்பீரமாகச் சென்றன.

"நம்முடன் வரவில்லையாம் சக்கரவர்த்தி. பழையாறைக்குத் திரும்புகிறாராம்" என்ற செய்தி காற்றிலும் உருகிய வேகத்தில் விரைந்து பரவியது. அதைவிட வேகமாக ரங்கனும் சங்கனும் செய்தியைப் பழையாறைக்கு அனுப்பினர். அவர்களை விட்டுவிட்டு சோழர்ப்படைகள் முன்னேறின. இராசேந்திரன் தங்கியிருந்த மாடிவீட்டுப் படைகளுடன் ரங்கனும் சங்கனும் தங்கிவிட்டனர்.

"சங்கா, நாம் சோழர்ப்படைகளுடனே சென்றிருக்கலாம். அரசருடன் மீண்டும் பழையாறைக்குச் செல்வதால் என்ன பயன்?" என்று சங்கன் கேட்டான்.

"இரண்டுவித ஆதாயங்கள். தீர்த்த யாத்திரை என்று தொடங்கிப் போரிடத் திட்டமிட்டுள்ளார் சோழ மன்னர். யுத்த பூமியை மிதிக்காமல் பத்திரமாக பழையாறை திரும்புவது ஒன்று. மற்றொன்று சொந்த ஊரிலே சகல சௌக்கியமாக மீதி நாள்களைக் கழிப்பது" என்றான் ரங்கன்.

"கிராமத்தில் தங்கியிருந்தால் நம் பிழைப்பு நடந்து விடுமா? செய்திகளைச் சேகரித்துப் பாண்டிய நாட்டிற்கு அனுப்பினால்தானே பொன்னும் பொருளும் கிடைக்கும்" சங்கன் கவலைப்பட்டான்.

"அப்படிச் சொல்லாதே. அங்கேயும் பிழைப்பு இருக்கிறது;" ரங்கன் கூறினான்.

"எப்படி?"

"அரசியாருக்கும் இளவரசருக்கும் தூது போய்ப் பொருளீட்டலாம்".

"எப்படி?"

"அங்கே குடும்பச் சண்டை வலுத்திருக்கிறது. அரச குடும்பத்திற்குள் அதிகாரப் போட்டி ஏற்பட்டிருக்கிறது. நாமும் நம்மால் இயன்றளவு தூபமிடுவோம்".

"அவர்கள் சண்டை வலுப்பதால் நமக்கென்ன லாபம்?"

"ஒவ்வொன்றையும் உனக்கு விளக்கிச் சொல்ல எனக்குச் சக்தியில்லை. சோழர்களின் பலவீனம்,பாண்டியர்களுக்குத்தனிப் பலம். நாம் சாளுக்கியர்களிடமும் பழகுகிறோம். சொல்லி வருவோம். நமக்குச் சேரவேண்டிய பொன்னும் பொருளும் கூடுதலாகக் கிடைக்கும் .

"எந்த நாட்டில் சென்று கடைசிக் காலத்தை நிம்மதியாகக் கழிப்பது என்பதை முடிவு செய்து கொள்ள வேண்டும்."

"எனக்கென்னவோ பயமாயிருக்கிறது. நம்முடைய நடவடிக்கைகள் வெளிப்பட்டு விட்டால், கடைசிக் காலம் உடனே வந்து விடும் என்று தோன்றுகிறது."

"அடப் பைத்தியமே! அதுவரையில் நாம் இருந்த இடத்திலிருப்போமா? சோழ சக்கரவர்த்திகள் பழையாறை நோக்கிப் புறப்



படும்போது ஒருவருமறியாமல் நாம் நழுவி விடுவோம்".

"எப்படி?"

"பழையாறைக்குச் செல்லும் முன்பு அரசர் காளகத்திக்குச் செல்லத் திட்டமிட்டிருக்கிறார். பிறகு அருகே உள்ள வேங்கட வரைத் தரிசிக்கச் செல்வார். மலை ஏறிச் செல்லும்போது நாம் தப்பி விடுவோம்".

"சரியானபடி சிக்கிக் கொண்டால் மலையிலிருந்து உருட்டி விடுவார்கள்".

சங்கன், ரங்கன் இருவருடைய பேச்சு நீடித்தது. பழையாறையை நோக்கித் திரும்பிச் செல்லும்போது சக்கரவர்த்தியின் கண்களில் படாமல் தப்புவது எப்படி என்பதைப் பற்றிப்பலமான யோசனையில் இருவரும் ஆழ்ந்திருந்தனர்.

அவர்களுக்கு அதிகக் கவலை வைக்காமல் மறுநாள் காலைப் பொழுது புலர்ந்தது. இரவு நெடுநேரம் விழித்திருந்ததால், காலைப் பொழுது விடிந்தும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். கண் விழித்தபோது, தங்கியிருந்த இடத்தில் யாருமில்லை. அரசருடைய பரிவாரங்கள் அங்கில்லை. நடுநிசிக்கு மேல் சக்கரவர்த்திகள் திடீரென முடிவெடுத்தார். சக்கரவர்த்திகளும் மற்றும் அவருடைய உடன் கூட்டத்தாரும் புறப்பட்டனர். பழையாறை நோக்கி அவர்கள் செல்லவில்லை. மீண்டும் வடதிசை நோக்கிச் சென்றனர். ஆட்சிச் செயல்பாடுகளில் திடீரென முடிவெடுப்பது அவர் வழக்கம். ஆனால் அந்த முடிவு சரியானதாக இருக்கும்.

இதுபோல் திடீரென முடிவை மாற்றியதில்லை. தன் முடிவை எண்ணி இராசேந்திரனுக்கு வியப்பாகவே இருந்தது.

வீரமாதேவியின் சுருக்கமான ஓலையைப் படித்தவுடன், பழையாறையில் என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார். அங்கே தான் இருந்தால்தான் சிக்கல்களைத் தவிர்க்கலாம். அதனால் பரிவாரங்களுடன் பழையாறை செல்வது என்று முடிவெடுத்தார்.

படை வீரர்கள் புறப்பட்டுச் சென்ற பின் வீரமாதேவியின் ஓலையை மீண்டும் ஒரு முறை படித்தார்.

எழுத்தாணி கொண்டு பனை ஓலையில் அவள் முத்துக் கோத்ததுபோல் எழுதியிருந்தாள். தெளிவாக இதயத்தைப் புலப்படுத்தி யிருந்தாள். யார் மீதும் குற்றம் சுமத்தவில்லை. குறை காணவில்லை. பிரிவின் வேதனை ஓரிரு இடங்களில் தெரிந்தது. பஞ்சவன் மாதேவிக்குத் தன்மீது ஏற்பட்டிருப்பது பொறாமையா, கோபமா என்று புரியவில்லை; அதனால் கோயில் கட்டுவதற்கான கருங்கற்கள் வருவது தடுக்கப்படுகிறது. வனப் பகுதியிலுள்ள மரங்களை வெட்டக் கூடாது என்று அதிகாரிகள் தடுக்கின்றனர். சிற்பப் பணிக்கு வரும் சிற்பிகள் வரும் வழியிலேயே தடுக்கப்படுகின்றனர். ஆனால் ஏரி வெட்டும் பணி மட்டும் எந்தவித இடையூறுமின்றி நடைபெறத் தொடங்கி விட்டது என்று தெரிவித்திருந்தாள்.

மற்றொரு செய்தி இராசேந்திரனுக்குச் சற்று அதிர்ச்சியைத் தந்தது.

"தங்கள் உடன்பிறவா சகோதரி பூங்கொடி சில நாள்களாக ஒருவருடனும் பேசுவதில்லை. நடன வகுப்புகள் நடைபெறவில்லை. பழையாறைக்குச் சென்றுவிட்டாள். அவளுக்கு உடல் நலம் குன்றிருப்பதாகத் தகவல். இளவரசர் ஆதித்தனின் ஆதரவு இருப்பதால் நான் துணிவுடன் இருக்கிறேன். திருப்பணிகள் நடைபெறாமல் தடுக்கப்படுவதும் அதிக நாள்கள் நீடிக்காது என்று எனக்குத் தெரியும். சிற்பியின் உடல்நலத்தைக் கவனிக்க மருத்துவர்கள் வராமல் தடுக்கப்படுகிறார்கள்.

எல்லாவற்றையும்விட எனக்கு அதிர்ச்சி தருவது என் உடன் பிறந்தாருக்கு என்மீது ஏற்பட்டிருக்கும் கோபம். அது ஏன், எதனால் ஏற்பட்டது என்று என்னால் உணர முடியவில்லை.

எப்போதும் வாய் நிறைய 'வீரம்மா, வீரம்மா' என்று என்னை அழைக்கும் என் அண்ணன், 'இளவரசி அவர்களே!' என்றும், 'வீரமாதேவி அவர்களே!' என்றும் அழைப்பதில் இருந்து அவருக்கு என் மீது ஏதோ ஒருவிதத்தில் மனத்தாங்கல் ஏற்பட்டிருப்பது புரிகிறது. இறைவன் அளித்திருக்கும் காட்டை அழிக்குமாறு தங்களுக்கு நான் தவறான யோசனை கூறியுள்ளேனாம். தஞ்சைபுரியிலிருந்து தலைநகரத்தைக் காட்டுப் பிரதேசத்திற்கு மாற்றுமாறு, தங்க



ளுக்குத் திட்டமிட்டுத் தந்தது நான்தானாம். இன்னும் என்னவெல்லாமோ கூறி என் மனத்தை நோகச் செய்துவிட்டார்.

இருந்தாலும் நீங்கள் கவலைப்படாமல் கங்கா யாத்திரையை மேற்கொண்டு புனித நீராடித் திரும்பி வாருங்கள்.

கங்கையைக் கொண்டு வந்து, நாம் கட்டி முடித்திருக்கும் பெரிய கோயிலில் வீற்றிருக்கும் பெருவுடையாருக்குப் புனித திருமுழுக்காட்டி பெரிய விமானத்தின் கும்பத்திற்குக் கங்கை நீரால் அபிடேகம் செய்து ஏரியில் கங்கை நீரை நிரப்பி, வெள்ளி விழா கொண்டாடிய பிறகு நீங்களும் நானும் மட்டும் கங்கையில் புனித நீராடிவிட்டுத் திரும்ப வேண்டும்.

கங்கையை இந்தப் பூமிக்கும் கொண்டு வந்த பகீரதனைப் போல நீங்கள் கலியுகப் பகீரதனாக மாறும் நாளை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். இப்படி நான் எழுதுவதைப் படித்தவுடன் நீங்கள் என்ன முடிவு எடுத்திருப்பீர்கள் என்று நான் கற்பனை செய்கிறேன். சொல்லட்டுமா?

'கங்கை நீரைத் தேக்கி வைக்க ஏரி வெட்டப்பட்டிருக்கும். கோயில் குடமுழுக்குக்கு ஆயத்தமாகக்கோயில் பணி முடிந்து இருக்கும். என் அருமை வீரமாதேவி எடுத்ததை முடிக்கும் ஆற்றல் படைத்தவள்' என்றுதானே நினைத்திருப்பீர்கள்? என் எண்ணம் சரிதானே? உங்கள் விழிகளில் ஏற்படும் காதல் ஒளியைக் காண்கிறேன். இதழ்களில் மிளிரும் புன்முறுவலைக் காண்கிறேன். வழக்கம்போல் என்னை நெருங்கி நீங்கள்... அதற்குமேல் எழுதமாட்டேன். ஏன் என்றால் என் நினைவினால் நீங்கள் பயணத்தைப் பாதியில் நிறுத்தித் திரும்பிவிடக் கூடும். எனக்கோ, நீங்கள் என் அருகே இருப்பது போன்ற உணர்வு. இதயத்தில் அழியா இடம் பெற்ற வீரமாதேவி".

இராசேந்திரன் ஓலையை மீண்டும் ஒரு முறை படித்தார். கண்களில் ஒத்திக் கொண்டார். மார்புடன் அணைத்துக் கொண்டார்.

பாதிசாமம் நெருங்கியதால் விளக்கொளி குறைந்தது. விளக்கில் எண்ணெய் விட வந்த பணியாள் சற்றுத் தொலைவில் நின்று அரசரின் செய்கையைக் கவனித்துக் கொண்டிருந்தான். இருளை ஒட்டி முகத்திற்கு மட்டும் ஒளியைத் தந்து கொண்டிருந்த அந்த அகல் விளக்கொளியில் அரசர் முகத்தில் இப்போது புத்துணர்வு ஏற்பட்டிருப்பதை உணர்ந்தான்.

விளக்கில் எண்ணெயிடத் தான் வந்திருப்பதை சிறு ஓசையால் மெல்லத் தெரிவித்தவுடன் இராசேந்திரன் நிமிர்ந்து பார்த்தார். "எண்ணெயை விட்ட பிறகு, திருமந்திர ஓலை நாயகத்தை உடனே வரச் சொல்" என்றார். காவலரிடம் மட்டுமே சொல்லப்பட வேண்டிய அந்தக் கட்டளையைத் தன்னிடம் சொல்வதால் செய்வதறியாது திகைத்த அவன் உடனே விரைந்தான். நன்றாக உறங்கிக் கொண்டிருந்த திருமந்திர ஓலை நாயகம் திடுக்கிட்டு விழித்தெழுந்து விரைந்து வந்தார்.

"பழையாறையிலிருந்து அரசி பஞ்சவன் மாதேவியை இளவரசி அரிந்தவன் மாதேவியையும் உடனே இங்கு அழைத்து வருவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். அவர்களுக்குத் துணையாக வீரமாதேவியின் சகோதரன் முத்துக் குமரனைப் படைவீரர்கள் நூற்றுவரோடு வருமாறு பணியுங்கள். வழியில் பயணம் எவ்வித இடையூறின்றி அமைய ஏற்பாடு செய்யுங்கள். விடிந்தவுடன் நாம் கிருஷ்ணா நதிக்கரையை நோக்கிச் சென்று அங்கே தங்குகிறோம். பழையாறையில் இருந்து புறப்பட்டு எவ்வளவு விரைவாக அவர்கள் வர முடியுமோ அவர்கள் அங்கு வந்து சேரட்டும்" என்று கட்டளை பிறப்பித்தார்.

மன்னர் கட்டளைக்கு மறுபேச்சு பேச முடியுமா?

(தொடரும்)






கையகல நிலம் வேண்டும்! பராசக்தி!
கையகல நிலம் வேண்டும்! அங்கே
ஊசி முனை நிலத்தில்
சிங்கிள் பெட்ரும் வீடு
கட்டிக் கொள்ள வேண்டும்!

ஓரடி அளவினிலே அழகாய்க்
காய்கறித் தோட்டம் வேண்டும்!
காலையில் கண்விழித்தால் பூக்கள்
புன்னகை செய்ய வேண்டும்!
வற்றாத கிணற்றோடு ஒன்றிரண்டு
வாழை மரம் வேண்டும்!

சொட்டும் குழாயோசை மறைந்து
மெட்ரோநீர் கொட்ட வேண்டும்!
நட்ட பூச்செடிக்கு ஸ்பூனிலே
தண்ணீர் விட வேண்டும்!
காலை எழுந்தவுடன் கோலத்தை
நிலத்தில் இட வேண்டும்!
மண்ணில் வீடுகட்டிக் குழந்தைகள்
அனைத்து விளையாட வேண்டும்!
பூமியில் கால்பதித்துத் தினமும்
புண்ணியம் பெற வேண்டும்!

இதற்கு -
திரிசங்கு நிலையிலே
மூணாம் மாடியில்
ஃப்ளாட்டினில் பதுங்கிடும்
கொடுமை மறைய வேண்டும்!

தினமும் -
வீட்டினுள் நுழையவும்
வெளியிலே செல்லவும்
நூற்றுக் கணக்கான
படிஏறி இறங்குகின்ற
பரிதாபம் குறையவேண்டும்!

நிலவுக்குள் நீண்டுவிடும்
ஃப்ளாட்களின் உயரத்தை
நினைத்தாலே மனம்கசக்கும்!
அந்தரத்தில் நடுவானில்
குடித்தனம் நடத்துகின்ற
கொடுமையிலே உயிர்வெறுக்கும்!

வாழும்போது இடமில்லை!
ஓரடியும் நிலமில்லை!
என்றநிலை மறையவேண்டும்!

இல்லையெனில் -
உடனடியாய் உயிர்பிரிந்து
ஆறடியில் உடல்ஒதுங்கப்
பராசக்தி அருளவேண்டும்!





திருமதி ஆண்டாள் பிரியதர்சினி

# பெருச்சாளி வேட்டை

கடற்படையில் இருந்து வந்தவன் என்கிற காரணத்தால் பயமில்லாதவன் என்ற ஒரு தப்பான அபிப்ராயம், என்மீது பெரியம்மாளுக்கு. துப்பாக்கியால் எதிரியைச் சுடும் தைரியம் இருக்கும் என்றால் ஒரு பெருச்சாளியைக் கொல்ல முடியாதா என்ன என்ற அவளது சாதாரண வாக்கு மூலத்தை எப்படி எதிர்த்து வாதிக்க முடியும்? பெருச்சாளி ஒன்றும் புதிதல்ல; சில மாதங்களாகவே வீட்டில் அமர்க்களம் செய்து வருகிறதாம். பாத்திரங்களை உருட்டுவதிலிருந்து காய்கறிகளை நாசமாக்குவது மட்டுமல்லாமல், ஷூஸ்களுள் செருகி வைக்கப்பட்டிருக்கும் ஸாக்ஸ்களை எடுத்துக்கொண்டு போய் ஒளித்து வைப்பது போன்ற அக்கிரமமான அநாகரிக வேலைகளையும் செய்து வருகிறதாம். ஒரு தடவை பாத்ரூம் குழாய் – வெளியேற்றும் வழி – சுத்தமாக அடைக்கப்பட்டு விட்டது. அதுகூடப் பெருச்சாளி மகாத்மியம் என்று சொன்னார்கள். அதையெல்லாம்விட இப்போது இரவுகளில், பெரியம்மாள் தூங்கிக் கொண்டிருக்கையில், அவள் பாதங்களைப் பிறாண்டி விட்டு தூக்கத்தைக் கலைத்து வேடிக்கை பார்க்கிறதாம். இப்போது இது பெரியம்மாளின் ஒரு தனிப்பட்ட தர்மயுத்தம்.

"லீவுலே வந்திருக்கே. ரெண்டு மாசம் இருப்பே. நன்னா தூங்கணும்னா – ஒன்னோடே நல்லதுக்குத்தான் சொல்றேன். இந்தச் சனியனைத் தொலைத்துக் கட்டினால்தான் முடியும் –"

எல்லோரும் தலையாட்டினார்கள் – கேபினட் மீட்டிங் போல எல்லாருமாகச் சேர்ந்து என்னை இந்த "ஆக்ஷன் ப்ளானு"க்குத் தலைவன் ஆக்கி விட்டார்கள். நாள்கூடக் குறித்தாகிவிட்டது.

"நாளைக்கே முடிச்சிடணும் – பூஜா விரதம் ஒண்ணும் இல்லை. சாதாரண நாள்தான் – தொலைச் சுட்டு பினாயில் ஊத்திக் கழுவிடணும்..." பெரியவரும் ஆமோதித்து விட்டார்.

இவ்வளவு சொன்னபிறகு முடியாது என்பதற்கு இடமே இல்லை – பெருச்சாளி இப்போது என்னுடைய விரோதி. நான் கமாண்டர் இன் சீஃப். இந்த ஏற்பாட்டை முடித்து வெற்றி வாகை சூட வேண்டியதுதான்.

அன்று இரவு ஒரு சிறு ஒத்திகை நடத்தினோம். பாலு – என் தம்பி – சாதாரணமாகப் பெருச்சாளியின் போக்குவரவை நன்கு தெரிந்து வைத்திருப்பவன் ஓர் ஆலோசனை தந்தான். அது மற்றொரு தம்பியால் ஒதுக்கப்பட்டது. இவன் சர்க்கார் உத்யோகஸ்தன். எதையும் ஒருமுறையாவது நிராகரிக்காவிட்டால் தனது அதிகாரத்திற்கு மதிப்பிருக்காது என்று பூரணமாக நம்புபவன். எனது சகோதரி தனக்கே உரித்தான நகைச்சுவையுடன் பெருச்சாளி வேட்டையின்போது எடுக்க வேண்டிய பல ஜாக்கிரதை முறைகளை விளக்கினாள். சிறுவர்கள் இருக்க வேண்டிய இடங்கள் ஒதுக்கப்பட்டன.

அப்போதுதான் நான் நினைவூட்டினேன். துப்பாக்கி இல்லையே! பெரியம்மாள் துப்பாக்கியை நிராகரித்துச் (துப்பாக்கி எப்படி, எங்கு கிடைக்கும் என்பது இரண்டாம் முக்கியத்துவம்) சொன்னாள் – "அந்த எழவு வேண்டாம் – ஏதாவது சுடறேன்னு சொல்லி, பெருச்சாளியை விட்டுட்டு யாரையாவது கொன்னு தொலைச்சிடாதே!..."

அவள் சொன்னதில் அர்த்தம் இருக்கத்தான் செய்தது. நான் கடற்படையில் சேர்ந்த புதிதில், .22 ரைஃபிள் சுடும் பயிற்சியில், முதலில் சுட்டபொழுது, கன்னரி இன்ஸ்ட்ரக்டர் ஒரு பஞ்சாபி – சொன்னார்: – "அப்பனே மொதல்லே நீ பட்டை, அம்பு அதெல்லாம் விட்டுப் பழகு அப்புறம் துப்பாக்கிக்கு வரலாம்" என்று – தீர்க்கதரிசி!

துப்பாக்கிக்குப் பதிலாக வேறு பல ஆயுதங்கள் தேடப்பட்டன. பாட்டி பார்த்த பார்வையிலேயே கொடிக்கம்பு பக்கம்கூடப் போகக் கூடாது என்று புரிந்து கொண்டோம் – பிறகு தொட்டில் மாட்டும் கம்பியிலிருந்து பல தினுசான கம்புகள் நிராகரிக்கப்பட்டன. ஓர் ஆயுதம் என்னால் ஒட்டு மொத்தமாக மறுக்கப்பட்டது. அது ஒரு குட்டையான மழுங்கிய அரிவாள்; "சே – கையைக் கிய்யைப் பிடுங்கி வச்சுடும்.." அந்தத் தத்துவம் எல்லோருக்கும் புரிந்தது.

"மாமா கெடச்சிடுத்து சரியான வெபன்!.." அக்கா பையன் ஓடி வந்தான் கையில் ஒரு ஹாக்கி ஸ்டிக்குடன் –"டேய் அதையேண்டா எடுத்தே..?" என் தம்பி மடக்கினான். "நான் அதை வச்சுண்டு அடுத்த வாரம் ஆடணும்டா.." "நீ கிழிச்சே – ஒங்க காலேஜ் டிரில் மாஸ்டர் – அதான் பி.டி. சொல்லிட்டாரே ஒனக்கு ஹாக்கியும் வராது ஒரு மண்ணும் வராதுன்னு. இதுக்காகவாவது உபயோகமாகும்.." ஒரு கர்வ பங்கம்..!

அக்கா ஆரம்பித்தாள் – "பாரு அடுத்த வாரம் தீபாவளி – தீபாவளிக்கு நாலு நாள் முன்னாலேயே ஒழிச்சிடணும் – இல்லேன்னா தீபாவளி பட்சணமும் பட்டாசும் கலந்துடும் – இதோடே கைங்கர்யத்துலே – நெனைவுலே இருக்கட்டும்.."

"நரகாசுர சம்ஹாரம்! – பெருச்சாளி வதம் – பிறகு கங்கா ஸ்நா

நரசய்யா

ணம் - பட்சணம்! ஆஹா அற்புதம்...” கேலியா, இல்லையா என்றுகூட எனக்குத் தெரியவில்லை - குடும்பத்தின் எல்லா அங்கத்தினர்களுக்கும் அன்றி விருந்து ஒரு தனி மரியாதை. வழக்கமானதைவிட அதிகமாகவே காபி முதலியன.

“மாமா மாமா ஓடிவாயேன் - ” சிறுவன் கத்தினான் - செய்ய முயற்சி செய்து கொண்டிருந்த க்ராஸ் வேர்டு புதிரை வைத்துவிட்டு எழுந்து சென்றேன் - அங்கு ஒரு ஸ்டூலின் மீது அமர்ந்து கொண்டிருந்தது, எனது புதிய எதிரி -

பெருச்சாளியா அது? ஒரு சிறிய முயல் குட்டி அளவில் ஓர் அடி நீள வாலுடன் - கறுப்பென்றால் கரி போல இல்லை - பெரிய கண்கள் போலும் - சுற்றிச் சுற்றிப் பார்த்தது - நாங்களெல்லாம் அதைப் பற்றிப் போட்ட திட்டம் அதற்குத் தெரிந்திருக்கும் போலும். அது கேலியாகச் சிரிப்பது போல எனக்குத் தோன்றிற்று. இதை எப்படி அடித்துக் கொல்வது?

ஜார்ஜ் ஆர்வெல் நினைவு வந்தது எனக்கு! இவர் எழுதிய எத்தனையோ நல்ல கதைகள் இருப்பினும், "Shooting of the elephant" என்ற ஒன்றுதான் நினைவிற்கு வந்தது. அவர் பர்மாவில் இருந்த பொழுது அவ்வூர்க்காரர்கள் இவரை ஒரு யானையைக் கொல்ல அழைத்துச் சென்றதும், அவர் அந்த யானையைக் கண்டு மலைத்ததும் - அப்பப்பா -

இங்கு இது எனது யானை - இதைக் கொல்லாவிட்டால் என்னுடைய மானம் என்னாவது? - என்னைப் பற்றிக் கவலையில்லை. இத்தனை வருடக் கடற்படை அனுபவம் இழுக்கு அடைந்துவிடும். ஏன், கப்பற்படைகூட அவமானத்திற்கு ஆளாக வேண்டிவரும்.

நான் கோவா விடுதலை முயற்சியில் ஐ.என்.எஸ். விக்ராந்தில் பணியாற்றி மெடல் பெற்றவன் - கேவலம் ஒரு பெருச்சாளி - இப்போதே தீர்த்துவிட வேண்டும் - நினைத்து முடிப்பதற்குள் அந்த பெருச்சாளி முன் கால்களைத் தூக்கிப் பக்கத்திலிருந்த ஜாடி மீது வைத்தது -

“மாமா இந்தா ஹாக்கி ஸ்டிக் - ” சத்தமின்றிக் கையில் தந்தான் சுட்டிப்பயல்.

யாரும் இல்லை. இன்றே தீர்த்து விட்டால் என் பெருமை நன்கு உயரும். இந்த அருமையான வாய்ப்பு இனி கிட்டாது. இரண்டு கால்களையும் கெட்டியாக ஊன்றிக் கொண்டு ஹாக்கி ஸ்டிக்கைக் கையில் வாங்கிக் கொண்டு -

— ஓங்கி ஓர் அடி!

— ஒரு சப்தம். அந்த இடமெல்லாம் சிவப்பா! சப்தம் கேட்டு அக்கா ஓடி வந்தாள். பின்னாலேயே பெரியம்மாள்.

“அட பாவி!” பெரியம்மாள் சொன்னது பெருச்சாளியையல்ல; என்னை - ஏனென்றால், நான் ஓங்கிய போதே, சற்றும் எதிர்பாராது திடீரென்று தாவி ஓடிவிட்ட பெருச்சாளி ஒரு மூலையிலிருந்து ஒரு கண்ணோட்டம் விட்டது. நான் அழித்தது பெருச்சாளியை அல்ல. அந்த ஜாடியை.

“நேத்துதாண்டா அந்த தெலுங்கு மாமி அனுப்பிச்சு வச்சா! குண்டூர்லேருந்து வந்ததுன்னு - அருமையான ஆவக்காய் ஊறுகாய் - இப்படி ஒண்ணுமே இல்லாமே பண்ணிட்டயே வாசனை பாரு!”

நல்ல வாசனை. ஆந்திராவின் ஆவக்காய் சிதறிக் கிடந்தது. சிவப்பாக எண்ணெயும் குழம்புமாக. தைரியமாகச் சற்றுத் தள்ளியிருந்த பெருச்சாளி ஒரு துண்டைக் கவ்விக் கொண்டு ஓடிற்று.

எதிரியை அழிக்க முடியாவிட்டாலும் பரவாயில்லை. எனது சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியையே பற்றிக் கொண்டு செல்வது போல அந்தப் பெருச்சாளி செய்த அந்தக் காரியம் என்னை அவமானத்திற்குள்ளாக்கியது.

இனி விடப்போவதில்லை. தீர்த்துக் கட்டிவிட்டுத்தான் மறுவேலை. நாளைதான் முதலிலேயே குறித்த நாள் - பார்த்துவிடலாம். “மாமா - கவலைப்படாதே - இன்னும் பெரிய ஜாடியெல்லாம் இருக்கு...” அவன் என்ன சொல்கிறான்? கிண்டல் செய்கிறானா? பரவாயில்லை.

“நாளைகுப் பார்டா...!”

இவ்வளவு சீக்கிரமாக அடுத்த நாள் வந்துவிடும் என்று எதிர்பார்க்கவில்லை.

பாலு அழைத்தான். “தோ பார் - நான் அந்தப் பெருச்சாளியைச் சமையலறையிலிருந்து விரட்டிவிட்டு அந்தக் கதவை அடைச்சிடுறேன். ரேழிக் கதவையும் தாப்பாப் போட்டுடறேன். ஹாலுக்குள்ளே மட்டும்தான் இதாலே ஓடமுடியும். ஒண்ணு மட்டும் நெனைவுலே வச்சுக்கோ - டி.வி. இருக்கு - அது ஊறுகா ஜாடி இல்லை. பன்னெண்டாயிரமாக்கும்...!”

“ஏரியா ஆஃப் ஆக்ஷன்” ஊர்ஜிதம் செய்யப்பட்ட பிறகு நான் ஒரு பேண்ட்டைப் போட்டுக் கொண்டுக் கையில் ஹாக்கி ஸ்டிக்குடன் ஆஜரானேன். பெண்கள் பின்கட்டிற்குச் சென்று விட்டார்கள். எனக்கு உதவி பாலு அந்தச் சுட்டிப் பயல் இருவர்தான்.

பாலு திட்டமிட்டபடி சமையலறைக்குச் சென்று பெருச்சாளியைத் தேட ஆரம்பித்தான் - ரேழிக்கதவை மூடிவிட்டு சுட்டிப் பயல் ஒரு பெஞ்ச் மீது ஏறி நின்று கொண்டான் - “எதற்கும் நல்லதுன்னு எடுத்துண்டு வந்தேன்”. அவன் கையில் மூன்று செல்கள் போட்ட ஒரு நீளமான எவரெடி டார்ச் லைட். முன்னேற்பாடாகச் சகோதரி வெளியேறும் பல வழிகளையும் பழைய துணிகள் கொண்டு அடைத்துவிட்டாள்.

“கொன்னப்புறம் அதை எப்படிக் கிளியர் பண்றது?” சர்க்கார் உத்தியோகஸ்தனான மற்றொரு தம்பி கேள்வி எழுப்பினான். சகோதரி அதற்குத் தயாராகவே இருந்தாள் - அதுக்குன்னே ஒரு பழைய முறம் ஒண்ணும் வச்சிருக்கேன்”

ஏற்பாடுகள் எல்லாம் சரியாகவே இருந்தன. மற்றொரு முறை எல்லாவற்றையும் 'செக்' செய்தபிறகு 'ஓகே' தரப்பட்டது. பாலு சமையலறைக்குள் நுழைந்தான் - சற்று நேரம் குடையும் சப்தம்.

ஒரே அலறலுடன் ஓடி வந்தான் பாலு. அவன் காலைக் கடித்துவிட்டு ஓடிவிட்டதாம் எதிரி!

"உடனே ஏ.டி.ஸி. இஞ்செக்ஷன் போட்டுண்டுடு -"

"ரேபிஸ் ஒண்ணும் வந்துடாதே!.."

எதற்கும் நல்லதென்று பாலு பக்கத்துத் தெருவிலிருக்கும் டாக்டரிடம் செல்ல வேண்டியதாயிற்று.

பெருச்சாளி "அட்டாக் இஸ் த பெஸ்ட் வே ஆஃப் டிபன்ஸ்.." என்ற முறையைக் கைப்பற்றியிருக்கிறது - முதல் "கேஷுவாலிடி" எங்கள் தரப்பில்! - ஆண்டவனே - நன்றாக வேண்டிக் கொண்டேன்.

பெருச்சாளி இப்போது தென் பட்டது. ஓடிச் சென்று சமையலறைக் கதவை நானே மூடி விட்டேன். இந்த ஹாலில் பல தட்டுமுட்டுச் சாமான்களுடன் - ஒரு டி.வி., வி.ஸி.ஆர் - அதற்கு வேண்டிய ஸ்டெபிலைஸர் இத்யாதி. இரண்டு பிளாஸ்டிக் வாளிகள் - இவைகளுடன் நான் - சுட்டிப் பயல் - பெருச்சாளி.

பெருச்சாளி என்னை முறைத்துப் பார்த்தது.

நான் அதைக் கையில் ஹாக்கி ஸ்டிக்குடன் முறைத்துப் பார்த்தேன். நான் ஆயுத பாணி - அது நிராயுதமாக!

"என்ன மாமா - இன்று போய் நாளை வான்னு சொல்லப் போறேளா?.."

எனக்குத் திக்கென்றது. ஆமாம் - இதை எப்படிக் கொல்வது? பார்த்தால் என்னைக் கெஞ்சுவது போலத் தெரிந்தது. விடக் கூடாது. ஓங்கி, ஹாக்கி ஸ்டிக்கைத்தான், பெருச்சாளி ஓடவிருக்கும் திசையை அறிந்து கொண்டு ஒரே அடி! தரையில் தான் பட்டது.

கால்பந்து ஆட்டத்தில்தான் பார்த்திருக்கிறேன். இரு குழுவினரும் கோல் போடாத நிலையில் பெனல்டி கிக் தரும்போது - பந்து போகும் திசைக்கு எதிரில் கோலி சாய்வார் - அடிப்பவரின் திறமை அது. ஒரு பக்கமாகத் தட்டுவது போல ஏமாற்றும் வித்தை. இங்கே அது வேறு விதமாக நடந்திருக்கிறது. வலது பக்கமாக ஓடப் போவது போலக் காட்டிவிட்டு இடது பக்கம் ஓடிவிட்டது அந்தப் பெருச்சாளி!



அடி மட்டும் பட்டிருந்தால் செத்திருக்கும்.

அப்படியே வி.ஸி.ஆர். அருகில் அமர்ந்து கொண்டது. ஆவக்காய் அனுபவம் போலும். யார் சொன்னது பெருச்சாளிக்குப் புத்தி கிடையாது என்று?

"மாமா அங்கேயே நில்லுங்கோ" சுட்டிப்பயல் மெதுவாகச் சென்று ஒரு குச்சியால் பெருச்சாளியைத் தட்டினான். அது என் பக்கமாக ஓடியது. பயந்து நான் குதித்ததில் என் காலால் சற்றே நசுக்கப்பட்டு விட்டது. சிறிதே காயம் போலும். மெதுவாகவே ஓடிற்று.

"டேய் ரேமிக் கதவைத் திறடா" உத்தரவிட்டேன் பெரிய கமாண்டர் போல.

திறந்தவுடன் ஹாக்கி ஆடுவது போல பெருச்சாளியைத் தள்ளி விட்டேன். அதன் ஓட்டமும் எனது விசையும் சேர்ந்து திண்ணையில் வந்து விழுந்தது. மற்றொரு அதே போன்ற 'ஆபரேஷன்' - திண்ணையைத் தாண்டித் தெருவில் ஓடும் சாக்கடையில் - அந்தச் சாக்கடையில் ஈரம்கூட இல்லை - சென்று மறைந்தது பெருச்சாளி!

என்னையே நான் மெச்சிக் கொண்டேன்.

"டேய் பயலே பாத்தயா - கொலை கிலை இல்லாமே வெறட்டியாச்சு!.."

அவன் பார்த்த பார்வை அவ்வளவு உசிதமாக எனக்குத் தோன்றவில்லை.

"ஏண்டா வீட்டை விட்டு விரட்டிட்டேயாமே - பேஷ் - பேஷ் -" பெரியம்மாள் சந்தோஷப்பட்டாள்.

"திரும்பி வந்துடா தோன்னோ..?" கேட்டாள்.

"எப்படி வரும்? எங்கேயாவது போய் செத்துத் தொலையும் - இப்பவே ஏதோ நாய் கீய் கடிச்சுக் கொதறியிருக்கும்..!"

"போகட்டும் - ஒனக்குக் கொண்ணும் பாவம் சேரல்லை"

எல்லோருக்குமே பெருச்சாளி கொல்லப்படவில்லை என்பதில் ஒரு மகிழ்ச்சி - விரட்டி விட்டதில் ஓர் ஆனந்தம்.

"இராணுவத்திலே முக்கியமாக ஒண்ணு சொல்லுவா..." நான் விவரித்தேன். வெற்றி என்பது கொல்வதில் இல்லை - நம் எல்லையைக் காத்துக் கொள்வதில்தான் என்பதையும், எதிரியைக் கொல்வதை விடப் பயத்தில் அருகில் வராமல் காத்துக் கொள்வதிலும்தான் என்று.

மற்ற எனது சொந்த அனுபவங்களையும் சொல்லிக் கொண்டு, அதில் சிறிது கற்பனையும் கலந்து, எல்லோரையும் மகிழ்வித்தேன். ஒரு பெரிய வீரனை - ஏன் கட்டபொம்மனையே - பார்த்து விட்டதுபோல - என்னை நடத்தினார்கள்.

சாப்பிட்டுவிட்டு இரவு தூங்குகையில் மணி பன்னிரண்டைத் தாண்டியிருந்தது.

சுமார் நான்கு மணியிருக்கும்.

தடபுட என்று சாமான்கள் உருளும் சத்தம். பெரியம்மாள் உள்பட எல்லோரும் ஓடினோம்.

எவர்சில்வர், பித்தளை என்ற வித்தியாசமின்றிப் பல பாத்திரங்களை உருட்டிவிட்டு, அன்று வாங்கி வைத்திருந்த மளிகைக் கடைச் சாமான்களைக் குதறிவிட்டு, சமையலறையில் அந்தப் பெருச்சாளி தனது சாம்ராஜ்யத்தை மறுபடி ஏற்படுத்தியிருந்தது.

"மாமா!..." அந்த ஒரு வார்த்தையில்தான் எவ்வளவு அர்த்தம்!

"நெஜமாவே நீ கடற்படையில்தான் இருக்கயா?"

கேள்விகள் - கேள்விகள் -

இனி இங்கே ஒரு காஷ்மீர் பிரச்னை - இது இவ்வளவு சீக்கிரத்தில் முடியாது போலும்! ஃ

## 'அமுதசுரபி' 25 ஆண்டுகளுக்கு முன் (1968 டிசம்பர்)

அட்டையில் கம்பீர அழகு பிம்பமாய் நடராசரின் ஆனந்தத் தாண்டவம், அதற்கான விளக்கக் கட்டுரை 75ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ளது. சிலை வடிவத்தின் ஒவ்வோர் அற்புதத்தையும் நுணுக்கமாய் விளக்கியுள்ளார், சாந்தினி. புரியாத பல விஷயங்கள் மிக துல்லியமாகப் புலப்படுகின்றன இக் கட்டுரையில்.

இனிய இசையுடன் கூடிய பாடல்களை ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாடி மக்களைத் தம் சமயத்திற்கு ஈர்த்த நிகழ்ச்சி பல்லவ நரசிம்மன், பாண்டிய மாற வர்மன் காலத்தில் தொடங்கிய காரணத்தை 'ஆயிரம் ஆண்டுகளில் தமிழகம்' கட்டுரை மூலம் விளக்கியுள்ளார் ஆசிரியர் விக்கிரமன். சீன யாத்ரிகர் யுவான் சுவாங்கின் விஜயம் பற்றி ஒப்பிட்டு எழுதியுள்ளது கட்டுரையின் சிறப்பம்சம் எனலாம்.

பி.எஸ். சாமிநாதனின் 'இதயத்தில் யார்?' தொடரின் 23, 24ஆவது அத்தியாயங்கள், 25ஆவது அத்தியாயத்தை எதிர்நோக்க வைத்துள்ளது.

17ஆம் பக்கத்தில் பிரசுரமாகியுள்ள பி.வி. ராவ் கணித்துள்ள 'உங்கள் இம்மாத பலன்' அனைத்துத் தரப்பினரையும் அடுத்த பகுதிக்குச் செல்ல முடியாமல் தடுத்து நிறுத்தியிருக்கும் நிச்சயம்.

தென்னகத்தில் சிறந்த மருத்துவமனையாக திகழும் புதுவை ஜிப்மர் மருத்துவக் கல்லூரி - மருத்துவமனையின் முதல்வர் டி. ஜகந்நாத ரெட்டியார் (புதுவை பெரியோர் வரிசையில்) பேட்டியை வெளியிட்ட 'அமுதசுரபி' ஜிப்மர் மருத்துவமனையின் புகழை தரணி முழுக்க பரப்ப உதவியுள்ளது.

'வளரும் இசைப் புலவர்கள் வரிசை'யில் இன்று பிரபலமாய் பவனி வரும் கட வாத்திய வித்வான் உமையாள்புரம் நாராயண சுவாமியின் புகழ் 56ஆம் பக்கத்தில் அன்றே பரிந்துரைக்கப்பட்டுள்ளது.

பிரம்மஸ்ரீ சி.வி. சுவாமி சாஸ்திரிகளின் 'திரிபுரா இரகசியம்' ஆன்மிக அன்பர்களைத் திளைக்க வைத்திருக்கும்; மீண்டும் மீண்டும் படிக்கத் தூண்டியிருக்கும். அதே போல் புலவர் கீரன் தொகுத்துள்ள 'வில்லிபுத்தூரார் மகாபாரதத்தின்' ஐந்தாம் பகுதி மற்றோர் ஆன்மிகச் சுவை.

"பிஸ்கெட்டுக்கொரு பிரிட்டானியா" கட்டுரையை எழுதியுள்ள த.ரா.ரா. செய்முறை விளக்கங்களைக் கூறியுள்ளதோடு 'பிரிட்டானியா' பெயரை நிலைக்க வைத்துள்ளார். அதற்கு 'அமுதசுரபி'யும் இடமளித்துள்ளது பாராட்ட வேண்டிய சங்கதி.

'குடும்பக் கட்டுப்பாடுத் திட்ட செய்தி மடல்' பக்கங்கள் இன்று, 'இருவருக்கு ஒருவர்' என்ற வாசகத்தை நிஜமாக்க அன்றே வழி காட்டியுள்ளது என்றால், அது மிகையாகாது.

கட்டுரையின் புள்ளி விவரங்கள், விளக்கங்கள், காரணங்கள், நடைமுறை சாத்தியங்கள் பாமர மக்களும் ஏற்றுக் கொள்ளும்படியாக மிக அருமையாக வலியுறுத்தப்பட்டுள்ளன.

இதோடு முடிந்து விடவில்லை 25 ஆண்டுகளுக்கு முந்தைய 'அமுதசுரபி'யின் சேவை.

'மழை பூமிக்குச் சொந்தம்' சிறுகதை ஆசிரியர் ராஜ்யஸ்ரீ, 'பூஜைக்கு ஒரு தெய்வம்' சிறுகதையை எழுதியுள்ள உ. ரங்கராஜன், 'ஆத்ம தபஸ்' சிறுகதையைப் படைத்துள்ள அரவிந்தன், 'முக்கோணம்' சிறுகதையை வடித்துள்ள சோம மகாதேவன், (பிரபல கதாசிரியர் இன்று அமரராகி விட்டார்) 'கண்ணன் வருவான் கதை சொல்லுவான்' சிறுகதையின் கர்த்தா இ.ஜெ. நடராஜன் முதலியோர் தத்தம் எழுத்துகளின் - கருத்துகளின் மூலம் சமுதாய சீர்திருத்தச் சிந்தனைகளை விதைத்துள்ளனர்.

ஆக - 1968ஆம் ஆண்டு டிசம்பர் மாத 'அமுதசுரபி' ஓர் இலக்கிய கருவூலமாக மிளிர்வதோடு சமுதாய மேன்மைக்கும் உதவியுள்ளதைச் சொல்லாமல் சொல்கிறது.

— நரேன்

# யோகமாயா புவனேஸ்வரி

சென்னை அடையாற்றில் வசிப்பவர் ராஜேந்திரன். இவரது ஒரே மகள் சாந்தி. வயது முப்பத்தெட்டு. நல்ல அழகு. தனியார் நிறுவனத்தில் மூவாயிரம் ரூபாய் சம்பளம். நக்ஷத்திரம் மூலம். கல்யாணம் நடக்க வேண்டும். ராஜேந்திரன் பெண்ணுக்கு வேண்டிய பாத்திரங்கள், நகைகள், பாக்கி சாமான்கள் எல்லாவற்றையும் வாங்கி வைத்திருந்தார். ஆனால் சாந்திக்கு வரன் அமைவதே குதிரைக் கொம்பாய் இருந்தது.

நக்ஷத்திரம் மூலமென்று தட்டிக்கழித்தவர் அநேகம். வயதாகிவிட்டது என்று பெண் பார்க்காமல் போனவர் ஏராளம். ஐந்நூற்றுக்கணக்கில் ஜாதகம் பார்த்தாகிவிட்டது. ஒன்று கூடச் சரியாய் அமையவில்லை. ராஜேந்திரனுக்குத் தலையே சுற்றியது. ஒரே பெண். காலத்தில் திருமணம் சாந்திக்கு பண்ணி வைக்க முடியவில்லையே என்று மனம் நொந்தார்.

ராகுகாலத்தில் செவ்வாய்க் கிழமையன்று ராகுகால துர்க்கைக்கு எலுமிச்சம்பழ விளக்கு ஏற்றுவது. வெள்ளிக்கிழமையானால் காலையில் புற்றுக்குப் பால் ஊற்றுவது. வெள்ளிக் கிழமை அன்று மாலையில் கபாலீச்வரர் சன்னிதிக்கு கற்பகாம்பிகையைத் தரிசனம் செய்வது என ஏகப்பட்ட பிரார்த்தனைகள். செவ்வாய் அன்று சுப்ரமண்ய சுவாமிக்கு விரதம். வியாழக்கிழமையன்று ராகவேந்திரர் விரதம் என, பிரார்த்தனைகளும், விரதங்களும் பலமாய் இருந்தன. ராஜேந்திரன் புலம்பவே ஆரம்பித்து விட்டார். எப்போது திருமணம் நடக்கும், எப்போது பாரம் குறையும். வேதனைக் கடலில் சிக்கினார். துன்பப் புயலில் மாட்டிக் கொண்டு தவித்தார். எப்போது திருமணச் சாப்பாடு போடப்போகிறீர்கள் என்று சாந்தியை எல்லோரும் கேட்டார்கள். தலை குனிந்து கொண்டு வேதனையை வெளிப்படுத்தாமல் கேட்பதற்கு மட்டும் தலையசைத்துவிட்டு, தன்னந்தனியாய் உட்கார்ந்து அழுவாள்.

ராஜேந்திரனிடமும் சொல்லி அழுவாள். தந்தைக்கு மகள் ஆறுதல். மகளுக்குத் தந்தை ஆறுதல். எப்போது விடிவு காலம் வரும். காலம் கனியவில்லை. பக்கத்துவீட்டுத்தோழிகளுக்கும், தன்னோடு படித்த பெண்களுக்கும் திருமணம் ஆகிவிட்டது. ஆனால் சாந்திக்கு மட்டும் ஏன் இப்படி? யாரை நோவது. விதி சாந்தியை இன்னும் விடவில்லை. சாந்திக்குத் திருமணம் நடக்காததால் மனச் சாந்தியே போய்விட்டது ராஜேந்திரனுக்கு.

நண்பர் ஒருவர் மூலமாய் புவனேஸ்வரி சுவாமிகளிடம் சரண் புகுகிறார்கள் சாந்தியும், ராஜேந்திரனும். "சுவாமி பருவம் கடந்து விட்டது சாந்திக்கு. சரியாய் மாப்பிள்ளை அமையவில்லை. ஜாதகம் எவ்வளவோ பார்த்தாகிவிட்டது. ஒரு வரன்கூட அமையவில்லையே" என்று கண்ணீரால் சுவாமிகளின் கால்களை நனைத்தார் ராஜேந்திரன். "உன் குழந்தைக்கு நல்ல வரன் வரப் போகிறது. யோகமாயா புவனேஸ்வரி கூட்டி வைப்பாள். நல்ல நிலைக்குச் சேர்த்து வைப்பாள். வருத்தம் அடையவேண்டாம். எம்பெருமாட்டியின் கருணையை நினைத்துப் போற்றுங்கள். எல்லோருக்கும் மங்கலம் அருளுபவள்" என்று ஆறுதல் கூறி "பாரத்வாஜ ஆச்ரமத்திற்கு பௌர்ணமியன்று வாருங்கள். அன்று நடக்கும் ஸ்வர்ண மங்கள கௌரீ பூஜையில் கலந்து கொண்டு தரிசனம் செய்யுங்கள். நிச்சயம் நல்ல வரன் கிட்டும். அடுத்த மாதம் திருமணப் பத்திரிகையோடு வாருங்கள்" என ஆசீர்வதித்தார்.

சுவாமிகள் அருளிய ஸ்லோகத்தை தினமும் பாராயணம் செய்துக் கொண்டிருந்த சாந்தி பௌர்ணமிக்காகக் காத்திருந்து, அன்று விரதமிருந்து, பௌர்ணமி நாளில் பூஜைக்குத் தயார் ஆனாள். "லஜ்ஜாவதீ லப்தபுத்ரீ லாகினீ லோலகுண்டலா, லப்தகாமா லப்ததீர் லப்தமங்களா" என்று துர்கா ஸஹஸ்ர நாமாவளியைக் கொண்டு, ஸ்வர்ண மங்கள கௌரீ பூஜையைச் செய்தருளினார் சுவாமிகள். அப் பூஜையில் வைத்த மஞ்சளை தினமும் முகத்தில் பூசிவரச் சொல்லி சாந்திக்கு ஆசி கூறினார். செவ்வாயும் வெள்ளியும் மாலை வேளைகளில் சுவாமிகள் கூறிய ஸ்லோகத்துடன் பிரார்த்தனையை நம்பிக்கையோடு செய்தாள் சாந்தி.

சேலத்தில் இருந்து ஒரு வரன் வந்தது. இன்ஜீனியர் மாப்பிள்ளை. "சீக்கிரம் திருமணம் வைத்துக் கொள்ளுங்கள்" என மாப்பிள்ளை வீட்டார்நிர்ப்பந்தப்படுத்தினார்கள். ராஜேந்திரனுக்குக் கையும் ஓடவில்லை. காலும் ஓடவில்லை. சாந்திக்குப்பாரத்வாஜ ஆச்ரம புவனேஸ்வரியின் திருவுருவம் மட்டும் தெரிந்தது. அவளது திருவிளையாடல் ராஜேந்திரனுக்கு மட்டும் புரிந்தது. ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகள் ஆசிகளுடன் திருமணம் நடப்பதாய் பத்திரிகை அச்சடித்தார்கள். திருமணம் நடந்தேறியது. இன்று சேலத்தில் சாந்தி. ஃ

புவனேச்வரிதாஸன்



# நாணயம்

நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும்
உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும்
வழிகாட்டும் புதிய பகுதி.

## வளரும் தமிழகம்

தென் மாநிலங்களிலேயே மிகப்பெரிய மாநிலமாகவும் பம்பாய், டில்லி, கல்கத்தா போன்ற பெரிய நகரங்களுக்கு இணையாகச் சொல்லக் கூடியச் சென்னை மாநகரைத் தலைநகரமாகக் கொண்டுள்ள தமிழ்நாடு, தொழிற்துறையில் எந்த அளவு வளர்ந்துள்ளது என்று அறியும் ஆவல் எல்லோருக்கும் உண்டு. சிலருக்கு மஹாராஷ்டிரம் போல் தொழில் துறையில் தமிழகம் அவ்வளவு சிறப்பாக முன்னேறவில்லையே என்ற ஏக்கமும் இருக்கும். ஆனால் காலம் மாறி வருகிறது. தமிழகமும் பலதுறைகளில் தன்னிகரற்று முன்னேறி வருகிறது என்பதை எடுத்துக் காட்டவே இக் கட்டுரை. சில முக்கிய துறைகளில் தமிழகம் எவ்வாறு சிறந்து விளங்குகிறது என்பதைப் பார்ப்போம். முதலில் பெட்ரோ கெமிக்கல் மற்றும் அதன் சார்புடையத் துறைகளைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.





### மணலி பெட்ரோலியத் தொழில் வளாகம்

வட சென்னையில் அமைந்துள்ள மணலி, தமிழகத்தின் தொழில் வளர்ச்சியில் பெரும் பங்கு வகிக்கின்றது. மணலியில் அமைந்துள்ள, பெட்ரோலியத்தை மூலப் பொருளாகக் கொண்டு இயங்கும் பல தொழிற்சாலைகளுக்கு விநியோகம் செய்யும் தாய்

தொழிற்சாலையாக அமைந்துள்ளது 'மெட்ராஸ் ரீஃபைனரீஸ் லிமிடெட்'. ஆண்டொன்றுக்கு 5.6 மில்லியன் டன்கள் கச்சா எண்ணையை சுத்திகரிக்கும் பணி இங்கு நடைபெறுகின்றது. சுத்திகரிக்கப்பட்டப் பெட்ரோலியம், சமையல் எரிவாயு ஆகியவை உற்பத்தி செய்யப்பட்ட பின் எஞ்சிய மூலப் பொருளைக் கொண்டு சுமார் 13 பெரிய நிறுவனங்கள் வெவ்வேறு தயாரிப்பில் ஈடுபட்டுள்ளன.

மெட்ராஸ் ரீஃபைனரீஸ், நாடு முழுவதும் தொடங்கப்பட்ட 12 பெரிய தொழிற்சாலைகளில் ஒன்று. 1965இல் இந்திய அரசு மற்றும் 'நேஷனல் இரானியன் ஆயில் கம்பெனி மற்றும் அமெரிக்காவின் 'அமோகோ' ஆகியவற்றுடன் இணைந்து துவக்கப்பட்டது. சமீபத்தில் இதன் உற்பத்தித் திறன் 5.6 மில்லியன் டன்களிலிருந்து 6.5 மில்லியன் டன்களாக உயர்த்தப்பட்டுள்ளது. நாட்டின் தேவையில் 12 சதவிகிதத்தை இது பூர்த்தி செய்கிறது. இந் நிறுவனத்தின் மூலம் பெறப்படும் தயாரிப்புகள் சல்ஃபர், நேஃப்தா, பெட்ரோல், ஏ.டி.எஃப் (விமானங்களுக்கு மட்டும் பயன்படும் எரிபொருள்) கெரசின், டீசல், லீனியர் ஆலகைல் பென்சீன், பாலிபுடேன், ப்ரொபலைன், பாரஃபின் மெழுகு,



மெதில் எதில் கீடோன் போன்றவை. இதன் உற்பத்திக் கொள்ளளவு தொடர்ந்து நூறு சதவிகிதமாக இருப்பது அதற்கு மேலும் தனிச் சிறப்பாகும்.

தனியார் துறையில் ஸ்டாக் நிறுவனத்துடன் இணைந்து ரூ 1,700 கோடி ரூபாய் செலவில் துவக்கப்படவுள்ள நேஷனல் அரொமேடிக் & பெட்ரோ கெமிக்கல் கார்ப்பரேஷன் நிறுவனத்தின் துவக்கத்தின் மூலம் மணலி பெட்ரோலியத் தொழில் வளாகம் இந்தியாவிலேயே மிகப் பெரிய தொன்றாக மாறிவிடும். இப்புதிய நிறுவனத்தின் மூலம் ஏராளமான 'நேஃப்தா' என்ற மூலப் பொருள் பெறப்படுவதால் இதன் அருகாமையிலேயே நேஃப்தா கிராக்கர் பிரிவு ஒன்றைத் துவக்க தமிழக அரசு மத்திய அரசை வலியுறுத்தி வருகிறது. 31.3.93 முடிய வெளியிடப்பட்ட ஆண்டு முடிவுகளின்படி எம்.ஆர்.எல் நிறுவனம் பின்வருமாறு செயல்பட்டுள்ளது.

| | ரூபாய் கோடிகளில் |
|---|---|
| மொத்த விற்பனை | 1627.48 |
| இதர வருமானம் | 12.48 |
| மொத்த செலவினம் | 1463.03 |
| வட்டி செலவினம் | 39.98 |
| மொத்த லாபம் | 136.95 |
| வரிக்கு ஒதுக்கிடு | 70.94 |
| நிகர லாபம் | 28.53 |
| டிவிடெண்ட் | 25 சதவிகிதம் |
| பங்கு மூலதனம் | 114.13 |
| உபரிநிதி | 210.80 |

(அடுத்த இதழில் தமிழகம் முழுவதும் இயங்கும் பெட்ரோ கெமிக்கல் சார்ந்த பொருட்களைத் தயாரிக்கும் நிறுவனங்கள் பற்றித் தெரிந்து கொள்வோம்.) – பத்மா

# அதிகரித்துவரும் அந்நிய முதலீடுகள்



புதிய தளர்த்தப்பட்டப் பொருளாதாரக் கொள்கையினால் இந்தியாவில் அந்நிய முதலீடு மிகவும் அதிகரித்து வருகிறது. இது வரை இந்திய மார்க்கெட்டிலிருந்து விலகியே இருந்து வந்த சில நாடுகள் கூட. தற்போது இந்தியாவில் முதலீடு செய்வதில் ஆர்வம் காட்டியுள்ளன.

சீனா : 1991 இல் ரூ. 7.5 மில்லியனை முதலீடு செய்த இந்நாடு 92 இல் விலகியே இருந்தது. ஆனால் இந்த வருடம் ரூ. 364.8 மில்லியன் ரூபாய்களை முதலீடு செய்ய முன் வந்துள்ளது.

சௌதி அரேபியா : 1992 இல் ரூ. .3 மில்லியனாக இருந்த இந்நாட்டின் முதலீடு 1993 இல் ரூ. 96.5 மில்லியன்களாக உயர்ந்துள்ளது.

தாய்லாந்து : செப்டம்பர் மாதம் வரை இந்நாடு இந்தியாவில் முதலீடு செய்துள்ள தொகை ரூ. 3,664 மில்லியன்கள். கடந்த ஆண்டு இதன் முதலீடு ரூ. 19.2 மில்லியன்கள் மட்டுமே.

சுவிட்சர்லாந்து : இதுவரை இந்தியாவில் பெரியதாக எந்த முதலீட்டையும் செய்திராத இந்நாடு இந்த ஆண்டு ரூ. 5,804 மில்லியன் முதலீட்டிற்கானத் திட்டம் ஒன்றை அறிவித்துள்ளது.

இங்கிலாந்து : வியாபாரத் தொடர்புகளின் மூலம் இந்தியாவை நன்கு அறிந்த இந்நாடு ரூ. 5,804 மில்லியன் முதலீட்டிற்கானத் திட்டங்களை அறிவித்துள்ளது.

அமெரிக்கா : இந்தியாவில் முதலீடு செய்ய முன் வந்துள்ள நாடுகளின் பட்டியலில் முன்னணியில் நிற்கும் இந்நாடு ரூ. 28,796 மில்லியன் முதலீட்டிற்கான புதிய திட்டங்களை அறிவித்துள்ளது.

ரிசர்வ் வங்கியின் எக்ஸ்சேன்ஜ் கண்ட்ரோல் பிரிவு கடந்த செப்டம்பர் மாதத்தில் மட்டுமே சுமார் 51 அந்நிய முதலீட்டுத் திட்டங்களுக்கு ஒப்புதல் அளித்துள்ளது. இவற்றில் 16 புதியத் திட்டங்களுக்கும் மற்றவை தொழில்நுட்பப் பரிமாற்றங்களுக்கும் ஆகும். ஜே.கே.

# வியக்க வைக்கும் விதான் சூப்பர் மார்க்கெட்

தேவைகளுக்கேற்பப் பொருட்கள் வாங்குவதற்குக் கடைகளுக்குப் போய் வருவதுதான் நியதியாக இருந்தது. ஆனால் இன்று 'ஷாப்பிங்' போவது என்பது பொழுது போக்கு அம்சமாக மாறி வருகிறது. இதற்குக் காரணம் நகரில் ஆங்காங்கே உருவாக்கப்பட்டிருக்கும் நவீன ஷாப்பிங் காம்ப்ளெக்ஸுகள். பொருட்களின் வியாபாரத்தைப் பெருக்க இப்போது பல யுக்திகள் கையாளப்படுகின்றன. துடைக்கும் துணியாகவே கூட இருந்தாலும் அது காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கும் விதம், பாக் செய்யப்பட்டிருக்கும் விதம் ஆகியவற்றைப் பொறுத்துத்தான் மக்களின் கவனத்தைக் கவருகிறது.

வெளிநாடுகளுக்குப் போய் வரும் நபர்கள் அங்கே காணப்படும் ஷாப்பிங் காம்ப்ளெக்ஸுகளை மனத்தில் கொண்டு, இங்கேயும் அப்படி ஆரம்பித்து மக்களை ஈர்த்துக் கொள்கிறார்கள். ஊசியிலிருந்து உத்திரம் வரை ஒரே கூரையின் கீழ், அலுக்காமல் சலிக்காமல் பொருட்களை வாங்க வசதி செய்து விடுகிறார்கள்.

சென்னை மயிலாப்பூரில் பல மாடிக் கட்டடங்களில் முழுவதும் குளுகுளு வசதி செய்யப்பட்டுள்ள 'விதான் சூப்பர் மார்க்கெட்' சொக்கானி செயின் ஸ்டோர்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்டினால் அமைக்கப்பட்டு ஏறக்குறைய ஒரு சுற்றுலா ஸ்தலமாகவே விளங்குகிறது.

இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் தரமானப் பொருட்கள் வரவழைக்கப்பட்டு, சுகாதா மான முறையில் சுத்திகரிக்க பட்டு பாக்கிங் செய்யப்பட் வைக்கப்பட்டுள்ளன. இங் நமக்குத் தேவையானவற் நாமே தேர்ந்தெடுத்துக் கொள்ளு வகையில் பொருட்கள் மிக விசா மான கூடங்களில் அடுக்கி வை கப்பட்டுள்ளன.

அடித்தளத்தில் பலசரக்கு சாமான்கள், ரெடிமேட் உணவு பொருட்கள், அலங்காரச் சா னங்கள், பேக்கரி பொருட்க திடீர் உணவு வகைகள், பிளா டிக் பொருட்கள், கட்லரி சாதன கள் என்று இல்லாதவைக இல்லை எனக் கூறும் அளவிற் வைக்கப்பட்டுள்ளன.



அடுத்த தளத்தில் ஆண், பெண், குழந்தைகளுக்கான ரெடி மேட் ஆடைகளின் அணிவகுப்பு.

மேல்தளத்தில் குழந்தைகளுக் கான விளையாட்டுச் சாமான்கள், சமையலறைச் சாதனங்கள், பரிசுப் பொருட்கள், வாழ்த்து அட்டைகள் என்று பிரமிக்கத்தக்க வகையில் சாதனங்களின் ஆக்ர மிப்பு.

இவை தவிர நாள் முழுவதும் கிடைக்கும் வகையில் பால், பழங்கள், குளிர் பானங்கள், ஐஸ்க்ரீம் வகைகள், அதிவேக உணவு வகைகள், விதானுக்குள் வந்துவிட்டு வெறுங்கையாக யாரும் போக முடியாத அளவிற்கு ஈர்த்துவிடுகின்ற பொருள்கள் நிறைந்த அங்காடி.

வாடிக்கையாளர்களின் வசதிக் காக, கிரெடிட் கார்டு வசதி, கிஃப்ட் கார்டு வசதி போன்றவை களும் அறிமுகப்படுத்தப்பட் டுள்ளன. விழாக் காலங்களில் விற் பனையைப் பெருக்குவதற்கான உத்திகளும் பின்பற்றப்படு கின்றன. விதானின் மேலும் இரு கிளைகள் அண்ணா நகரிலும், அண்ணா சாலையிலும் இயங்கி வருகின்றன. கடந்த ஆண்டு விற்பனை ரூ. ஆறரை கோடியாக இருந்தது, இந்த ஆண்டு ரூ. 8 கோடியாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது என்கிறார் விதானின் நிர்வாக இயக்குநர் திரு. எம்.சி. பண்டாரி.

சென்னை நகரின் மற்றப் பகுதி களிலும் விதான் சூப்பர் மார்க் கெட்டின் கிளைகள் துவங்கத்திட்ட மிட்டிருக்கிறது என்றும் குறிப்பிட் டார்.

வியாபார வெற்றிக்கு ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்கிறது இந் நிறுவனம்.

—ஷாந்தி

## புதியவை அறிமுகம்



### சாஃப்ட்டெல் ஐஸ்க்ரீம் மெஷின்

வீட்டிலேயேச் சுவையான ஐஸ்க்ரீமைச்செய்து கொள்ள உத வும் சிறிய இயந்திரம், அரைமணி நேரத்தில் ஐஸ்க்ரீம் தயாரித்துவிட உதவுகிறது. ரூ 1505 விலை கொண்ட இதனை அகமதா பாதைச் சேர்ந்த, கன்வீனியன்ஸ் மார்க்கெடிங் பிரைவேட் லிமிடெட், அறிமுகப்படுத்தியுள்ளது.



### பைலட் எலக்ட்ரிக் ஸ்ப்ரே கன்

பெயிண்ட் அடிப்பது, மருந்து அடிப்பது என்று எந்த வேலையை யும் நாமாகவே எளிதில் செய்து முடிக்க உதவும் வகையில் வடி வமைக்கப்பட்டுள்ளது. பம்பா யைச் சேர்ந்த மானிக் ரேடியேட் டர்ஸ் பிரைவேட் லிமிடெட் நிறு வனம் இதை அறிமுகம் செய் துள்ளது.



# உயரும் ஆட்டோமொபைல் துறைப் பங்குகள்

கடந்த இரண்டு ஆண்டுகளாக மந்த நிலையில் இருந்து வந்த ஆட்டோமொபைல் இண்டஸ்ட்ரீ, மீண்டும் தலைதூக்க ஆரம்பித்துள்ளது. இந் நிலைக்குக் காரணம் இரண்டு சக்கர வாகனங்களுக்கானப் பெருத்த ஆதரவே ஆகும். இரண்டு சக்கர வாகனங்களை உற்பத்திச் செய்யும் நிறுவனங்களின் செயல்பாடு 1994 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் சிறந்த முறையில் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. இதனால் இந் நிறுவனங்களின் பங்குகளின் விலை உயரவும் ஆரம்பித்துள்ளது. உதாரணமாகப் பஜாஜ் ஆட்டோவின் பங்குகள் இரட்டிப்பாக உயர்ந்துள்ளன. ஹீரோ ஹோண்டாவின் பங்கு 100 ரூபாயிலிருந்து 225 ரூபாயாகவும், மெஜஸ்டிக் ஆட்டோ ரூ. 36 இல் இருந்து ரூ. 195 ஆகவும், கைனடிக் ஹோண்டா ரூ. 40 இல் இருந்து ரூ. 133 ஆகவும் உயர்ந்துள்ளன. டி.வி.எஸ். சூசுகி ரூ. 17 ஆக இருந்தபோதும் வாங்கத் தயங்கியவர்கள் தற்போது ரூ. 80 வரை கொடுத்து வாங்க முன் வந்துள்ளனர்.



ஸ்கூட்டர்களின் உற்பத்தி முந்தைய ஆண்டை (3.20 லட்சம்) விட 3.72 லட்சத்திற்கு உயர்ந்துள்ளது மொபெட்களின் உற்பத்தி 6.87 லட்சத்திலிருந்து 7.87 லட்சமாகவும், மோட்டார் சைக்கிளின் உற்பத்தி 2.18 லட்சத்திலிருந்து 2.33 லட்சமாகவும் கூடியுள்ளது. மொத்தத்தில் இரண்டு சக்கர வாகனங்களின் உற்பத்தி கடந்த ஆண்டைவிட இவ்வாண்டு சுமார் 15 சதவிகிதம் கூடியுள்ளது.

ஜப்பானுக்கு அடுத்தபடியாக இரண்டு சக்கர வாகனங்களின் உற்பத்தியில் இரண்டாம் இடத்திலுள்ள இந்தியா, அடுத்த ஆண்டிற்குள் முதலிடத்தைப் பிடிக்கக் கூடியச் சாத்தியக்கூறுகள் தெரிகின்றன. ஆனால் உலகின் பிற நாடுகளுடன் ஒப்பிடும் போது இந்தியாவில் இரண்டு சக்கர வாகனங்களை உபயோகிப்பவர்கள் மிகக் குறைவே. தைவானில் ஆயிரத்தில் 270 பேர்களும், ஜப்பானில் 145 பேர்களும், இந்தியாவில் 4 பேர்களும் மட்டுமே உபயோகிக்கின்றனர். ஆனால் இந்த நிலைமை வெகு விரைவிலேயே மாறவிருக்கிறது. எனவே இரண்டு சக்கர வாகனங்களை உற்பத்திச் செய்யும் நிறுவனப் பங்குகளில் முதலீடு செய்வது சிறந்த பலனைக் கொடுக்கக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

புதிய முயற்சியில் ஸ்ரீராம் நிறுவனம்

# ஸ்ரீராம் ஷாப்



ஸ்ரீராம் க்ரூப் நிறுவனங்களைப் பற்றி, நமது வாசகர்களுக்கு அறிமுகம் தேவை இல்லை. சீட்டுகள், குத்தகை ஒப்பந்த நிதி உதவி, லாரிகளுக்கான கடனுதவி எனப் பல வழிகளில் பணியாற்றி வரும் சிறந்த நிறுவனம் ஸ்ரீராம் க்ரூப் நிறுவனம்!

இந்நிறுவனம், நவம்பர் 11 ஆம் தேதியிலிருந்து மேலும், ஒரு புதிய திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளது. இத்திட்டத்தின்படி, வீட்டு உபயோகப் பொருட்களைத் தயாரிப்பதில் சிறந்து விளங்கும் பி.பி.எல். நிறுவனத்துடன் இணைந்து, சுலபத் தவணை முறைக் கடன் திட்டங்களின் மூலம் பொதுமக்களுக்கு 'பி.பி.எல்.' வீட்டு உபயோகச் சாதனங்களைப் பெற வழி வகுத்துள்ளது.

இதற்காகச் சென்னை நகரில் மூன்று கடைகளும், கோயமுத்தூர், திருச்சி ஆகிய நகரங்களில் தலா ஒரு கடையையும், 'ஸ்ரீராம ஷாப்' எனும் பெயரில் திறந்துள்ளது. சென்னையில் 24பார்கிட் சாலை, சென்னை-17, அடையாறு- கோகுல் ஹோம்ஸ், நெ. 2, சர்தார் படேல் ரோடு, சென்னை-20. -138, பூந்த மல்லி நெடுஞ்சாலை, கீழ்ப்பாக்கம், சென்னை-10 ஆகிய விலாசங்களிலும்-

ஆர். கே. எம். காம்ப்ளெக்ஸ் 1, ராஜா அண்ணாமலைச் செட்டியார் சாலை, சாயி பாபா காலனி, கோயமுத்தூர்-641 011- என்ற விலாசத்திலும்-

101 A சாலை ரோடு, உறையூர், திருச்சி - 3 என்ற விலாசத்திலும்- இந்த ஷாப்புகள் திறக்கப்பட்டுள்ளன.

இந்த ஷாப்புகளின் மூலம் பி.பி.எல். தயாரிக்கும் தரமான வீட்டு உபயோகச் சாதனங்களின் அனைத்து மாடல்களையும் சுலபத் தவணை முறையில் பெறலாம். மற்ற தவணை முறைக் கடைகளைவிட, இந்த ஷாப்புகளில் அதற்கான வட்டி விகிதம் சற்றுக் குறைவாகவே இருக்கும் என்பதோடு, விற்பனைக்குப் பிறகு, தேவைப்படும் சர்வீஸ்கள் மிகச் சீரிய முறையில் பி.பி.எல்லின் நேரடிக் கண்காணிப்புடன் இருக்கும் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

ஆரம்பத்தில் இந்த ஷாப்புகளின் மூலம் பி.பி.எல். நிறுவனச் சாதனங்களை விற்பதை நோக்கமாகக் கொண்ட போதிலும் போகப் போக இந்த ஷாப்புகளின் மூலம், பங்குச் சந்தை சேவை மற்றும், இதர அனைத்து முதலீடுகளுக்கான சேவைகளையும், பெறக் கூடிய வகையில் உருவாக்கப்படவிருக்கிறது என்று- 'ஸ்ரீராம் க்ரூப்' நிறுவனத்தின் சேர்மன் திரு. தியாகராஜன் குறிப்பிட்டுள்ளார்.

வீட்டு உபயோகச் சாதனங்களைத் தயாரிக்கும் மற்ற நிறுவனங்களுடன் ஒப்பிடும் போது, பி.பி.எல். நிறுவனத்தின் தயாரிப்புகள் தரமானவையாகவும், நியாயமான விலை கொண்டனவாகவும் இருப்பதோடு, விற்பனைக்குப் பிந்தைய சேவையும் சிறப்பாக உள்ளது. மேலும், இவர்களுடைய எதிர்காலத் திட்டங்கள் மிகப் பிரகாசமாக இருப்பதால் தான், ஸ்ரீராம் - பி.பி.எல். நிறுவனத்துடன் ஆன இந்தக் கூட்டு முயற்சியை மேற்கொண்டுள்ளது, என்றும் அவர் குறிப்பிட்டார்.

இப்புதிய திட்டம் தற்போது, தமிழ்நாட்டில் மட்டுமே, அறிமுகப்படுத்தப்பட்டாலும், எதிர்காலத்தில் மேலும் சில மாநிலங்களிலும் நிறுவப்பட இருக்கிறது. இந்த வருடத்திற்குள் 15-20 ஷாப்புகள் தமிழ்நாட்டில் மட்டுமே நிறுவுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படவிருக்கின்றன.

இத்திட்டத்திற்காக, வாடிக்கையாளர்களுக்கு அளிக்கப்படும் கடன் தொகை 'ஸ்ரீராம் க்ரூப்' நிறுவனத்திலிருந்து பெறுவது மிகச் சொற்பமாக இருப்பினும், தேசிய வங்கிகளிடமிருந்து ரூ. 5 கோடியும் இதர நிதி நிறுவனங்களிடமிருந்து ரூ. 10 கோடியும் பெறவிருக்கிறது.

பொருள்கள் வாங்குவதை ஒரு சுமையாகக் கருதாமல், சுலபமாக - சந்தோஷமாக வாங்கக் கூடிய அளவிற்கு இந்த ஷாப்புகளின் சேவை இருப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது 'ஸ்ரீராம் க்ரூப்!'

இந்தியாவில் சீட்டு நிதி நிறுவனங்களுள் முன்னணியில் நிற்கிறது குரூப் நிறுவனங்களுள் ஒன்றான ஸ்ரீராம் சிட்ஸ் இன்ஸ்வெஸ்ட்மெண்ட்ஸ் லிட்.,

—பவானி

# நீங்களும் வாங்கலாமே!

## சாங்கி பாலியெஸ்டர்ஸ் :

நிறுவப்பட்டு இரண்டு வருடங்களே ஆனபோதும், பாலியெஸ்டர் இழை உற்பத்தியில், இந்தியாவில் இரண்டாவது இடத்தைப் பிடித்துள்ளது இந்நிறுவனம். ரூ.33 கோடி செலவில், ஆண்டொன்றுக்கு 25000 டன்கள் உற்பத்தித் திறன் கொண்ட இதன் தொழிற்சாலையை, அடுத்த ஓராண்டிற்குள் ஆண்டொன்றுக்கு 55000 டன்கள் உற்பத்தித் திறன் கொண்டதாக, விரிவு படுத்தத் திட்டமிட்டு வருகிறது. இதற்காகும் செலவு ரூ.180 கோடியாக இருக்கும். 1994-95 ஆம் ஆண்டில் இதன் விற்பனை ரூ.500 கோடியாகவும், மொத்த லாபம், ரூ.60 கோடியாகவும், ஒரு பங்கு சம்பாத்தியம் ரூ.10 ஆகவும் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. தற்போது ரூ.52 விலையாக இருக்கும். இதன் பங்கு ரூ.85 வரை உயரக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## சுராஜ் டைமண்ட்ஸ் :

இந்திய நவரத்தினங்கள் மற்றும் பொன் நகைகளின் ஏற்றுமதி மிகவும் உயர்ந்து வருகிறது. 1992-93ல் இவைகளின் ஏற்றுமதி ரூ.5320 கோடியை எட்டியுள்ளது. எனவே, இந்தக் காலக்கட்டத்தில் டைமண்ட் கம்பெனிகளில் முதலீடு செய்வது சிறந்தது. அதுவும், அமெரிக்காவிற்கு பெருமளவில் ஏற்றுமதி செய்யும் நிறுவனங்கள் மேலும் சிறப்பானது. சுராஜ் டைமண்ட்ஸ் அத்தகைய ஒரு நிறுவனம். 1992-93ல் இதன் விற்பனை ரூ.266.16 கோடியாகவும், மொத்த லாபம் ரூ.21.02 கோடியாகவும், ஒரு பங்கு சம்பாத்தியம் ரூ.20.10 ஆகவும் இருக்கிறது. இதன் பங்கு விலை ரூ.250 ஆகவும் ஒரு பங்கு சம்பாத்தியம் ரூ.25 ஆகவும் உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது.



## அட்லாஸ் சைக்கிள் :

நாற்பது வருடங்களுக்கும் மேலான இந்நிறுவனம் சைக்கிள் உற்பத்தியில் இந்திய அளவில் இரண்டாம் இடத்தையும் உலகளவில் மூன்றாம் இடத்தையும் பிடித்துள்ளது. ஆண்டொன்றுக்கு 31 லட்சம் சைக்கிள்களை உற்பத்தி செய்யும் இந்நிறுவனம், மார்க்கெட்டில் 23 சதவிகித இடத்தையும் பிடித்துள்ளது. இந்த ஆண்டு முடிவுக்குள், இதன் விற்றுமுதல் ரூ.164 கோடியாகவும், மொத்த லாபம் ரூ.4.1 கோடியாகவும் இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. தற்போது ரூ.240 ஆக இருக்கும். இதன் பங்கு விலை ரூ.375ஐ எட்டக்கூடும் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

## பிரியதர்சினி ஸ்பின்னிங் :

ஆந்திராவில் மேதக் மாநிலத்தில் நூற்பாலையைக் கொண்டுள்ள இந்நிறுவனம், 40,9320 கதிர்களைக் கொண்டு செயற்கை இழையைத் தயாரித்து வருகிறது. இந்நிறுவனம் மார்ச் 92ல் உரிமை மற்றும் பொது வெளியீடாக, முற்றிலும் பங்குகளாக மாற்றக்கூடிய கடன் பத்திரங்களை வெளியிட்டு மூலதனம் திரட்டி ஆந்திர மாநிலத்தில் 'பர்காசம்' எனும் இடத்தில் தனது இரண்டாவது நூற்பாலையை நிறுவியது. இவ்வாலை 19,440 கதிர்களைக் கொண்டுள்ளது. 1992-93ல் இதன் விற்பனை ரூ.58.94 கோடியாகவும், மொத்த லாபம் ரூ.2.49 கோடியாகவும் இருக்கிறது. தற்போது இதன் பங்கு விலை ரூ.43 ஆக இருப்பது, ரூ.65 வரை உயரக் கூடும்.

## ஜே.சி. எலக்ட்ரானிக்ஸ்:

ஆண்டொன்றுக்கு 5 லட்சம் கலர் பிக்சர் டியூப்களையும், 3 லட்சம் கருப்பு-வெள்ளை பிக்சர் டியூப்களையும் உற்பத்தி செய்யும் திறன் கொண்ட ஜே.சி. எலக்ட்ரானிக்ஸின் செயலாக்கம் மிகச் சிறந்த முறையில் உள்ளது. ரூ.29 ஆக இருக்கும் இந்நிறுவனப் பங்கின் விலை ரூ.45 வரை உயரலாம்.

## பசிஃபிக் கிரானைட்ஸ்

நூறு சதவிகித ஏற்றுமதித் திறன் கொண்ட இந்நிறுவனத்தின் உற்பத்தித் திறன் ஆண்டொன்றுக்கு 1,20,000 சதுர மீட்டர் பளபளப்பாக்கப்பட்ட கிரானைட் ஆக உள்ளது. மார்ச் 92ல் வியாபார உற்பத்தி தொடங்கியதிலிருந்து இதன் செயலாக்கம் நன்கு உள்ளது. 1992-93 ஆம் ஆண்டில் இதன் விற்பனை ரூ.12.97 கோடி ஆகவும், லாபம் ரூ.4.87 கோடி யாகவும் உள்ளது. தற்போது ரூ.100 விலையுள்ள இதன் பங்கு, ரூ.150 வரை ஏறக்கூடும்.

## IFCI -ன் புதிய வெளியீடு:

இருபது வருடங்களுக்கும் மேலாக பல தொழில் துறைகளுக்கும் நிதி நிறுவனமாகச் செயல்பட்டுவரும் இந்நிறுவனம், 25 சதவிகித டிவிடெண்ட் வழங்கியுள்ளது. பம்பாயைச் சேர்ந்த இந்நிறுவனத்திற்கு நாடு முழுவதும் கிளைகள் உள்ளன. இந்நிறுவனம் ரூ.10ஐ முகமதிப்பாகவும், ரூ.25ஐ பிரீமியமாகவும் கொண்ட ரூ.19கோடி மதிப்புள்ள பங்குகளைப் பொதுமக்களுக்கு வெளியிடவிருக்கிறது. இவ்வெளியீடு டிசம்பர் 7 ஆம் தேதி துவங்கவிருக்கிறது.

சென்னை 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா. ஆசிரியர்: கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு,